வில்லி பாரதம்

பாகம் ௫ ஐந்து

ஸ்ரீ

# வில்லிபுத்தூரார் பாரதம்

ஐந்தாவது

## உத்தியோக பருவம்

சே. கிருஷ்ணமாசாரியரும்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரும்

இயற்றிய

உரையுடன்

வை. மு. நரசிம்மன்

**வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யர் கம்பெனி**

17, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு,

திருவல்லிக்கேணி, சென்னை-5.

விசுவாவசு ஹு பங்குனீ } 1966 விலை ரூ. 4—50

# முகவுரை.

அருந்தமிழபிமானிகட்கு ஓர் விண்ணப்பம்.

கம்பராமாயணம் முழுவதற்கும் உரைகண்டு வெளியிட்டபின், வில்லிபுத்தூரார் பாரதம் முழுவதுக்கும் உரைகாண வேணுமென்று அடியேன் திருத்தமப்பனார் ஸ்ரீ வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகளைப் பலர் ஊக்கியதுண்டு. அவர்களின் விருப்பப்படியே அவர் தமது ஆசிரியன்மாரான ஸ்ரீமாந். வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிகள், ஸ்ரீமாந். சே. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமிகள் இருவரும் முந்துறவே பெரும்பாலான பகுதிகட்கு உரைகண்டிருப்பவற்றைக்கொண்டும் அவர்கள் உரையெழுதாது விட்ட பகுதிகளுக்குத் தாமே உரைகண்டும் வில்லிபாரதம் பத்துப்பருவங்களுக்கும் நல்லுரையைப்பூர்த்தி செய்தனர்.

அவற்றுள் ஐந்தாவதாகிய உத்தியோகபருவம் இன்றுன்று வெளியிடப்படுகிறது. செய்யுண்முதற்குறிப்பகராதி, அபிதானசூசிகையகராதி, அரும்பதவகராதி முதலியன சேர்க்கப்பட்டு இவ்வுரை மேலும் மிளிர்கிறது. இந்தப்பருவத்தின் உயிர்நிலையாகிய கிருட்டிணன் தூது சருக்கம் அனைவரும் விரும்பிக் கற்கின்றதொன்றாகலின், விழுமிய உரை திறம்பட எழுதப்பட்டுள்ளமை பிரசித்தம். இந்தப் புதிய பதிப்பு அச்சாகுங்கால் பிழைகளைக் களைந்து மேற்குறித்த சேர்க்கைகளைக் கூட்டிச் செம்மையுறவாக்கி உதவியவர், விவேகாநந்தர் கல்லூரித் தலைமைத்தமிழ்ப்பேராசிரியரான ஸ்ரீ. உ. வே. வித்வான். C. ஜெகந்நாதாசார்யர், M. A. (Hist), M. A. (Tamil), L. T., P.O.L., Dip. Geog. ஆவர். இவருடன் ஈகை ஸ்ரீ. E. S. வரதாசார்யர், B. A. அவர்களும் உதவி புரிந்தார். இவ்விருவர்திறத்தும் நன்றியறிதலுடையேன்.

இந்நூல் செவ்வன் முற்றுப்பெறத் தோன்றாத்துணையாயிருந்த தேர்கடவிய பெருமானின் கனைகழல்களை அநவரதமும் வழுத்துவேன்.

இங்ஙனம்,

விசுவாவசு ௵
பங்குனி ௴
1966

வை. மு. நரசிம்மன்.

# பொருளடக்கம்

முகவுரை

பக்கம்

முதலாவது

# உலூகன் தூது சருக்கம்

உலூகனது தூதின் செய்கையைக் கூறுகின்றதொரு நூற் கூறுபாடென்பது பொருள். உலூகன் - பாண்டவர்களால் துரி யோதனனிடம் அனுப்பப்பட்டானொரு அந்தணன். தூது - இங்கே தூதுசென்ற செய்தி. சருக்கம் - முடிபு அல்லது படைப்பு என்று பொருள்: அது சங்கேதத்தால், இந்நூலில் ஒரு பெரிய வகுப்பினுட்பட்ட சிறிய பாகத்தைக் குறிக்கும். இம்மூன்று சொற்கள் தொடர்ந்ததொரு தொடர்மொழியிலுள்ள இரண்டு புணர்ச்சியுள் முன்னது ஆறும்வேற்றுமைத்தொகையும், பின்னது இரண்டனுருபும் பயனுமுடன் தொக்கதொகையுமாம். இனி, பின் னதைத் தூதினது சம்பந்தமான சருக்கம் எனவிரித்து, விஷயமாக வுடைமையாகிய சம்பந்தப்பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகை யென்றுங் கொள்ளலாம். பாண்டவர்கள் அஜ்ஞாதவாசங் கழிந்தபின் கண்ணன் முதலானோரோடு ஆலோசித்து முடிவுசெய்து உலூகனென்னும் அந்தணனை திருதராட்டிரனிடம் தூதனுப்ப, அவ்வேதியன் சென்று செய்திகூறி, அங்குத் துரியோதனன் துரோணர் முதலிய பெரியோர்கள் பலர் சொல்லவுங் கேளாமல் கர்ணன் முதலிய சிற்றினத்தவரின் கருத்தையே முக்கியமாகத் தழுவிச் சிறிதும் இராச்சியங்கொடுக்கமாட்டேனென்று சொல்லி விட்டதைக் கேட்டுவந்து பாண்டவர்களுக்குங் கண்ணபிரானுக்குந் தெரிவித்த செய்தியை விளக்கும் பாகமென்பது திரண்ட பொரு ளாம். 'தூதுச் சருக்கம்' என்ற பாடத்துக்கு - இரண்டாம் வேற்று மைத்தொகையாதலின், சிறப்பு விதியால் வலிமிக்கதென்க: மேல் 'சஞ்சயன் தூது சருக்கம்' 'கிருஷ்ணன் தூதுசருக்கம்' என்பவற் றிற்கும் இங்ஙனமே காண்க.

## கடவுள் வணக்கம்.

1. மீனமாகியுங்கமடமதாகியுமேருவையெடுக்குந்தா
ளேனமாகியுநரவரியாகியுமெண்ணருங்குறளாயுங்
கூனல்வாய்மழுத்தரித்தகோவாகியுமரக்கரைக்கொலைசெய்த
வானநாயகனாகியுநின்றமான்மலரடிமறவேனே.

(இ - ள்.) மீனம் ஆகியும்-மீன்வடிவமாயும், கமடமது ஆகியும்-ஆமை வடிவமாகியும், மேருவை எடுக்கும் தாள் ஏனம் ஆகியும் - மகா மேருமலையைத் தாங்கவல்ல பாதத்தை யுடைய பன்றிவடிவ மாயும், நர அரி ஆகியும் - நரசிங்க வடிவமாயும், எண் அரு குறள் ஆயும் - (இத்தன்மைத்தென்று) நினைத்தற்கும் அருமையான வாமனவடிவமாகியும், கூனல் வாய் மழு தரித்த கோ ஆகியும் - வளைவான நுனியையுடைய கோடாலிப்படையை (க் கையில்) ஏந்திய பரசுராம வடிவமாயும், அரக்கரை கொலைசெய்த வானம் நாயகன்

ஆகியும் - (இராவணன் முதலிய) இராக்கதர்களை வதைத்தல் செய்தருளின முத்தியுலகத்துக்குத் தலைவனான ஸ்ரீராமவடிவமாயும், நின்ற - (திருவவதாரஞ்செய்து) நின்ற, மால் - திருமாலாகிய கண்ண பிரானது, மலர் அடி - தாமரைமலர்போன்ற திருவடிகளை, மறவேன்- (எப்பொழுதும்) மறக்கமாட்டேன்; (எ - று.)—ஏ-தேற்றம்; ஈற்றசை யெனினும் அமையும்.

"தேவுடைய மீனமா யாமையா யேனமா யரியாய்க் குறளாய் மூவுருவி லிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான்" "மச்சா கூர், மா கோலா சிங்கா வாமா ராமா ரா, மா கோபாலா மாவாவாய்" என்றபடி மத்ஸ்யம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், பரசு ராமன், தசரதராமன், பலராமன், கிருஷ்ணன், கல்கி என்ற திருமா லின் பத்துத்திருவவதாரங்களுள், கிருஷ்ணாவதாரமூர்த்தி இந் நூலின் வரலாறு நிகழ்ந்த காலத்தில் எழுந்தருளியுள்ளதனால் அவரை 'நின்றமால்' என விசேடிய முகத்தாற்கூறி, பலராமாவ தாரம் கிருஷ்ணாவதாரத்தில் ஐக்கியமாதலாலும் கற்கியவதாரம் இனி நிகழ்வதாதலாலும், அவ்விரண்டையும் நீக்கி, மற்றை யேழு நிகழ்ந்த திருவவதாரங்களையே இங்கு முறைபடக் கூறினார்.

முன்னொருகாலத்தில் பிரமதேவன் கண்துயில்கையில், சோமக னென்னும் அசுரன் வேதங்களையெல்லாங்கவர்ந்துகொண்டு கடலி னுள் மறைந்து செல்ல, பிரமன்முதலிய தேவர்களின் வேண்டு கோளால் திருமால் மத்ஸ்யமாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனைத் தேடிப் பிடித்துக்கொன்று, அவன் கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக் கொணர்ந்து, அன்னவடிவமாய் அவற்றைப் பிரமனுக்கு உபதேசித்தருளினர். துருவாசமுனிவரது சாபத்தாற் கடலினுட்புக்கு ஒளித்த சுவர்க்கலோகத்துச் செல்வங்களையெல் லாம் மீளவும் பெறும்பொருட்டு இந்திரன் முதலிய தேவர்கள் திருமாலின் நியமனப்படி அசுரர்களுடன் கூடிச்சென்று மந்தர மலையை மத்தாக நாட்டி வாசுகி யென்னும் பெரும்பாம்பைக் கடை கயிறுகப் பூட்டித் திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது, அம்மந்தரகிரி கடலினுள்ளே சென்று அழுந்திவிடாதபடி எம்பெருமான் மகாகூர்ம ரூபத்தைத்தரித்து அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தார்: அன்றியும், உலகங்களின் கீழ் நின்று அவற்றை எப்பொழுதுந் தாங்கியருளும் ஆதிகூர்மமூர்த்தியும் உண்டு. ஒரு காலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டி எடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப் போன இரணியாக்கனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால் மகாவராகரூபமாகத் திருவவதரித்துக்கொன்று பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினர். எல்லாமலைகளிலும் பெரிய மகாமேருகிரி சிலம்பி னிடத்துச் சிறிய பருக்கைக் கற்போலத் தன்குளம்பினிடத்து மிகச் சிறுபொருளாகுமாறு கொண்ட பெரிய பன்றித்திருவடிவமாதலால், 'மேருவையெடுக்குந் தாளேனம்' என்றது; "சிலம்பினிடைச் சிறு பரல்போற் பெரியமேரு திருக்குளம்பிற் கணகணப்பத் திருவாகாரங், குலுங்க நிலமடந்தைதனை யிடந்துபுல்கிக்கோட்டிடை வைத்தருளிய

வெங்கோமான்கண்டீர்" என்னும் பெரிய திருமொழியையும், "பாருக் கரந்தை தவிர்ப்பதற்காகப் பழிப்பில்பெருஞ் சீருற்றசெங்கட் கரும் பன்றியாகித்திருக்குளம்பின் மேருக் கணகணமாத் தலைநாளில் விநோதிப்பரே" என்னுந் திருவரங்கத்துமாலையையும், "குரமத்ய கதோ யஸ்யமேரு: கணகணாயதே" என்னும் வடநூல் மேற்கோளையுங் காண்க. தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும், ஐம் பெரும் பூதங்களாலும், ஆயுதங்களாலும் தனக்கு மரணமில்லாதபடி அளவற்ற வரங்களைப்பெற்றுத் தேவர் முதலிய யாவர்க்குங்கொடுமை யியற்றித் தன்னையேகடவுளாக வணங்கச்செய்த (இரணியாக் கனது உடன்பிறந்தவனான) இரணியன் தன்புத்திரனும் மகாவிஷ்ணுபக்தனுமான பிரகலாதாழ்வான் தன்பெயர்சொல்லிக் கல்விகற்காமல் நாராயணநாமஞ் சொல்லி வரவே அவனைக்கொல்லு தற்கு என்ன உபாயஞ்செய்தும் அவன் பகவானருளால் இறந் திலனாக இரணியன் மகனை நோக்கி, 'நீ சொல்லும் நாராயண னென்பான் எங்கு உளன்? காட்டாய்' என்ன, அப்பிள்ளை "சாணினுமுளனோர் தண்மையணு வினைச்சதகூறிட்ட கோணினு முளன் மாமேருக்குன்றிலுமுளன் இந்நின்ற தூணிலுமுளன் நீ சொன்ன சொல்லிலுமுளன் இத்தன்மை, காணுதிவிரைவின்" என்று சொல்ல உடனே இரணியன் நன்றென்று சினந்து தூணைப் புடைக்க, அதில் நின்றும் பகவான் நரசிங்கவுருவமாய்த் தோன்றித் திருக்கைந் நகங்களால் அவன் மார்பைப் பிளந்து அழித்திட்டார். மகாபலியென்னும் அசுரராசன் தன்வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையுஞ்சயித்து மூவுலகங்களையும் தன்வசப்படுத்தி அரசாண்டு செருக்குக்கொண்டிருந்தபொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்துவேண்ட, அவர் குள்ள வடிவமான வாமனவதார மெடுத்துக் காசியப முனிவருக்கு அதிதி தேவியினிடந் தோன்றின பிராமணப் பிரமசாரியாகி வேள்வியியற்றி யாவர்க்கும்வேண்டிய அனைத்தையுங் கொடுத்துவந்த அப்பலியினிடஞ் சென்று, தவஞ் செய்தற்குத் தன் காலடியால் மூவடி மண்வேண்டி அது கொடுத்தற் கிசைந்து அவன் தத்தஞ்செய்த நீரைக் கையிலேற்று, உடனே திரிவிக்கிரமனாகி ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியால் மண்ணை யும் ஓரடியால் விண்ணையும் அளந்து மற்றோரடியால் அவனையும் பாதாளத்தி லழுத்தி அடக்கினார். உலகத்திலே எவரும் அழிப்பவ ரில்லாமையால் கொழுத்துத்திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத் திரியவம்சங்கள் பலவற்றை நாசஞ் செய்யும்பொருட்டு நாராயண மூர்த்தி ஜமதக்கினிமுனிவரது மனைவியான ரேணுகையிடம் ராமனாய்த் திருவவதரித்து, பரசு என்னுங் கோடாலிப்படையையே ஆயுதமாகக் கொண்டு தமதுதந்தையின் ஓமதேனுவைக்கவர்ந்து அவரைக் கொன்றிட்டது காரணமாகக் கார்த்தவீரியார்ச்சுனனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அழித்து, அதனாலேயே க்ஷத்திரியவமிசம் முழுவதன்மேலுங் கோபாவேசங்கொண்டு, உலகத்திலுள்ள அரசர் கள் பலரையும் இருபத்தொருதலைமுறை பொருது ஒழித்திட்டார். ஒருகாலத்தில் தேவர்களெல்லோரும் இராவணன் முதலிய ராக்ஷசர் களின்உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் ஸ்ரீமகாவிஷ்ணுவைச் சரண

மடைந்துவேண்ட, அவர் தசரதசக்கரவர்த்திகுமாரனாய் ஸ்ரீராமனாகத் திருவவதரித்து அரக்கர்கள் அனைவரையும் அழித்து நல்லோரைக் காத்தருளினர். துஷ்ட அசுரர்கள் பலரும் கெட்ட அரசர்கள் பலரும் ஒருங்கேகூடி வசிப்பதாலுண்டான பூமிபாரத்தை நிவிருத்தி செய்யும்பொருட்டு அப்பூமிதேவியின் பிரார்த்தனையின்படி தேவர்கள் வேண்டுகோளால் திருமால் வசுதேவகுமாரராய்ப் பலராம கிருஷ்ணர்களாகத் திருவவதரித்தார். கலியுகத்தின் இறுதியில் முழுவதுமழிகிற தருமத்தை நிலைநிறுத்தும்பொருட்டு மகிமையுடையதொரு குதிரையின் வடிவமாகத்தோன்றுவது, கற்கியவதாரம். காத்தற்றொழிற்குரியகடவுளான திருமால் பயிரைவளர்த்தற்குக்களையைப்பறித்தல்போலச் சிஷ்டர்களைப்பரிபாலனஞ்செய்யும் பொருட்டுத் துஷ்டர்களை நிக்கிரகிப்பதற்காக அருளாற் கொள்ளும் அவதாரங்கள் இவையென்றும், இவை மற்றையோரது பிறப்புக்கள் போலக் கருமசம்பந்தத்தால் உண்டாகுமவையன்றி, பகவானது இச்சாமாத்திரத்தால் வேண்டியபொழுது உதிப்பவையென்றும் உணர்க. இப்பத்தவதாரங்களுள் பரசுராம பலராமாவதாரங்கள் ஆவேசாவதாரமென்றும், மற்றவை அம்சாவதாரமென்றும், அவற்றுள்ளும் ஸ்ரீ ராமகிருஷ்ணாவதாரங்கள் பூரணாவதாரமென்றும் கூறப்படும்.

மேரு - பூமி மத்தியில் இருக்கும் பொன்மயமானதொரு பெருமலை. நரவரி - மனிதவடிவமுஞ் சிங்கவடிவமுங் கலந்தமூர்த்தி. நரன் - மனிதன். அரி - சிங்கம் யானைமுதலிய பெரியவிலங்குகளையும் அரிக்கவல்லதென்று பொருள்; அரித்தல் - அழித்தல். 'மேருவை யெடுக்குந்தாள்' என அடைமொழிகொடுத்து வராகவதாரத்தை விசேடித்தது மற்றைய அவதாரங்கள்போல உலகத்தாரது துன்பத்தைத்தீர்ப்பதன்றி உலகத்துக்கே நேர்ந்ததுன்பத்தைத் தீர்ப்பதும், அடியவர்களைக் காத்தலேயன்றி அடியவர்களுள் தலைவியான நிலமகளைக்காத்தலுமாகிய அவ்வவதாரத்தினது சிறப்புத் தோன்றவென்க. இரணியன் தனித்தனி மனிதர்களாலும் மிருகங்களாலும் தேவர்களாலுஞ் சாவதில்லையென்று வரம்பெற்றிருந்ததனால், அவனைக் கொல்லுதற்கு, மனிதத்தன்மையும் விலங்கின் தன்மையும் கலந்ததொருவடிவத்தை யெடுத்தருளினர். மிகச்சிறிய வாமன ரூபம் மிகப்பெரிய திரிவிக்கிரமரூபத்தை உள்ளடக்கிக் கொண்டிருந்த உயர்வுதோன்ற 'எண்ணருங்குறள்' எனப்பட்டது; "ஆலமர்வித்தினருங்குறளானான்" என்றும், "அற்புதனற்புதரே யறியுந்தன், சிற்பதமொப்பதொர்மெய்க்கொடு சென்றான்" என்றுங் கம்பர் கூறியவாறுங்காண்க. கம்பர் "பய்ந்தவர்களுமிகழ்குறளன்" எனக்கூறியதற்கேற்ப எண்ணருங்குறள் என்பதற்கு - (வடிவத்தின் சிறுமையைப்பார்த்தவர் எவரும்) நன்கு மதித்தற்குக் கூடாத வாமனனென்றும் பொருள் கூறலாம். திரிகரணங்களுள் மற்றையவற்றின் செய்கைக்குக் காரணமான மனத்தினால் எண்ணுதற்கருமைகூறவே, வாயாற்சொல்லுதற்கும் கண்ணால் நோக்குதற்கும் அருமை தானே பெறப்படும். குறள் - சிறுமை, பண்புப்பெயர்; குறு - பகுதி, அள் - விகுதி, இது - பண்பாகுபெயராய், சிறுமை

யுடைய வடிவத்தைக் குறிக்கும். இரண்டடியளவுள்ளதற்குக் குறளென்றும், மூன்றடியுயாமுள்ளதற்குச் சிந்தென்றும் பெயர்; அதனை யாப்பிலக்கணத்தில், இரண்டடிவெண்பாவைக் குறள் வெண்பாவென்றும், மூன்றடிவெண்பாவைச் சிந்தியல்வெண்பாவென்றும், இருசீரடியைக்குறளடியென்றும், முச்சீரடியைச் சிந்தடியென்றும் கூறுவதுகொண்டும் உணர்க. கூன் நல் எனப்பிரித்து, வளைவையும் நன்மையையும் உடைய எனவும் பொருள்கொள்ளலாம். நன்மை - அழகும் துஷ்டநிக்கிரகமும். வாய் - வெட்டுமிடம். பரசுராமர் பிராமணகுமாரராயிருந்தும் தமது தந்தையின் கருப்போற்பத்திக்குக் காரணமான சருவினது [சரு - ஒருவகைச் சோறு] பேதத்தால் கோபம் தாபம் போர் வெற்றி பலம் பராக்கிரமம் முதலிய க்ஷத்திரியாசாரமுடையவரான தன்மை தோன்ற, அவரை 'கோ' என்ற பெயராற்கூறினர்; இனி, அரசர்களனைவரையும் வேரறுத்து அவர்களுடைய இராஜ்யத்தையெல்லாம் தனதாக்கிக்கொண்டு, பின்பு காசியபமுனிவருக்குத் தானஞ்செய்த பெருந்தகைமைபற்றி, 'கோ' என்றதாகவுங் கொள்ளலாம். அரக்கர் - படைத்தற்கடவுளான பிரமதேவர், ஆதியில் நீரைப்படைத்து அதனைக்காக்கும் பொருட்டுச் சிலபூதங்களைச் சிருஷ்டித்து 'நீங்கள் இதனைக்காக்கக் கடவீர்' என்றபோது, அவர்களிற்பசியுற்ற சிலர் "ஜக்ஷாம் [உண்ணக் கடவேம்]" என்றும், பசியுறாத சிலர் 'ரக்ஷாம் [காக்கக்கடவேம்]' என்றுங்கூற, அதுகேட்டு அக்கடவுள், ஜக்ஷாம் என்றவர் யக்ஷராகக் கடவரென்றும், ரக்ஷாம் என்றவர் ராக்ஷஸராகக்கடவரென்றும் அருளிச் செய்ததனால், யக்ஷர் என்று ஒரு குலத்தாரும், ராக்ஷஸர் என்று மற்றொரு குலத்தாருமாயினரென நூல்கள் கூறும். இவர்கள் பின்பு அளவில்லாத வலிமைபெற்று மிகச்செருக்குற்று உலகத்துக்குத் துன்பமியற்றுபவரானார்கள். "அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி" என்றபடி இராமபிரான் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுகையில் அயோத்தியிலுள்ள சகல பிராணிகளுக்கும் ஸ்ரீ வைகுண்டமளித்த மகிமை விளங்க, அவரை "வானநாயகன்' என்றார். வான் என்ற ஆகாயத்தின் பெயர் - இங்கே இலக்கணையாய், எல்லா வுலகங்களுக்கும் மேலுள்ள மோக்ஷ சமமான ஸாந்தாநிகமென்னும் லோகத்தை உணர்த்திற்று; இனி, வான் - இடவாகுபெயராய், வானநாயகன் - பரமபதத்திலுள்ள நித்தியசூரிகளுக்குத் தலைவனென்றுமாம். இனி, வானநாயகன் - தேவாதிதேவனுமாம்; உபேந்திர மூர்த்தியுமாம். வானம் - மூலப்பிரகிருதியுமாம். நின்ற என்றது - தான் அவதரித்த காரியமாகிய பூமிபாரநிவிருத்தியை நிறைவேற்றும்பொருட்டுப் பாண்டவ சகாயனாய்க் காலம்நோக்கியிருந்த தன்மையை விளக்கும். மால் - பெருமை; அதனை யுடையவனுக்குப் பண்பாகுபெயர்; இனி, மால் - விருப்பமாய், அதனை எல்லா உயிர்களிடத்திலுங் கொண்டவனும், எல்லாராலும் விரும்பத்தக்கவனுமானவனென்றும் பொருளுரைக்கலாம். திருவடிகளுக்குத் தாமரைமலர் உவமை, செம்மை, மென்மை, குளிர்ச்சியழகுகளுக்கென்க. "அன்று நான்பிறந்திலேன்" என்றாற்போல, 'மறவேனே' என்றார்.

இங்ஙனம், கொடியவர்களைக்கொன்று அடியவர்களையளித் தருளுகிற ஆதிதேவன் விஷயமான வணக்கங் கூறியதனால், கவி தாம் எடுத்துக்கொண்ட காரியம் இடையூறின்றி இனிதுமுடியு மென்பது கருத்து. இங்கு ஆகி என்றும், ஆய் என்றும் வந்தவை - அந்தந்த வடிவமாகப் பிறந்தபொழுது தமது தெய்வத்தன்மை மேலிடாமல், அந்தந்தப் பிறப்புக்கு உரிய உருவம் குணம் செயல் களைக் கொண்டுள்ளமையைத் தெரிவிக்குமென்பது, சம்பிரதாயம்; இதனைத் திருவிருத்தத்தில் "உயிரளிப்பான்" "எந்நின்றயோனியு மாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா" என்றவிடத்து 'ஆய்' என்ற தன் வியாக்கியானங்களைக்கொண்டு அறிக. இப்பாட்டுக்கு 'நான்' என்னுந் தோன்றா எழுவாய் வருவிக்க. இப்பாட்டு மொழிமாற்று முதலியன இன்மையால், யாற்றுநீர்ப்பொருள்கோள். "மீனமை கோல நெடுநரசிங்கமாகி நிலம்விரகாலளந்த குறளாய், ஆறுது சீறுமழு வல்வில்லும் வெல்லுமுனையலமுற்ற செங்கையவராய், வானடர் வந்துதொழமண்ணுடர்யாவரையுமடிவிக்க வந்தவடிவாய், நானவிதங்கொள் பரியாளாகி நின்றருளு நாராயணாயநமவே" என்பர், மேல் சல்லியபருவத்தும்.

இதுமுதல் இச்சருக்கம் முடிகிறவரையில் இருபத்தொரு கவிகள்-பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், ஆறுஞ்சீர் மாங்காய்ச் சீரும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (1)

## தூதனுப்பித் துரியோதனன் கருத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று கண்ணன் கூறுதல்.

2. வல்லினாலவன்கொண்டமண்மீளவும்வல்லினாற்கொளலன்றி
வில்லினாலமர்மலைந்துகொள்ளுதுமெனல்வேந்துநீதியதன்றால்
சொல்லினாலொருதூதினிலறியலாஞ்சுயோதனனினைவென்று
கல்லினால்வருகன்முகில்விலக்கியகரியமாமுகில்சொன்னான்.

(இ - ள்.) 'வல்லினால் - சூதாட்டத்தினால், அவன் - துரியோ தனன், கொண்ட - கவர்ந்துகொண்ட, மண் - இராச்சியத்தை, மீளவும் - மறுபடியும், வல்லினால்-அச்சூதாட்டத்தினாலே, கொளல் அன்றி - சயித்துப்பெறுவது தகுதியேயல்லாமல், வில்லினால் - வில்லைக்கொண்டு, அமர் மலைந்து - போரைச்செய்து, கொள்ளுதும்- பெறுவோம், எனல்-என்று நிச்சயிப்பது, வேந்து நீதியது அன்று- அரச நீதியாகாது; சுயோதனன் நினைவு-(இவ்விஷயத்தில்) துரியோ தனனது எண்ணத்தை, சொல்லினால் - (அவன் சொல்லுஞ்) சொல்லின்மூலமாய், ஒரு தூதினில் - ஒரு தூதனைக் கொண்டு, அறியலாம் - தெரிந்துகொள்ளலாம், என்று—, வரு கல் முகில் கல்லினால் விலக்கிய கரிய மா முகில் - (இந்திரனேவலால்) வந்த கல் மழையை (க் கோவர்த்தனமென்னும்) மலையினால் தடுத்த கருநிற முடைய அழகிய மேகம்போன்ற கண்ணன், சொன்னான் - (அப்

பொழுது ஆலோசனைச் சபையில் எல்லா அரசர்களையும் நோக்கிக்) கூறியருளினன்; (எ - று.)—ஆல் - ஈற்றசை; ஆதலால் என்பதன் விகாரமெனினும் அமையும்.

வல்-சூதாடுகருவி; இங்கே இலக்கணையாய் ஆட்டத்தைக் குறித்தது. அவன் - சேய்மைச்சுட்டு. வேந்து - அரசத்தன்மை; இங்கே வேந்தனுக்குப் பண்பாகுபெயர்; அரசு அமைச்சு தூது என்பனவும் இங்ஙனமேநிற்கும். நீதி-நல்வழியடைவிப்பதென்று காரணப்பொருள். ஸுயோதநன் என்னும் பெயர்க்கு நல்ல [வெற்றியைத் தருகிற] போரையுடையவனென்று பொருள் [ஸு - நன்மை, யோதநம் - யுத்தம்]. என்று சொன்னன் என்றும், கல்லினல் விலக்கிய என்றும் இயையும். கல் - மலைக்கு இலக்கணை. முகில் என்னுஞ்சொல் இரண்டனுள், முன்னது மழைக்கு முதலாகுபெயரும், பின்னது கண்ணனுக்கு உவமவாகுபெயருமாம். முகில் என்பது - சொல்லால் பால்பகா அஃறிணையாயினும், பொருளால் உயர்திணையாண்பாலாதலால் சொன்னன் என்பதைக் கொண்டது. திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங் கூடி மழையின்பொருட்டாக இந்திரனை யாராதித்தற்கென்று சமைத்த சோற்றைக் கண்ணன் அவனுக்கிடாதபடி விலக்கிக் கோவர்த்தன மலைக்கு இடச்சொல்லி, தானே ஒருதேவதாரூபமாய் அமுது செய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தகம் முதலிய மேகங்களை ஏவிக் கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையருக்கும் இடைச்சியருக்குந் தீங்கு தரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது, பெய்வித்தபொழுது கண்ணன் கோவர்த்தனமென்னும் மலையையெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் இடையூறு சிறிதுமின்றிக் காத்தருளினனென்பது - இதிற்குறித்த கதை. கரியமாமுகில் சொன்னன் என்பதற்கு- "சேயோன் வீழ்வுவிழைவோடு சிறந்தபின்னர் மாயோனுமாயாக்குருமைந்தரு மன்னர்யாரும், போயோதை வீதி யுபலாவி புகுந்து தங்கள், ஆரோதனத்துக்குறு நீர்மைக ளாயலுற்றார்" எனக் கீழ்க் கதைத் தொடர்ச்சியை யுணர்க. பாண்டவ சகாயனை கண்ணன் இங்ஙனம் முதலிற்சொன்னது, அங்குள்ள மற்றையோரது கருத்து வெளியாதற்பொருட்டென்க. 'கன்முகில் கல்லினல் விலக்கிய முகில்' என ஒரு சாதுரியந்தோன்றக் கவி கூறினர். கண்ணனுக்கு முகில் உவமை - கருமைக்கு மாத்திரமேயன்றிக் கைம்மாறு கருதாது கருணைமழை பொழிதற்கும் தண்மையுடைமைக்குமாம். (2)

### துரியோதனனிடத்தினின்று இராச்சியத்தை மீட்டல் தகாதென்று பலராமன் கூறுதல்.

3. உரியவம்புவியுதிட்டிரன் றனையவனுற்றவர் பலர்காணப்
பரியவன்பெருஞ்சூதினல்வென்று பல்லாண்டடிப்படவாண்டான்
திரியவன்புடன்வாங்குதற்கெண்ணுமித்தீமதிகொடிதென்று
கரியவன்புகல்கட்டுரைகேட்டபின்காமபாலனுஞ்சொன்னன்.

(இ - ள்.) கரியவன் - கரிய திருநிறமுடைய கண்ணபிரான், புகல்- (இவ்வாறு) சொன்ன, கட்டு உரை - உறுதிமொழியை, கேட்டபின் - செவியுற்றவுடனே, காமபாலனும் - பலராமனும், பரியவன் - பெருமையையுடைய துரியோதனன், அவண் உற்றவர் பலர் காண - அவ்விடத்தில் [சபா மண்டபத்தில்] வந்துள்ளவர் பலரும் (பிரதியக்ஷமாகப்) பார்க்கையில், யுதிட்டிரன்தனை - தருமபுத்திரனை, பெரு சூதினால் - பெரியசூதாட்டத்தினால், வென்று - சயித்து, உரிய அம் புவி- (அத்தருமனுக்கு) உரியதாயிருந்த அழகிய பூமியை, பல் ஆண்டு - அநேக வருஷ காலம், அடிப்பட - தன்கீழ்ப்பட்டு அமைய, ஆண்டான் - அரசாண்டான்; (அங்ஙனம் அவன் வென்று பலநாள் ஆண்ட இராச்சியத்தை), திரிய - மீளவும், வன்புடன் - பலாத்காரமாக, வாங்குதற்கு - பறித்துக் கொள்வதற்கு, எண்ணும் - நினைக்கிற, இ தீ மதி - இந்தக் கெட்ட அறிவு, கொடிது - கொடுமையுடையது, என்று சொன்னான்—; (எ - று.)

துரியோதனன் பலராமனிடங் கதாயுதப் பயிற்சியை விசேஷமாகக்கற்றுக் கொண்டது பற்றிப் பலராமன் அவனிடம் மிகுந்த பக்ஷபாதமுடையவனாதலாலும், தனது தங்கையான சுபத்திரையைத் துரியோதனனுக்கும், தனது மகளான வற்சலையைத் துரியோதனன் மகனான லக்ஷணகுமாரனுக்கும் மணஞ் செய்விக்கக் கருதியிருந்த எண்ணம் நிறைவேறாதபடி கிருஷ்ணன் சுபத்திரையை அருச்சுனனுக்கும் வற்சலையை அருச்சுனகுமாரனான அபிமன்யுவுக்கும் தந்திரமாக மணஞ் செய்து வைத்ததாலும் பலராமனுக்குப் பழைய அபிமானம் துரியோதனனிடத்தில் நீங்காதிருந்ததனாலும் இங்ஙனங் கூறினனென அறிக. எந்த வகையிலோ ஒருகால் தருமனைவென்று துரியோதனனாற் கொள்ளப்பட்டதாதலாலும், பதின்மூன்று வருஷமாய் விட்டதனாற் காலதோஷம் வந்து விட்டதனாலும், மறுபடி அந்த இராச்சியத்தைப் பாண்டவர் எவ்விதத்திலாயினும் பெற முயல்வது நீதியன்று என்பது, இதன் கருத்து. திருதராஷ்டிரன், பாண்டு என்ற இரண்டு ஞாதிகளுள் மூத்தவனாதலால் இராச்சியத்துக்கு உரியவனான திருதராஷ்டிரனது புத்திரனாதல் பற்றியும், துரியோதனனுக்கு அந்த இராச்சியத்தில் அதிக பாத்தியதை இருக்கிறதென்ற கருத்து, 'பரியவன்' என்ற சொல்லில் தொனிக்குமாறுங் காண்க. "அவனும் முடிக்குரியான் தோன்றல் அவனுக்கு, இவனும் இடுகவற்றால் தோற்றான் - அவனும் அரசிழவா வண்ணம் அறிந்துரைமி னென்றான், வரைகெழுதோள் மன்னன் மதித்து" என்பது, பாரத வெண்பா.

பூமிக்கு அழகு, பலவளங்களையு முடைமை. யுதிட்டிரன் - போரில் (பின் வாங்காமல்) நிலைநிற்பவனென்று பொருள். இப்பெயர், இவனது பல பராக்கிரமங்களை விளக்கும். அவண், அண் - இடப்பொருள் காட்டும் விகுதி. பரியவன் வென்று—வெல்லுதல் வினைக்குத் துரியோதனன் - ஏவுதற்கருத்தா; துரியோதனனது கருத்தின்படி அவன் மாமனான சகுனி சூதாடித் தருமனை வென்றனனாதலால், சகுனியின் பக்கத்துக்கு வேண்டிய பந்தயம் வைத்தவன் துரியோதனனாதலால், அவ்வாட்டத்தில் வெல்லப்படும் பொரு

னுக்குத் துரியோதனனே உரியவனாதல் பற்றி, 'பரியவன் பெருஞ் சூதினால் வென்று' என்றதாகவும் கொள்ளலாம். இனி, வெல் வித்து என்பது பிறவினை விகுதி தொக்கு நின்ற தென்றுவது, வென்று என்பது பிறவினைப் பொருளில் வந்த தன்வினையென் றுவது கொள்ளுதலும் ஒன்று. பலராமனுக்குச் சூதாட்டத்தில் மிகப் பிரியமாதலால் அவன், 'பெருஞ் சூது' என்றான்; அவனுக்குச் சூதில் மிக விருப்பமாதலைப் பாகவதம், விஷ்ணுபுராணம் முதலிய வற்றில் விளங்கக் காண்க. சூதில் வென்றதையே பிரதானமான வெற்றியாக இங்கு எடுத்துக் கூறிச் சாதித்தற்கு இதுவும் ஒரு காரணம். இனி, போர் முதலிய எவ்வகை முயற்சிகளாலும் பெறு தற்கரிய இராச்சியம் முதலிய பொருள்களை எளிதிற் பெறுவித்த மகிமையைக் கருதி 'பெருஞ்சூது' என்றாருமாம். பரிய வல் எனப் பிரித்து, மிக வலிய எனப் பொருள் கொண்டு, சூதுக்கு அடை மொழி யாக்கினும் அமையும். அப்பொழுது, ஆண்டான் என்பதற்கு துரியோதனனென்றே எழுவாய் வருவித்தல் வேண்டும். துரியோ தனனைப் பரியவனென்றது மிக்க வலியுடைமையாலும், பெருங்குடும்ப முடைமையாலும், பெருஞ்சேனையுடைமையாலும், பெருஞ்செல்வமும் பேரிராச்சியமு முடைமையாலும், 'ராஜராஜன்' என அரசர்கள் பலர்க்குப் பெரியவனாதலாலும், பாண்டவர்களுள் அருச்சுனன் முதலிய மூவரினும் பிராயத்தில் மூத்தவனாதலாலு மென்க. பரியவன் - பருமையென்னும் பண்படியாப் பிறந்த பெயர். இனி, பரிய்வன் - குதிரைச் சேனையையுடையானென்றுமாம். பரி-குதிரை; (பாரங்களைப்) பரிப்பது; பரித்தல் - சுமத்தல்; கருத்தாப்பொருள் விகுதி புணர்ந்துகெட்ட காரணப்பெயர். அடிப்பட - வசப்பட, பழக என்றுமாம். திரிய - (அவன்) மனம் மாறுபட என்பாருமுளர். அன்புடன் எனப் பிரித்து, ஆசையோடு எனவுமாம். கரியவன் - கிருஷ்ணனென்னும் வடசொல்லின் பொருள் கொண்ட பெயர். காமபாலனென்னும் பெயர்க்கு - (அடியார்களது) வேண்டுகோளைப் பாதுகாப்பவனென்று பொருள்; காமம் - விருப்பம். உம்மை -கீழ்க் கவியில் 'கரியமாமுகில் சொன்னான்' என்றதனை நோக்குதலால், இறந்தது தழுவிய எச்சம்; இங்ஙனம் எச்சவும்மை கதைத்தொடர்ச் சியை விளக்கப் பலவிடத்தும் வரும். துரியோதனன் தருமனைச் சூதில் இரகசியமாக வென்றானில்லை யென்பார், 'பலர்காண' என்றார். அவண் உற்றவர் பலர்-பீஷ்மர் துரோணர் கிருபர் அசுவத்தாமன் முதலிய பெரியோர்களும், கர்ணன் முதலிய ஒத்த அரசர்களும், பிறரு மென்க. புகல் கட்டுரை - இறந்தகால வினைத்தொகை, உற்று அவர் எனப் பதம் பிரித்து, அப்பாண்டவர்களும் மற்றும் பலரும் அவ்விடத்திற் பொருந்தியிருந்து காணவென்றுங் கொள்ள லாம். பலர் காண ஆண்டான் என்றலுமொன்று. பலராமன் - கிருஷ்ணனது தமையன்; விஷ்ணுவின் எட்டாம் அவதாரம்; வசுதேவருடைய பத்தினிகளுள் தேவகியின் வயிற்றில் ஆறு மாதமும் உரோகிணியின் வயிற்றில் ஆறுமாதமும் இருந்து பிறந் தவன்; இவனை ஆதிசேஷனது அம்சமென்றும் நூல்கள் கூறும்.

## சாத்தகி பலராமனைப் பழித்தல்.

4. இளையசாத்தகிதமையனை மிகக்கரிதிதயமாயினுநாவில்
விளையுமாற்றநின்றிருவடிவினுமிகவெள்ளையாகியதென்ன
வுளையவார்த்தைகளுரைத்தனனுரைத்தலுமுற்றவரிடுக்கண்கள்
களையுமாப்புயலிருவருமொழிமினுங்கட்டுரையினியென்றான்.

(இ - ள்.) (உடனே), இளைய சாத்தகி - (பலராமகிருஷ்ணர்களுக்கு) இளையவனான சாத்தகியென்பவன், தமையனை - (தனது பெரிய) தமையனான பலராமனை, (நோக்கி), 'இதயம் மிக கரிது ஆயினும் - (உனது) மனம் மிகவும் கருமையுடையதானாலும், நாவில் விளையும் மாற்றம்-(உனது)நாக்கினிடத்து உண்டாகின்ற வார்த்தை, நின் திருவடிவினும் மிக வெள்ளை ஆகியது - உனது அழகிய உடம்பைக்காட்டிலும் மிகவெளுத்ததாயிருந்தது,' என்ன-என்று. உளைய-(பலராமனது மனம்) வருந்தும்படி, வார்த்தைகள் உரைத்தனன் - பரிகாச வார்த்தைகளைச் சொன்னான்; உரைத்தலும் - (அங்ஙனஞ்) சொன்னவளவிலே, உற்றவர் இடுக்கண்கள் களையும் மா புயல் - (தன்னைச்) சரணமடைந்தவரது துன்பங்களை ஒழித்தருளுகிற சிறந்த காளமேகம் போன்ற கண்ணபிரான், இனி இருவரும் நும் கட்டுரை ஒழிமின் என்றான் - 'இப்பொழுது நீங்களிரண்டு பேரும் உங்களுடைய உறுதிமொழிகளை ஒழியுங்கள்' என்று சொன்னான்; (எ-று.)

'இதயம் கரிதாயினும் மாற்றம் வடிவினும் வெள்ளையாகியது' என்றதனால் மனமாகிய அகமும், மொழிமெய்களாகிய புறமும் ஒற்றுமைப்பட்டிராது வேறுபட்டிருப்பதெனப் பழித்தவாறு. திரிகரணங்கள் பேதப்பட்டிருப்பது உத்தமர்க்கு உரியதன்று. இதயம் மிகக்கரிது என்பதற்கு - மனம் மிகக் களங்கமுடையதென்றும், நீதி அநீதிகளை நடுவுநிலைமையாக உணரும் தெளிவு இல்லாத குற்றமுடையதென்றும், கருத்து. கருமை யென்பது இருளென்ற பொருளாய் அறியாமை மேல் நிற்பதை "புறங்குன்றி கண்டனையரேனும் அகங்குன்றி, மூக்கிற்கரியா ருடைத்து" எனத் திருக்குறளிலுங் காண்க. மாற்றம் மிக வெள்ளையாகியது என்றது - சொல் சிறிதும் சாரமற்றது என்று கருத்து. வெண்மை என்பது - சாரமின்மை யென்னும் பொருளதாய் அறிவு முதிராமை மேல் நிற்பதை "வெண்மை யெனப்படுவதியாதெனி னொண்மை, யுடையம்யா மென்னுஞ் செருக்கு" எனத் திருக்குறளிலும், "வெள்ளைமை கலந்த நோக்கின்" எனச் சீவகசிந்தாமணியிலும், "வெண்மையில்லை பல்கேள்வி மேவலால்" "வெள்ளியையாதல் விளம்பினை" எனக் கம்பராமாயணத்திலும் காண்க. இங்கே, உற்றவரிடுக்கண்கள் களையும் மாப்புயல் என்றது - தன்னைச் சேர்ந்த பாண்டவர்களின் ஆபத்துக்களைக் கண்ணன் பலவகையிலுந் தீர்த்தருளுதலால்; இனி, உற்றவர் என்ற சொல்லுக்கு உறவினரென்ற பொருளும் உள்ளதாதலால், தனது தமையன் தம்பிமார்களுக்கு நேர்ந்த மனஸ்தாபத்தை மத்தியஸ்தராய் நடுநின்று தீர்த்தல்பற்றி, 'உற்றவரிடுக்கண்கள் களையு மாப்புயல்' என்றதெனவுங் கொள்ளலாம். உம் கட்டுரை என்றும் பிரிக்கலாம்.

யதுகுலத்தரசர்களுள் வசுதேவனுக்கு உடன் பிறந்த முறையாகிய சத்தியகனது குமாரனும், பிராயத்தில் பலராமகிருஷ்ணர்களினும் இளையவனுமாதலால், சாத்தகி இவர்க்குத் தம்பி முறையாவன். இவன் கண்ணனிடம் மிகுந்த அன்புகொண்டு அவனது கருத்துக்குச் சிறிதும் மாறுபடாது நடப்பவன். அன்றியும், இவன் அருச்சுனனிடம் வில்வித்தையைக் கற்றறிந்த மாணாக்கனாதலால், ஆசிரியனாகிய அருச்சுனனிடத்தும் மற்றைப் பாண்டவரிடத்தும் நீதிமுறைவழுவாது அன்பு கொண்டொழுகுபவன்; ஆதலால், பாண்டவர்க்கு விரோதமாக அக்கிரமமாகப் பேசின பலராமன் தனக்குத் தமையனாயினும், மனம் பொறாது அவன்பால் மாறுபாடு கொண்டான். 'நின் திருவடிவினும் மிக வெள்ளையாகியது' என்றது, பலராமன் வெண்ணிறமுடையவனாதலால்; அதனை "மடல் சேர்கழுநீர்மலர் வாட்கணுரோணி செம்மல், சுடர்கான் மதியிற் சுடர்கின்ற தொர்தோற்றமேய, அடலேறனையான்" என்ற பாகவதத்தாலும் அறிக.

சாத்தகி - சத்யகனது குமாரனென்று பொருள்; பிள்ளைப் பொருளில் வந்த தத்திதாந்தநாமம். மாற்றம் என்பதற்கு நாவில் விளையும் என்ற அவசியமில்லாத அடைமொழி கொடுத்தது- பலராமனது நாக்கு பாண்டவர்திறத்து நடுவுநிலைமையுள்ள சொற் பயின்றறியாததெனை இழிவை விளக்கும்; அவர் பாண்டவர்க்கு மாறாகவே பேசுவதைப் பாரத கதையிற் பலவிடத்துங் காணலாம். தம்பிக்குத் தமையனிடம் இயல்பாக இருக்கவேண்டிய மரியாதை பற்றி, 'திருவடிவு' என்றார்; இனி இதுவும் பரிகாசத்தைப்பற்றிய தாகலாம். உரைத்தலும் - உம் ஈற்று இறந்தகாலவினையெச்சம். பிற்பொருளோடு விரைவுங் குறித்தது. துன்பம் நேர்கிறகாலத்துக் கண் இடுங்குதலால், இடுக்கண் என்பது காரணப்பெயராம்; இடுங்கு கண் என்பது இடுக்கண் என விகாரப்பட்டதென்க. 'இடுக்கண் என்றது - மலர்ந்த நோக்கம் இன்றி மையல் நோக்கம்பட வரும் இரக்கம்' என்றார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். இடுக்கண்களாவன - தன்னைப்பற்றி வருவனவும், பிற வுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவும் என மூவகையான் வரும் பிறவித் துன்பங்கள். களையும்-எதிர்காலப் பெயரெச்சம், காலங்குறியாது தன்மை குறித்தது. இருவர் என்றது - சாத்தகியையும் பலராமனையும். இருவரும் ஒழிமின்-இடவழுவமைதி. 'இனி' எதிர்காலங் குறியாமல், இப்பொழுதென்னும் பொருள் தந்தது: "இனி நினைந் திரக்கமாகின்று" என புறநானூற்றிலும், "எண்கையாய்கேளினி" எனக் கலித்தொகையிலும் போல. என்று சொன்னனென்ற பொருளில் என்றனன என வருதலைச் சொல்லெச்ச மென்பர். "வாய்ப்பறையாகவும் நாக்கடிப்பாகவும்" வார்த்தை பேசப்படுதலால், 'நாவில் விளையும் மாற்றம்' எனப்பட்டது; "யாகாவாராயினு நாகாக்க" "ஆறாதே, நாவினாற் சுட்டவடு" என்பனகாண்க. 'வார்த்தைகள்" எனவேண்டாது கூறியது அவற்றின் பழிப்புடைமையை உணர்த்தும். 'வெண்மையதாகியது' என்னவேண்டியதை 'வெள்ளையாகியது' என்றது, பண்பியைப் பண்பாகக் கூறின உபசாரவழக்கு.

வெண்மையென்பது வடிவத்துக்கு - நிறத்திலும், சொல்லுக்கு - அறியாமையிலும் சென்றனவாயினும், பண்பால் ஒத்தலால், சிலேடையாக வெள்ளையென ஒரு சொல்லாற் கூறினர். புயல் - உவமவாகுபெயர். (4)

கண்ணன் உலூகனைத் தூதுபோகச்சொல்லித் தான் துவாரகை சேர்தல்.

5. பேருலூகமும்பிணையுநல்கியபெரும்பிறப்புடைப்பரித்திண்டேர்க்
காருலூகலநிகரடிக்களிறுடைக்கண்ணிலாவரசன்பாற்
சீருலூகனைத்தூதுசென்றிவர்மனஞ்செப்பிமீள்கெனப்போக்கி
யோருலூகலமுடன்றவழ்ந்தவன்றனதூர்புகுந்தனனன்றே.

(இ - ள்.) (என்று சொன்னபின்), ஓர் உலூகலமுடன் தவழ்ந்தவன் - ஒரு உரலுடனே தவழ்ந்துசென்றவனாகிய கண்ணன்,—சீர் உலூகனை - சிறப்புடைய உலூகனென்னும் அந்தணனை நோக்கி, பேர் - பிரசித்திபெற்ற, உலூகமும் - உயர்ந்தசாதி யாண்குதிரையும், பிணையும் - (அந்தச்சாதிப்) பெண் குதிரையும், நல்கிய - (சேர்ந்து) பெற்ற, பெரு பிறப்பு - சிறந்த உற்பத்தி முறைமையை, உடை - உடைய, பரி - குதிரைகளையும், திண் தேர் - வலியதேர்களையும், கார் உலூகலம் நிகர் அடி களிறு - பெரிய உரலையொத்த கால்களையுடைய யானைகளையும், உடை - உடைய, கண் இலா அரசன்பால் - பிறவிக் குருடனான திருதராஷ்டிர மகாராசனிடத்து, தூதுசென்று - (நீ) தூதுபோய், இவர் மனம் செப்பி - இப்பாண்டவரது கருத்தைக் கூறி, மீள்க - (அவன் கருத்தை யுணர்ந்து) திரும்பிவருவாயாக,' என - என்று சொல்லி, போக்கி - (அவ்வுலூகனை அத்தினபுரத்துக்குச்) செல்ல உடன்படுத்தி, தனது ஊர் புகுந்தனன் - தனது துவாரகாபுரியை அடைந்தான்; (எ-று.)—அன்று, ஏ - ஈற்றசை; - தேற்றப்பொருளில் வருதலு முண்டு: அப்பொழுதே யென்றுமாம்.

சதுரங்கசேனைகளுள் பிரதானமான குதிரை தேர் யானை என்ற மூன்றையுங் கூறி, அவற்றை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்தும் வீரரையும் காலாட்சேனையையும் உபலட்சணத்தாற் பெறவைத்தார். ஒரு பிராணி சிறந்ததாயிருத்தற்குத் தந்தைமரபு தாய்மரபு என்ற இரண்டும் முக்கிய காரணமாதலால் 'பேருலூகமும் பிணையு நல்கிய பெரும்பிறப்புடைப் பரி' என்றார். உலூகமென்பதற்கு சந்தர்ப்பத்திற்கு ஏற்ப இங்கு ஆண்குதிரை யெனப் பொருள் கொள்ளப்பட்டது. பிணை - பெண்பாற்பெயர்: இது குதிரைக்குரியதாதலை "புல்வாய்நவ்வியுழையேகவரி, சொல்வாய்நாடிற் பிணையெனப்படுமே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்து 'சொல்வாய் நாடின்' என்ற மிகையாற் கொள்ளவேண்டும். 'பிணை - பிணைவது எனக் காரணப்பெயர்; பிணைதல் - சேர்தல்; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்டது; இச்சொல்லின் பொருளை 'பிணையென்னுஞ் சொற்பொருளினை உண்மைநோக்கின் பிரியாது பிணையும் பிற சாதிக்கும் சேவற்குஞ்செல்லும்' என்றதனாலும் அறிக. கருமையென்னுஞ் சொல் - கருப்பு நிறத்தையே யன்றி, பெருமைக் குணத்

தையும் உணர்த்தும்; "கருந்தனம் கைத்தலத்தவுய்த்துச் சொரிந்திட்டு" என்னுமிடத்துக் காண்க. இனி, கார் என்பதற்கு - கரிய வென்று உரைத்து, களிறு என்பதனோடு சேர்த்தலுமாம்; பண்பாகு பெயராய், மேகம் போன்ற எனினும் அமையும். யானைக்காலுக்கு உரல் உவமை வடிவத்துக்கும் வலிமைக்குமென்க; 'உரற்கால்யானை" என்றார் முன்னோரும். களிறு - ஆண்பாற்பெயர்; இது யானைக்கு உரியதாதலை "வேழக்குரித்தேவிதந்து களிறென்றல்" என்ற தொல்காப்பியத்தா லறிக; மதக்களிப்பையுடையதெனக் காரணப்பெயர்; இது, பால்பகா அஃறிணைப்பெயராதலால், று - ஒன்றன்பால் விகுதி யாகாது: இதன் பெண்பால் - பிடி.

விசித்திரவீரியன் மனைவியருள் ஒருத்தியான அம்பிகை, கணவனை யிழந்த பின்பு சந்ததிவிருத்தியின்பொருட்டு மாமியார் கட்டளைப்படி மைத்துனனோடு சேர்கையில், கூச்சத்தால் கண்விழியாதிருந்ததனால் அவளிடம் திருதராஷ்டிரன் பிறவிக்குருடனாய்ப் பிறந்தான். இங்கே உலூகனுக்குச் சீர் என்றது, தூதுரைப்பார்க்கு இன்றியமையாத அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மை, உயர் குடிப்பிறத்தல், தானே வகுத்துச் சொல்லுமாற்றல் முதலிய குணங்களை. கண்ணன் குழந்தையாயிருக்குங் காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல திருவிளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த நந்தகோபர்மனைவியான யசோதை, ஒருநாள் கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினாற்கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலையிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவிலே எழுந்தருளியபொழுது, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்த வளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்னுங் குபேரபுத்திரரிருவரும் சாபந்தீர்ந்து சென்றனரென்பது கதை. உலூகனைத் தூதனுப்பின சமயத்தில் கண்ணனுக்கு இராசதானியான ஊர் மதுரையன்றித் துவாரகையாதலை, அடுத்த சருக்கத்தில் (3) "மாயவன் றன்னைக் கூட்ட வளர்மதிற்றுவரை சேர்ந்தான்" என்பதனாலு மறிக; தவழ்ந்தவன் உலூகனைக் கண்ணிலான்பால் தூதுசென்று மீள்கெனப்போக்கித் தனதூர்புகுந்தனனென்று அந்வயம். (5)

அங்குவந்துள்ள அரசர்கள் யாவரும் திருதராஷ்டிரன் இராச்சியம் தராவிட்டால் செய்தி தெரிவிக்கும்படி கூறித் தம்தம் நகரமடைதல்.

3\. இந்தவந்தண னீயிசைத்தனவெலாமியல்புடனினிதாக
வந்தவந்தனோடுரைத்தபினவனின தவனிதந்திலனாகின்
முந்தவந்தண்மாமுரசகேதன திருமுகம்வரவிடுகென்று
வந்தவந்தமன்னவர்களுந்தத்தமா நகரடைந்தனர்மன்னோ.

(இ - ள்.) அம் - அழகிய, தண்-குளிர்ந்த [செவிக்கினிய ஒலியையுடைய], மா - பெரிய, முரசம் - பேரிகைவாத்தியத்தின் வடிவத்தை யெழுதின, கேதன - துவசத்தையுடைய தருமபுத்திரனே! — இந்த அந்தணன் - (உலூகனென்னும்) இந்தப்பிராமணன், நீ இசைத்தன

எலாம் - நீ சொன்ன கருத்துக்களையெல்லாம், இயல்புடன் - (தூது செல்வோர்க்குரிய) முறைமையோடு, இனிது ஆக - இனிமையுடைய தாம்படி, அந்த அந்தணேடு - பிறவிக்குருடனுகிய அத்திருதராட்டிர னுடன், உரைத்தபின் - (சென்று) சொன்ன பின்பு, அவன் - அத் திருதராட்டிரன், நினது - உன்னுடைய, அவனி - இராச்சி யத்தை, தந்திலன் ஆகில் - கொடுத்திடானுனால், முந்த-முன்னதாக [உடனே என்றபடி], திருமுகம் - பத்திரிகையை, வரவிடுக - (எங்க ளுக்கு) வந்துசேரும்படி அனுப்புவாயாக, என்று - என்று சொல்லி, வந்த அந்த மன்னவர்களும் - (அஜ்ஞாதவாசங்கழிந்த செய்தியறிந்து பாண்டவர்களைப் பார்த்தற்கு) வந்த அவ்வரசர்களெல்லோரும், தம் தம் மாநகர் அடைந்தனர் - தங்கள் தங்களுக்கு உரிய பெரியபட்ட ணத்தைச் சேர்ந்தார்கள்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசைகள்.

அந்தணன் - அம் தண் அன் எனப்பிரித்து, அழகிய தண் மையை [அதாவது - அருளை] உடையவனென்றும்; அந்த அணவு அன் எனப்பிரித்து, வேதாந்தத்தையே பொருளென்று மேற் கொண்டு பார்ப்பவனென்றும் பொருள் கொள்ளலாம். இது - காரணங்கருதியவழி அருளையும் வேதாந்த ஞானத்தையுமுடைய பிறசாதியார்க்கும் பெயராகத்தக்கதாயினும், அங்ஙனமின்றி, இடு குறியளவாய் வேதியர்க்கே பெயராக வழங்குதலால், காரணவிடுகுறிப் பெயர்; இங்கே 'நீ இசைத்தனவெல்லாம்' என்றதனுல், கீழ்த்தருமன் தன் கருத்தை விளக்கிச் சில வார்த்தைகளை எல்லாவரசர்கள் முன் னும் வெளிப்படையாகக் கூறினனென அறிக; இது - கீழ்கண்ணன் வார்த்தையில் 'வில்லினலமர் மலைந்து கொள்ளுது மெனல்', 'இவர் மனம்' என்றவற்றுலும் பெறப்படும். இயல்பு என்றது, நூல்களிற் கூறப்பட்ட தூதவிலக்கணவமைதியை. "தூவாதநீக்கி நகச்சொல்லி, நன்றி பயப்பதாந் தூது" என்றபடி தான் வேற்றரசர்க்கு இன்னுத காரியங்களைச் சொல்லும்பொழுது வெய்ய சொற்களைநீக்கி இனிய சொற்களால் மன மகிழச்சொல்லிக் காரியத்தைத் தவறுமல்முடித் துத் தன் அரசனுக்கு நன்மைபயப்பது நல்ல தூதனது முறைமை யாதலால், 'இனிதாகவுரைத்தபின்' என்றுர். அந்தன் என்ற சொல்- புறமாகிய ஊனக்கண் இல்லை யென்ற மாத்திரத்தை யுணர்த்துவ தோடு, அகமாகிய ஞானக்கண்ணுமில்லை யென்ற கருத்தையுங் குறிப்பதாகக்கொள்ளலாம்; கீழ்க் கவியில் 'கண்ணிலாவரசன்' என்ற திலு மிது. அவனி - பூமி; (அரசர்களாற்) காத்தற்குரியதென்ற பொருள்பற்றிய காரணப்பெயர்; அவநம் - காத்தல். முந்த வரவிடு கென இயையும். தனது வெற்றிக்கு அடையாளமாகவும் மங்களகர மாகவும் முரசத்தின்வடிவத்தைத் தருமன் கொடியிற்கொண்டான் போலும். திருமுகம் என்ற சொல்லுக்கு - அழகிய முகமென்று பொருள்; இப்பெயரால் ஓலையைக் கூறுவது, மங்கலவழக்கென்பர்; வடமொழியில் 'ஸ்ரீமுகம்' என்று வழங்கும். வந்த வந்த எனவே கொண்டு அடுக்கை - மிகுதி பற்றிய தென்னலாம். வந்த வந்த மன்னவர்கள் என்றது, கீழ் வெளிப்பாட்டுச் சருக்கத்தில் "பாஞ்சாலர் போசகுலமன்னவர் பாண்டிவேந்தர், வாஞ்சாமனத்தின் வயமத் திரர் மாகதேயர், பூஞ்சாபவெற்றிக்கொடிக்கேரளர் பொன்னிநாடர்,

தாஞ்சால்புடனப்பதி வந்தனர் தானையோடும்" எனக் கூறப்பட்டவர் களே. அம்தண் என்பதற்கு - அழகையும் குளிர்ந்த கருணையையு முடைய என்று உரைத்து முரசகேதனனுக்கு அடைமொழியாக்கினும் அமையும். திருமுகம் என்றது - தனது சொல்லாற்றலால் யுதிட்டிர னிடம் அவ்வரசர்களுக்குள்ள மதிப்பை நன்கு விளக்கும். 'முந்தத் திருமுகம் வரவிடுக' என்றது, போரை விரைந்து செய்தற்பொருட்டுத் தாம் துணையாய் வருதற்கு என்க; தங்களைத் துரியோதனன் படைத் துணையாக விரும்புமுன் நீ பத்திரிகையனுப்பிவிடுவாய் என்ற பொரு ளும் இதில் ஏற்படும். அவன்-துரியோதனனென்றுங் கொள்ளலாம். அந்தம் மன்னவர் எனப் பிரித்தால், அழகையுடைய அரசரென்று பொருள்படும். (6)

## தருமன் உலூகனைத் தூதனுப்புதல்.

7. அரசர்போனபின்மால்பணிதவறுருதம்முனிதனைநோக்கி
முரசகேதனனீயெழுந்தருள்கெனமுனிவனைத்தொழுதேத்தி
விரைசெய்தார்புனைவீடுமனெந்தைமெய்விதுரன்வேதியர்கோவை
பரசினேமடியென்றுபின்னுரியசொற்பணித்தருளெனப்போந்தான்.

(இ - ள்.) அரசர் போன பின் - வந்த அரசர்கள்யாவரும் (தத்தம் நகருக்குச்) சென்றபின்பு, முரசகேதனன் - பேரிகைவடிவையெழுதிய கொடியையுடைய தருமபுத்திரன்,—மால் பணி தவறுருது-திருமாலின் திருவவதாரமான கண்ணபிரானது கட்டளையைப் பிழையாமல் [கட்டளைப்படியே என்றபடி], அ முனிதனை நோக்கி-அந்த உலூக முனிவனைப் பார்த்து, நீ எழுந்தருள்க என - 'நீ கருணையுடன் தூது செல்வாயாக' என்றுகூறி, முனிவனை - அவ்வுலூகனை, தொழுது - வணங்கி, ஏத்தி - துதித்து, 'விரைசெய் - நல்வாசனையை வீசுகிற, தார் - பூமாலையை, புனை - தரித்துள்ள, வீடுமன்-பீஷ்மனும், எந்தை - எமது பெரிய தந்தையான திருதராட்டிரனும், மெய் விதுரன் - சத்தியந்தவறாத விதுரனும், வேதியர் கோவை - அந்தணர்களுக்குத் தலைவனான துரோணாசாரியனும் என்னும் இவரை, அடி பரசினேம் என்று - திருவடிகளை நமஸ்கரித்தோம் என்று முதலிற்கூறி, பின்- அதன் பின்பு, உரிய சொல் பணித்தருள் - (நீ செல்லும் தூதகாரியத்துக்கு) உரிமையுடைய சொற்களைக் கூறியருள்வாய்,' என - என்று பிரார்த்திக்க,—போந்தான் (அம்முனிவன் புறப்பட்டுச்) சென்றான்; (எ - று.)

இப்பாட்டில், கண்ணன் முதலியோர் சென்றபின்பு தருமன் சிலகூறி வேண்டியபின் உலூகன் சென்றான் என்றதனால், கீழ் ஐந்தாங்கவியில் கண்ணன்செய்கையாக 'போக்கி' என்றதற்கு - செல்ல உடன்படுத்தியென்று கருத்துக் கொள்க. முனி - கடவுளை எப்பொழுதுந் தியானஞ் செய்பவன் அல்லது திரிகால ஞானமுடையவன் என்றுபொருள்; இனி, எல்லாப்பற்றுக்களையும் முனிந்தவன் [வெறுத்துவிட்டவன்] ஆதலால் முனி என்று தமிழ்வகையாற் காரணப்பொருள் கூறலாகாது. நோக்கி என என்று இயையும். எழுந்தருள்க என்றதில், அருள் என்றதுணைவினை மரியாதையை

விளக்கும். விரைசெய்தார் என்றது - அடையாளப்பூமாலையையும், வெற்றிப்பூமாலையையும். விரைசெய் தார்புனை என்ற அடைமொழியைப் பிறர்க்கும் கூட்டலாம். இரத்தினவாரத்தினும் வேறுபாடு தோன்ற, பூமாலை யென்றற்கு, 'விரைசெய்' என்ற அடைமொழி தாருக்குக் கொடுக்கப்பட்ட தென்க. திருதராஷ்டிரனுக்குப் பாண்டவர்களிடம் அன்பில்லையாயினும், இவர்களுக்கு அவனிடம் அன்புண்டென்பது, அவனைத் தருமன் இங்கு 'எந்தை' என்றதனால் விளங்கும். விதுரன், யமதருமராசனது அமிசமாவன். மற்றைப் பீஷ்மர் முதலியோரினும் பாண்டவர் பக்கல் விதுரனுக்கு மெய்யன்பு மிகுதியாதலின், 'மெய்விதுரன்' என்றது; "மெய்விதுரன் வீடணந் தான் வேறு" என்றார் பெருந்தேவனாரும். வேதத்தை ஓதுதல் ஓதுவித்தல் என்னும் இருதொழிலுக்கும் உரியவர் அந்தணரேயாதலால், வேதியரென்ற காரணப்பெயர் அவருக்கே வழங்கும். வேதியர்கோ என்ற சொல்லில், இரட்டுறமொழிதலால் கிருபாசாரியனையும் அசுவத்தாமனையும் அடக்கலாம். வீடுமன் முதலியன இறுதியிற் பலர்பாலால் முடியாததனால், இவற்றை உம்மைத் தொகையாகக் கொள்ளாமல், ஒவ்வொரு சொல்லினிறுதியிலும் ஐ என்ற இரண்டனுருபை எடுத்துக் கூட்டிப் பெயர்ச்செவ்வெண்ணாகக் கொள்க. பணித்தருள் - இதுபோல்வனவற்றை வினைப்பகுதி தானே ஓசைவேறுபாட்டால் ஏவலொருமைப் பொருளுணர்த்திற்றென்றும், ஏவலொருமைக்கு உரிய ஆய்விகுதி புணர்ந்து கெட்டதென்றும் இருவகையாகக் கூறுவர். பின் இரண்டடிகள், பெரியோர்களிடத்தில் தருமனுக்கு உள்ள விநயத்தைத் தெரிவிக்கும். இரண்டாமடியிலுள்ள முனிவனை யென்றது, சுட்டுமாத்திரையாய் நின்றது. அடி பரசினேம் என்பது - ஒருசொல்லாய், வணங்குதலெனப் பொருள்பட்டு, கோவையென்னும் இரண்டாம் வேற்றுமைக்கு முடிக்குஞ் சொல்லாம்; இனி கோவை - கோவினது என உரைத்து உருபுமயக்கமென்றாவது, ஐ அசையென்றாவது கொள்ளினும் அமையும்; கோவை அடியில் பரசினேம் என்றலுமொன்று. (7)

அத்தினபுரிக்கு வந்த உலூகமுனிவனை வணங்கித் துரியோதனன் ஆசனத்தில் இருத்துதல்.

8. போனநான்மறைப்புரோகிதனத்தினபுரிபுகுந்தெரிபைம்பொன்
மானவார்கழற்றிருதராட்டிரனெனுமன்னவைதனிலெய்த
ஞானமாமுனிவரவுகண்டெதிர்கொளாநயந்திருபதப்போற்றி
யானமாமணியாசனத்திருத்தினனரவவெங்கொடியோனே.

(இ - ள்.) போன - (அங்ஙனம்) தூதுசென்ற, நால்மறை புரோகிதன் - நான்குவேதங்களையுமறிந்த (விராடனது) புரோகிதனாகிய உலூகன், அத்தினபுரி புகுந்து - அஸ்தினபுரிபட்டணத்தை அடைந்து, எரி - விளங்குகிற, பைம்பொன் - பசும் பொன்னாலாகிய, மானம் வார் கழல் - பெருமைக்கு அடையாளமான நீண்ட வீரக்கழலையுடைய, திருதராட்டிரன் எனும் மன் - திருதராஷ்டிரனென்னும் அரசனது, அவை தனில் - சபையிலே, எய்த - சேர,—அரவம் வெம் கொடியோன் - பாம்பின் வடிவத்தை யெழுதின (பகைவர்க்குப்)

பயங்கரமான துவசத்தையுடைய துரியோதனன், ஞானம் மா முனி வரவுகண்டு - சிறந்த அறிவையுடைய மகிமையுள்ள சிறந்த இருடியாகிய அவ்வுலூகனது வருகையைப் பார்த்து, எதிர் கொளா-எதிர் சென்று உபசரித்து அழைத்துக்கொண்டுவந்து, நயந்து இருபதம் போற்றி - விரும்பி [அன்புடனே] (அம்முனிவனது) உபயபாதங்களை வணங்கி, ஆன மா மணி ஆசனத்து - ஏற்ற சிறப்புடையதான பெரிய நவரத்தினமிழைக்கப்பெற்ற திவ்வியாசனத்திலே, இருத்தினான் - (அவனை) எழுந்தருளப் பண்ணினான்; (எ - று.)

அரசன் முனிவர்க்குச் செய்யவேண்டிய உபசாரங்களையெல்லாம் குறைவின்றி மனமகிழ்ச்சியோடு செய்தனனென்பதாம். நயந்து போற்றி இருத்தினான் என்றதனால், திரிகரணங்களாலும் உபசரித்தமை தோன்றும். நால்மறை - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன; தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் என்றலுமொன்று. புரோகிதன் என்னுஞ் சொல்லுக்கு - (வைதிககாரியங்களிலும் மந்திராலோசனையிலும்) முன்னே வைக்கப்படுபவனென்றும், பின்னேவரும் நன்மைதீமைகளை முன்னமே அறிந்து சொல்பவனென்றும் காரணப்பொருள். சந்திரகுலத்திற் பிரசித்திபெற்ற அஸ்தியென்னும் அரசனால் ஏற்படுத்தப்பட்டதுபற்றியும், யானைச் சேனையை மிகுதியாகவுடைமையாலும், அஸ்தினாபுரியென்க் காரணப்பெயர் வந்ததென்பர்; ஹஸ்தீ - ஓர் அரசன்; அல்லது யானை; (ஹஸ்தம் - கை, இங்கே துதிக்கை; அதனையுடையது) கழல்-வீரர் காலணி. ஞானம் - இயற்கையறிவும், கல்வி கேள்விகளினாலாகிய செயற்கையறிவும், உலக நடையையறிதலும், பொருள்களின் உண்மையையுணரும் தத்துவ ஞானமும். அரவவெங்கொடியோன் என்றது - அவன்கொடியே அவனது கொடுந்தன்மையையும், நாவிரண்டுடைமையையும், நன்றியறிவின்மையையும் எப்பொழுதும் வக்கிரகதியிற்செல்லுந் தன்மையையும் விளக்கும் என்றற்குப்போலும். இனி, நல்லபாம்புபோல மிகக்கொடியனென்றும் பொருள் கொள்ளலாம். ஞானம் ஆம் முனி எனப்பிரித்து, தத்துவ ஞானவடிவமான முனியெனினுமாம். (8)

துரியோதனன் முதலியோர் மனங்கொதிக்கும்படி உலூகன் தான் வந்த வரலாற்றைக் கூறத்தொடங்குதல்.

9. விந்தமன்னதோள்வீடுமன்முதலியோர்விழைவுடன்றொழுதேத்தி
வந்தவாறுரைத்தருள்கெனமுனிவனும்வரன்முறையடைவாக
வந்தனைகியகந்தடர்கடகளிற்றரசனுமவன்றந்த
மைந்தர்யாவருங்கன்னனுஞ்சகுனியுமனங்கனன்றிடச்சொல்வான்.

(இ - ள்.) விந்தம் - விந்தியமலையை, அன்ன - ஒத்த, தோள் - புயங்களையுடைய, வீடுமன் முதலியோர் - பீஷ்மன் முதலானவர்கள், விழைவுடன் - விருப்பத்துடனே, தொழுது - (அம்முனிவனை) வணங்கி, ஏத்தி - துதித்து, வந்த ஆறு உரைத்தருள்க என்பு

இங்கு) எழுந்தருளிய காரணத்தைச் சொல்லியருள்வாயாக என்று வேண்ட, முனிவனும் - அவ்வுலூகனும்,—அந்தன் ஆகிய - பிறவிக் குருடனான, கந்து அடர் கடம் களிறு அரசனும் - கட்டுத்தறியை முறிக்கின்ற மதம்பொழிகிற யானைச்சேனையையுடைய திருதராட்டிரனும், அவன் தந்த மைந்தர் யாவரும் - அவன்பெற்ற (துரியோதனன் முதலிய) புத்திரரெல்லோரும், கன்னனும் - கர்ணனும், சகுனியும்—, (என்னும் இவர்கள்), மனம் கனன்றிட - மனங்கொதிக்கும்படி, வரன்முறை - (தான்) வந்த வரலாற்றை, அடைவு ஆக - முறைமைப்படி, சொல்வான் - சொல்பவனானான்; (எ - று.)—அதனை, மேல் மூன்றுகவிகளிற் காண்க.

தோளுக்கு மலை உவமை பருமைக்கும், வலிமைக்கும், ஆயுதங்களால் அழிவடையாமைக்கு மென்க. இங்கே பிறமலைகளையெடுத்துக் கூறாமல் விந்தியமலையை யெடுத்துக்கூறினது, அது முன்னொருகாலத்தில் மலையரசனான இமவானோடு மாறுபட்டுத் தான் எல்லா மலைகளினும் மேலாகுமாறு வானத்தில் சூரியசந்திராது கதியையும் தடுத்து உயர்ந்து சென்றதாதலின், அவ்வுயர்வைக்கருதியென்க. முதலியோர் என்றது - விதுரன், துரோணன், கிருபன் ஆகியவரை. கந்து - மரக்கிளை; இலக்கணையாய், யானை கட்டுந்தறியை யுணர்த்தும். மதயானை கட்டுத்தறியை முறிக்குந் தன்மையது. கடம் - கன்னம்; இது அதனினின்றுவழியும் மத நீருக்கு இடவாகுபெயர். இங்கே களிறு என்றது, தேர் குதிரை காலாள் என்னும் மற்றையங்கங்களுக்கும் உபலக்ஷணம். அழகியதும் பெரியதுமாய் மதத்தாற் கதஞ்சிறந்து தானும்போர்செய்யும் யானை மற்றைத் தேர்முதலியவற்றினுஞ் சிறந்ததென்ற கருத்தால், இங்கு அதனையே பிரதானமாகக் கூறினர். "குஞ்சர நகரத்து" அரசனென்பதுதோன்ற, களிற்றரசனென்றா ரெனினுமமையும். இனி, யானை போன்ற அரசனென்றுமாம்; வலிமை கம்பீரத்தன்மை, நடை, நோக்கம், கோபத்தைமறைத்தற் குரியகாலத்தில் மறைத்துவைத்து வெளிப்படுத்தற்குரியகாலத்தில் வெளிப்படுத்தல் என்பனவற்றில் வீரனுக்கு யானை உவமை. "கராசலம்பதினாயிரம் பெறுவலிக்காயமொன்றினிற் பொற்றோள், இராசகுஞ்சரம்பிறந்திடும் விழிப்பலனில்லை மற்றதற்கென்றான்" என முன் வியாசர் கூறியபடி இவன் பதினாயிரம் யானைபலங்கொண்டவன் என்பது தோன்ற, களிற்றரசனென்றா ரென்றலும் பொருந்தும். சகுனி - காந்தாரதேசத்தரசன்; திருதராஷ்டிரன் மனைவியான காந்தாரியுடன் பிறந்தவனாதலால், துரியோதனாதியர்க்கு மாமன்; சுபலனென்னும் அரசனது புத்திரன். இராச்சியபாகங் கேட்கும் வார்த்தையாதலால், இவர்கள்மனங்கனல்வதாயிற்று. 'அந்தனாகிய அரசனாகிய அவன் தந்த மைந்தர்யாவரும்' என்ற சொற்போக்கு - தந்தை ஊனக்கண்குருடன் மைந்தர் ஞானக்கண்குருடர் என்ற இழிவைத் தொனிப்பிக்கும். இவர்கள் மனங்கனன்றிடச் சொல்வான் என்றதனால், உலூகன்சொல்லும் வார்த்தை இவரொழிந்த மற்றையோர்க்கெல்லாம் சம்மதமென்பது பெறப்படும். (9)

## இது முதல் மூன்று கவிகள்-ஒருதொடர்: உலூகமுனிவன் வார்த்தை.

10. ஆண்டுபன்னிரண்டடவியுற்றொருவருமறிவுறுவகைமற்றோர்
ஆண்டுமன்னியபாண்டுவின்மதலையரைவரும்வெளிப்பட்டார்
ஆண்டுமன்னர்முன்சூதுபோர்பொருதழிந்திடுதலினதுநீர்கொண்டு
ஆண்டுவந்தபார்நும்மொழிப்படியவர்க்களித்திரோவளியீரோ.

(இ - ள்.) பன்னிரண்டு ஆண்டு - பன்னிரண்டு வருஷ காலம், அடவி உற்று - வனத்திலே பொருந்தி வசித்து, மற்று ஓர் ஆண்டு - இன்னொரு வருஷம், ஒருவரும் அறிவுறு வகை - எவரும் (தம்மை) அறியாதபடி [அஜ்ஞாத வாசமாக], மன்னிய - (விராடநகரத்தில்) வசித்த, பாண்டுவின் மதலையர் ஐவரும் - பாண்டு குமாரர்களைந்து பேரும், வெளிப்பட்டார் —; ஆண்டு - அவ்விடத்தில் [சபாமண்டபத்தில்], மன்னர்முன்-பல அரசர்கள் எதிரில், சூது போர் பொருது - (சகுனியோடு) சூதாட்டத்தையாடி, அழிந்திடுதலின் - (தருமன்) தோற்று இராச்சியத்தை யிழந்ததனால், நீர்-நீங்கள், அதுகொண்டு - அக்காரணத்தால், ஆண்டு வந்த - அரசாட்சிசெய்து வந்த, பார் - (அவர்களது) இராச்சியபாகத்தை, நும் மொழிப்படி - (முன்னே) நீங்கள் சொன்ன வார்த்தையின்படி, அவர்க்கு - அப்பாண்டவர்களுக்கு, அளித்திரோ - (இப்பொழுது) கொடுப்பீர்களோ? அளியீரோ - கொடுக்கமாட்டீர்களோ? (எ - று.)

கீழ்ச் சூதுபோர்ச் சருக்கத்தில் "அரிவையோ டகன்று நீவிரை விருமடவியெய்திச், சுரர்தினமீராறங்கண் துன்னுதிர் மன்னு நாட்டின், ஒருவருமறியர் வண்ண மொருதினமுறைதி ருங்கள், பெரு விறலரசும் வாழ்வும் பின்னுறப் பெறுதிரென்றான்" என்று கூறியபடி இப்பொழுது நடக்க உங்களுக்குச் சம்மதமா? இல்லையா? என்று உலூகன் துரியோதனாதியரை வினவினன். அம்பாலிகை வியாசரோடு சேர்கையில், கூச்சத்தால் உடம்பு முழுவதும் நிறம் வேறுபட்டு வெண்மையடைந்ததனால், அவளிடம் பாண்டு விளர்த்த உடலுடையவனாய்ப் பிறந்தான். ஒருவர் என்ற பலர்பால், அறிதற்கரியதை அறியவல்ல அறிவினுயர்வை விளக்கும்: ஆண்டு - அக்காலத்தி லென்றுமாம். வெற்றி தோல்விகளுக்கு இடமாதலாலும், அரசாட்சிச் செல்வத்தைப்பெறுதல் இழத்தல்களுக்குக் காரணமாதலாலும், சூதாட்டத்தை 'போர்' என்றது; போர்-யுத்தம். அளி என்ற வினைப்பகுதி பாண்டவர்கள் இராச்சியத்தையிழந்த தாழ்வும், துரியோதனாதியர் அதனை யாண்டு வந்த உயர்வும் தோன்ற நின்றது. இப்பாட்டில் முதலடி யொழிந்த மற்றை மூன்றடிகளிலும், முதலில் ஆண்டு என்ற சொல் வெவ்வேறு பொருளில் வந்தது, யமகமென்னுஞ் சொல்லணியாம்; மூன்றாமடியிலுள்ள ஆண்டு என்பது சுட்டடியாப் பிறந்த அண்டு என்பதன் நீட்டலெனப்படும். (10)

11. முன்னரும்பொருதுளதுநீர்சூதுபோர் மோதுபோர்கருதாமல்,
இன்னமும் பொரவேண்டுமேற்பொருதிடுமிலஞ்சியிற்பொலஞ்செங்

கால், அன்னமுங்கிரிமயில்களுமுடன்விளையாடு நல்வளநாட்டீர், பின்னமும்பிறவாதினிப்பண்டுபோற்பீடுறும்பெருவாழ்வும்.

(இ - ள்.) இலஞ்சியில் - நீர் நிலைகளிலுள்ள, பொலம் செம்கால் அன்னமும் - பொன்னிறமான சிவந்த கால்களையுடைய அன்னப் பறவைகளும், கிரி மயில்களும் - மலையிலுள்ள மயிற் பறவைகளும், உடன் விளையாடும் - ஒருங்கே விளையாடப்பெற்ற, நல் வளம் நாட்டீர்-சிறந்த வளங்களை யெல்லாமுடைய குருநாட்டி னரசர்களே! மோது போர் கருதாமல் - (ஒருவரோடொருவர்) தாக்கிச் செய்யும் யுத்தத்தை யெண்ணாமல், நீர் முன்னரும் பொருது உள துநீங்கள் (பாண்டவரது இராச்சியத்தைப்பறித்துக் கொள்ளும் பொருட்டு) முன்பு செய்துள்ளதும், சூது போர் - சூதாட்டமே யாம்; (ஆதலால் அவ்விராச்சியத்தை அவர் மீட்டுக்கொள்ளும் பொருட்டு), இன்னமும் பொர வேண்டுமேல் - இனியும் (மோது போரில்லாமல் சூதுபோரைச்) செய்யவேண்டுமென்றால், பொருதிடும் -( அவர்களோடு அதனையே) செய்யுங்கள், (இங்ஙனம் நியாயப் படி நடப்பீரானால்), இனி பின்னமும் பிறவாது - இனிமேல் (உங்கள் இருதிறத்தாருள்) மாறுபாடும் உண்டாகாது; பெரு வாழ்வும்-பெரிய (உங்கள்) அரசாட்சிச் செல்வமும், பண்டு போல் பீடுஉறும் - முன் போலப் பெருமையடையும்; (எ - று.)

மொழிப்படி கொடாவிட்டாலும், முன்போல மறுபடி இருதிறத்தாருஞ் சூதாடுவது, அதில் பாண்டவர்கள் சயித்தால் அவர்களுக்கு இராச்சியங் கொடுத்து விடுவது, இதுவாவது செய்யவேண்டுவது நலம் என்றான். மோது போர் கருதாமலென்றது - முன் வாக்கியத்திலும் பின் வாக்கியத்திலுஞ் சேர்ந்து இடையில் மத்திமதீபமாய் நிற்கும். காலும் மூக்குஞ் சிவந்து உடம்பு வெளுத்திருக்கும் அரசவன்ன மென்பார், செங்காலன்ன மென்றார். நாடும் நாடு சார்ந்த இடமுமாகிய மருதநிலத்தின் கருப்பொருளான அன்னங்களும், மலையும் மலைசார்ந்த இடமுமான குறிஞ்சிநிலத்தின் கருப்பொருளான மயில்களும், ஓரிடத்திற்கூடி விளையாடுவதெனத் திணைமயக்கங்கூறியவாறு. வெவ்வேறு நிலத்திலுள்ளனவான விவேகமில்லாத அஃறிணையுயிர்களாகிய பறவைகளும் தமக்குள் பேதமின்றி உமது நாட்டில் ஒற்றுமைப்பட்டிருக்க, விவேகிகளான நீங்கள் உங்களினத்தவரான பாண்டவர்களோடு பேதப்பட்டிருப்பது தகுதியன்றுஎன்ற பொருள் இவ்வருணனையில் தொனிக்குமாறு காண்க. மருதநிலத்து ராஜஹம்சம் - நாட்டில் அரசாளுந் துரியோதனனையும், கிரி மயில்கள் - வனவாசஞ் செய்த பாண்டவர்களையும் ஞாபிக்கும். முன்னமும் பொருசூதுபோர் மோதுபோர் முனிவுடன் என்றும் முதலடியிற் பாடம். (11)

12. அன்றியேயவருடன்மலைகுவமெனவழிவினைக் கருதாமல்
வென்றியேநினைந்தெதிர்த்திரே லுங்களால்வெல்லுதலரிதம்மா
கன்றியேயடல்வீமனும்விசயனுங்களம்புகிலனைவீரும் [தே.
பொன்றியேவிடுகின்றினிர்முனிவர்சொற்பொய்க்குமோபொய்யா

(இ - ள்.) அன்றியே - (இங்ஙனஞ் சூதாட்ட வழியில்) அல்லாமல், அழிவினை கருதாமல் - தோல்வியை (நேரக் கூடுமென்று) நினையாமல், வென்றியே நினைந்து - ஜயித்தலையே (நேருமென்று) நினைத்து, அவருடன் மலைகுவம் என - அப்பாண்டவர்களோடு போர் செய்வோமென்று நிச்சயித்து, எதிர்த்திரேல் - (அவர்களை) எதிர்ப்பீரானால், உங்களால் வெல்லுதல் அரிது - உங்களால் (அவர்களைச்) சயித்தல் முடியாது; அடல் - வலிமையுடைய, வீமனும் - பீமசேனனும், விசயனும் - அருச்சுனனும், கன்றியே - கோபங்கொண்டு, களம் புகில் - போர்க்களத்தையடைந்த மாத்திரத்தில், அனைவீரும் - நீங்களெல்லீரும், பொன்றியே விடுகின்றினிர் - (யுத்தத்தில்) நிச்சயமாக இறந்தே விடுவீர்கள்; முனிவர் சொல் பொய்க்குமோ பொய்யாதே - முனிவரது வார்த்தை தவறுமோ? தவறவேமாட்டாது; (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல்; பாண்டவர்களது பராக்கிரமங்களை நோக்கிய அதிசயத்தால் வந்தது. 'உங்களெல்லோரையும் ஒழித்தற்கு வீமன் விசயன் என்ற இருவரும் ஒருங்குவேண்டுவதில்லை, இருவருள் எவனாயினும் ஒருவன் போதும்' என்ற கருத்து விளங்க, 'வீம விசயர்' என உம்மைத் தொகையாற் சேர்த்துக் கூறாமல் 'வீமனும் விசயனும்' எனத் தனித்தனி பிரித்துக் கூறினார். 'உங்களை அழித்தற்கு அவர்கள் போர்செய்யவேண்டா. போர்க்களத்தில் வருதல்மாத்திரமே அமையும், அம்மாத்திரத்திலே நீங்கள் அச்சத்தால் இறப்பீர்கள்' என்ற பொருளைத் தோற்றுவித்தற்கு, 'களம் புகில்' என்றார். பொன்றிவிடுவீரென எதிர்காலத்தாற் கூறவேண்டியவிடத்து 'பொன்றிவிடுகின்றினிர்' என நிகழ்காலத்தாற் கூறினது நிச்சயமும் விரைவும்பற்றி வந்த காலவழுவமைதி. பொன்றுகின்றீர் என்னாது பொன்றிவிடுகின்றினிர் எனக் கூறியதில் விடு என்பதும் அத்துணிவையே உறுதிப்படுத்தும். பாண்டவரைவருள் வீம அருச்சுனரையே எடுத்துக் கூறினது, இவ்விருவரும் துரியோதனனையும் கர்ணனையும் கொல்வதாக முன்னர்ச் சபதஞ்செய்திருத்தலாலும் பலபராக்கிரமங்களிற் சிறந்தவராதலாலும் என்க. 'முனிவர் சொற் பொய்க்குமோ பொய்யாதே' என்ற பொதுப்பொருளால் முன்வாக்கியங்களில் வந்த சிறப்புப்பொருளை விளக்கியதனால், வேற்றுப் பொருள் வைப்பணி: பொதுப்பொருளாற் சிறப்புப்பொருளையாவது சிறப்புப் பொருளாற் பொதுப்பொருளையாவது சாதித்தல், இவ்வணியின் இலக்கணமாம்.

அருள்கொண்டு கூறினாலும் வெகுண்டுகூறினாலும் அவ்வப் பயன்களைத் தவறாமல் தந்தேவிடுகின்ற பழுதுபடாத பொருள் நிரம்பின சொற்களையுடைய நிறைமொழிமாந்தரான முனிவரது வார்த்தை பயன்தராது விடாதாதலின், 'முனிவர்சொற் பொய்க்குமோ பொய்யாதே' என்றார். 'பொய்க்குமோ; பொய்யாதே' என்ற இரண்டனுள் யாதாயினும் ஒன்றே அமைவதாயிருக்க, உடன்பாடு எதிர்மறை என்ற இரண்டுமுகத்தாலுங் கூறினது, அது தவறாமையை உறுதிப்படுத்தும்பொருட்டென்க; இதனை "வளம்பட வேண்டாதார்யாருமில்லை" "உண்டோ உணர்ச்சி மற்றில்லாகும்" என்பனபோலக் கொள்க. 'முனிவர்சொல்' என்றது, கீழ் ஆரணியபருவத்தில் துரு

வாச மகாமுனிவர் 'வண்டோலிடுந்தார்ப்போறத்தின் மகனே யுன்னை யரசென்று, கொண்டோரல்லா லெதிர்ந்தோரில் யாரேவாழ்வார் குவலயத்தில்" என்பது முதலியவற்றை. இனி, 'முனிவர் சொற்பொய்க்குமோ பொய்யாதே' என்றதை உலூகன்வார்த்தையாகக் கொள்ளாமல் கவிக்கூற்றாகக்கொண்டு. 'கன்றியேயடல் வீமனும் விசயனும் களம்புகில் அனைவீரும், பொன்றியே விடுகின்றினிர்' என்று இங்கே உலூகமுனிவன் சொன்ன வார்த்தை பொய்யாகாதுபலித்தே தீரும் என்றதாகவும் கருதலாம். அன்றியும், சாபானுக்கிரக சக்தியுடைய அந்தணர் பலர் துரியோதனனுக்கு அப்பொழுதப்பொழுது புத்தி கூறி அவன் கேளாதது காரணமாக அவனுக்குக்கொடுத்த சாபங்களும், பாண்டவர்களது நற்குண நற்செய்கைகளை நோக்கி மகிழ்ந்த முனிவர் பலர் அவர்களுக்குச் செய்த அனுக்கிரகங்களும் அனேகம் உண்டு. போரில் வெற்றி தோல்விகள் ஒருதலையன்றாதலால் அங்ஙனங்கருதுதல் தகுதியன்றென்பார். 'அழிவினைக்கருதாமல் வென்றியேயினைந்து' என்றார்.

அடல் என்பதை விசயனுக்கும் கூட்டுக. வீமனுக்கு அடல் - தேகபலமும், கதைவலிமையும்; அருச்சுனனுக்கு அடல் - வில்வன்மையும், பாசுபதம் முதலிய அஸ்திரபலமுமாம். வீமன் (பகைவர்க்குப்) பயங்கரனானவன் என்று பொருள். விசயன் - விசேஷமான வெற்றியுடையவனென்று பொருள். இராஜசூய யாகத்திற்காக வடக்கிற் சென்று பல அரசர்களைச் சயித்ததனாலும், காண்டவ தகனகாலத்துத் தேவர்களை வென்றதனாலும், பாசுபதம் பெறுங்காலத்துப் பரமசிவனையெதிர்த்து விற்கழுந்தால் முடியிலடித்ததனாலும், பின்பு தேவர்க்குப் பகைவராகிய நிவாதகவசர் காலகேயர்களை வதைத்ததனாலும், இவை முதலிய வெற்றிகளால், இவனுக்கு இப்பெயர் அமைந்தது. இனி, விசயன் - தன்னைச் சயிப்பாரெவரும் இல்லாதவன் என்றும் பொருள்கொள்வர். முன்னையபொருளில், வி - விசேஷமும், பின்னைய பொருளில் வி - எதிர்மறையுங் குறிப்பனவாம்; இருபொருளிலும், ஜயம் - வெற்றி. 'அரிது' என்பதில், அருமை-இன்மை குறிக்கும். (12)

### துரியோதனன் அலட்சியமாக மறுமொழி கூறுதல்.

13. என்றுபூசுரனியம்பலுங்குங்குமமெழிலுறுமிணைமேருக்
குன்றுபூசியதனையபொற்றடம்புயக்குருகுலவயவேந்தன்
இன்றுபூசைபோலிருந்துழியுரைக்குமீதிகலதன்றிருவர்க்குந்
துன்றுபூசலிற்காணலாமாண்மையுந்தோள்வலிமையுமென்றான்.

(இ - ள்.) என்று—, பூசுரன் - (உலூகனென்னும்) அந்தணன், இயம்பலும் - சொன்னவளவிலே,—குங்குமம் பூசியது - குங்குமப் பூவின் குழம்பைப் பூசப்பெற்றதான, எழில் உறும் இணை மேரு குன்று - வளர்ச்சிமிக்க மேருமலை இரண்டு இருந்தால் அவற்றை; அனைய-ஒத்த, பொன் தட புயம்-அழகிய பெரிய தோள்களையுடைய, குரு குலம் வய வேந்தன் - குருவம்சத்திலேபிறந்த வலிமையுடைய இராசராசனான துரியோதனன்,—இன்று - இப்பொழுது, பூசை

போல் - பூனையைப்போல், இருந்த உழி - உள்ளிடத்திலேயிருந்து கொண்டு, உரைக்கும் - வீரமாகப்பேசுகிற, ஈது - இவ்வார்த்தை, இகலது அன்று - வலியதாகாது; இருவர்க்கும் - எங்கள் இருதிறத்தார்க்கும், துன்று பூசலில் - நெருங்கி நேரும் போரில், ஆண்மையும் - பராக்கிரமத்தையும், தோள் வலிமையும் - புயங்களின் பலத்தையும், காணலாம் - (இன்னாரிடத்திலுள்ளதென்று வெளிப்படையாகப்) பார்க்கலாம், என்றான் - என்று கூறினான்; (எ-று.)

இங்ஙனங்கூறினது, ஆண்மையுந் தோள்வலிமையும் போரில் தங்களிடத்தே மிக்குவிளங்குமென்றகருத்தால். பூஸுரன் என்னும் சொல்லுக்கு - பிரமதேஜஸினால் பூமியில் தேவன்போல விளங்குபவனென்று பொருள்; இது - அந்தணர்க்குச்சிறப்புப்பெயர்: "மேலாத் தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும்" என்றார், திருவாய்மொழியிலும். துரியோதனனது பெரியவலிய தோள்களுக்கு உவமையாகக்கூறுகிற மகாமேரு கிரிக்கு 'குங்குமம் பூசியது' என்ற அடைமொழி கொடுத்தது, அத்தோள்கள் எப்பொழுதும் குங்குமக் கலவைச்சாந்தைப் பூசப்பெற்றுள்ளன வாதலின். குங்குமம்பூசிய எழிலுறும்மேரு இரண்டு - இல்பொருளுவமை. குங்குமமென்னும் மரத்தின்பெயர், அதன் பூவின் குழம்பிற்கு இங்கே இருமடியாகு பெயர். எழிலாவது வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பதுபோன்று காட்டுதல் என்றார் நச்சினார்க்கினியர்; என்றது, புஷ்டி யென்றபடி. இணை மேரு பூசியது - ஒருமைப்பன்மைமயக்கம். இணை - இரண்டும் ஒன்றோடொன்று ஒத்த என்றுமாம். பொன் - கருவியாகுபெயராய், பொன்னாபரணங்களை யணிந்த வென்றுங் கொள்ளலாம். குரு என்பவன் - சந்திர குலத்தில் பிரசித்திபெற்ற ஓரரசன்; இவனால் அக்குலம் குருகுலமென்றும், அக்குலத்தவர் கௌரவரென்றும், அந்நாடு குருநாடென்றுங் கூறப்படும். வய - வலிமையுணர்த்து முரிச்சொல். துரியோதனன் பதினாயிரம் யானைபலங் கொண்டவனாதலால், அவனை 'வயவேந்தன்' என்றார். இனி, வயம் எனப் பிரித்தால், பெயர்ச் சொல்லாய், வெற்றியென்று பொருள்படும். காடு முதலிய இடங்களிலன்றி வீட்டினுள்ளே வசிக்கும் பூனைக்குப் பூசையென்று பெயராதலால், 'பூசைபோலிருந்துழி" என உவமை கூறப்பட்டது; அதனை 'வெவ்வாய்வெருகினைப் பூசையென்றலும்' என்ற தொல்காப்பியங் கொண்டும் "இளர்மாடத்துள்ளுறையும் பூசை" என்ற கம்பராமாயணங்கொண்டும் அறிக. ஆண்மை - ஆண்தன்மை, பௌருஷம். தோள்வலிமை-புஜபலம். (13)

## விதுரன் துரியோதனனுக்கு நற்புத்தி கூறுதல்.

14. கல்விதூயநெஞ்சிலாதவச்சுயோதனன்கழறியமொழிகேட்டு
வில்விதுரனிவ்வேதியன்மொழிப்படிமேதினிவழங்காமற்
புல்விதூடகரினுமுணர்விலாதவர்புகலும்வாசகங்கேட்டிற்
செல்விதூரியுளாய்விடுஞ்சுற்றமுஞ்சேனையுங்கெடுமென்றான்.

(இ - ள்.) கல்வி - படிப்பினாலே, தூய - (குற்றமற்றுச்) சுத்தமான, நெஞ்சு-மனம், இலாத - இல்லாத, அசுயோதனன் - அந்தத் துரியோதனன், கழறிய - உறுதியாகச்சொன்ன, மொழி-அவ்வார்த்தையை, வில்விதூரன் - வில்வித்தையில் வல்ல விதுரன், கேட்டு - செவியுற்று, (துரியோதனனை நோக்கி), 'இ வேதியன் மொழிப்படி - இந்த அந்தணனது வார்த்தையின்படி, மேதினி வழங்காமல் - (பாண்டவருக்குப்) பூமியைக்கொடாமல், புல் விதூடகரினும் உணர்வு இலாதவர் புகலும் வாசகம் கேட்கில் - இழிவான விதூஷகர்களைக் காட்டிலும் அறிவில்லாதவர்கள் சொல்லும் வார்த்தையைக் கேட்டு அதன்படி நடப்பாயானால், செல்வி தூரியள் ஆய்விடும் - (உனக்குத்) திருமகள் தூரத்திலுள்ளவளாய்விடுவள் [விலகிப்போவாள் என்றபடி]; சுற்றமும் சேனையும் கெடும் - (உனது) பந்துவர்க்கமும் சேனைகளும் போரில் அழியும்,' என்றான்-என்று சொன்னான்; (எ-று.)

இராவணன்போலப் படித்துக்கெட்டவனல்லாமல், துரியோதனன் படியாது கெட்டவனாதலால், 'கல்விதூயநெஞ்சிலா வச்சுயோதனன்' என்றார். தூயநெஞ்சிலாத எனவே, தீயநெஞ்சுடைமை அருத்தாபத்தியால் தானே பெறப்படும். விதுரனது வில் வல்லமை பிரசித்தம்: "வெற்றிவிதுரன் கைவில்லிருக்க மேதினியின் - மற்றவனை வெற்றி கொள்ளுமாறுண்டோ" என்னும் பாரதவெண்பாவினாலும் அறிக. விதூஷகர் - தமக்கு நேரிற் பகையில்லாதிருக்கையிலும் ஒரு பயனையுங் கருதாமல் தானும் பிறரும் நகைத்தலொன்றையே நல்ல பயனாகக்கொண்டு எப்பொழுதும் பிறரை நிந்தித்துத் திரியும் அவிவேகிகள்; வி - மிகுதியாய், தூஷகர் - தூஷிப்பவர், பழிப்பவர் என்க. புல் விதூடகரினும் உணர்விலாதவரென்றது, கர்ணன் சகுனி துச்சாதனன் முதலியோரை. கல்வி தூய - மூன்றும் வேற்றுமைத்தொகையில் வலி இயல்பாயிற்று. இனி, உம்மைத்தொகையாய், கல்வியுந் தூயநெஞ்சுமில்லாத என்றுமாம். விதூரனென்ற நீட்டல் விகாரம், எதுகைத்தொடை நோக்கியது. மேதினி என்ற சொல்லுக்கு-(திருமாலாற்கொல்லப்பட்ட மதுகைடபரென்னும் அசுரரது) உடற்கொழுப்பினால் நனைக்கப்பட்டதென்று காரணப்பொருள்; மேதஸ் - நிணம். செல்வி - செல்வங்களுக்கு உரியவள். இனி, தூரியளாய், விடும் என இரண்டாகக்கொண்டு, சிறிதுசிறிதாகச் சேய்மையிற் சென்று நின்று பின்பு விட்டேயொழிவளென்றுங் கருத்துக்கொள்ளலாம். சுற்றம் - (சுப அசுபகாலங்களில் ஒருவனை வந்து) சூழுந்தன்மையதுபற்றி வந்த பெயர். சுற்றமென்னும் பால்பகா அஃறிணைப்பெயர் - ஆகுபெயர்ப்பொருளால் உயர்திணைப்பலர்பால் குறிப்பதாயினும், சொல்நிலைக்கு ஏற்ப, கெடும் என்னுஞ் செய்யுமென்முற்றைக் கொண்டது. (14)

## துரோணனும் கிருபனும் நற்புத்தி கூறுதல்.

15. திரத்துவாய்மைநீதவறிமற்றவருடன் சேனையுந்திறலுங்கொண்
டுரத்துவாளமருடற்றலோபெரும்பிழையுடன்றனையாமாகிற்
சரத்துவாய்தொறுஞ்சோரிகக்கிடவிடுந்தனஞ்சயன்றனுவென்று
பரத்துவாசனும்பகர்ந்தனன்கிருபனும்பகர்ந்ததேபகர்ந்திட்டான்.

(இ - ள்.) (அப்பொழுது), பரத்துவாசனும் - பரத்துவாச குமாரனான துரோணாசாரியனும், (துரியோதனனை நோக்கி), 'நீ—, நிரத்து வாய்மை தவறி - உறுதியான சத்தியத்தைத் தப்பி, சேனையும் திறலுங்கொண்டு - (உனது) சேனைகளையும் மற்றை வலிமைகளையுமே முக்கியமாகக்கொண்டு அவற்றால், அவருடன் - அப்பாண்டவர்களோடு, உரத்து வாள் அமர் - வலிமையுள்ள தான ஆயுதங்களாற் செய்யும் போரை, உடற்றலோ - செய்யத் தொடங்கு தலோ, பெரு பிழை-பெரிய குற்றமாகும்; உடன்றனை ஆம் ஆகின் - (அங்ஙனம்) போரைச்செய்வாயாகில், தனஞ்சயன் தனு - அருச்சுனனது (காண்டீவமென்னும்) வில், சரத்து வாய் தொறும் - அம்புகள் தைத்த இடங்களிலெல்லாம், சோரி கக்கிட - இரத்தம் பெருகும்படி, விடும் - (அம்புகளை) வீசும்,' என்று, பகர்ந்தனன் - சொன்னான்; கிருபனும் - கிருபாசாரியனும், பகர்ந்ததே பகர்ந்திட்டான் - (கீழ்த்துரோணன்) கூறியதையே தானும் கூறினான்; (எ - று.)

துரோணனும் கிருபனும், சொன்னசொல் தவறாமல் இராச்சியத்தைத் தருமனுதியர்க்குக் கொடுத்தலே செய்யத்தக்கது; வாய்மை தவறிப்பொருதாலோ அருச்சுனன் கணைக்குத் தப்புவது முடியாது என்று தம் கருத்தைத் தெரிவித்தன ரென்க. கௌதம முனிவனது பௌத்திரனும். சரத்துவந்த முனிவனது குமாரனும் ஆகிய கிருபாசாரியன் முதலிலும், அக்கிருபனது உடன் பிறந்தவளான கிருபியினது கணவனான துரோணன் அதன் பின்னும் கௌரவ பாண்டவர்க்கு வில்வித்தை பயிற்றிவைத்தனரென அறிக. இம்மை மறுமைகளில் சத்தியமே நன்மையை விளைத்தலால், நிரத்து வாய்மை எனப்பட்டது.

வாய்மை - மெய்யினது தன்மை. மற்று - அசை; வினைமாற்றென்றுங் கொள்ளலாம். மற்றவரென எடுத்து, எதிரிகளான அவர்களுடனே எனினுமாம். வாள் என்னுஞ் சிறப்புப்பெயர் இங்குப் பொதுவாக படைக்கலமென்ற மாத்திரமாய் நின்றது; இங்ஙனம் சிறப்புப்பெயர் பொதுப்பொருளையும், பொதுப்பெயர் சிறப்புப் பொருளையும் உணர்த்துவது - ஒருவகைப் பாஷை வழக்கம். இனி, வாளென்னும் ஆயுதவிசேடத்தின் பெயர் மற்றைப்படைகள் பலவற்றிற்கும் உபலக்ஷணமென்றுங் கொள்ளலாம். வாய் - படுமிடமாதலை "வாள்வாயுமின்றிவடுவெங்கணை வாயுமின்றி" எனச்சிந்தாமணியிலுங் காண்க. தொறு என்பது - தன்னை யேற்ற பெயர்ப் பொருளெங்கும் அப்பெயர்ப்பொருளோடு இயையும் பொருளிருக்கையைக் குறிக்குமிடைச்சொல். சொரிவது, சோரி; காரணப்பெயர்.

தனஞ்சயன் என்பதற்கு - செல்வத்தைச் சயித்தவனென்று பொருள். தருமபுத்திரன் இராஜசூயயாகஞ் செய்ய வேண்டிய பொழுது, அவர் கட்டளையால் அருச்சுனன் வடதிசையிற்சென்று பல அரசர்களை வென்று அவர்கள் செல்வத்தைத் திறையாகக் கொணர்ந்ததனால், இவனுக்கு இப்பெயர் வந்தது. இனி இதற்கு- வெற்றியையே செல்வமாகக் கொள்பவனென்றும் பொருள் கொள்ளலாம். பரத்துவாசன் என்பது, அவன் மைந்தனென்னும் பொருளில்

தத்திதாந்தமாக வந்த பாரத்துவாசன் என்ற மொழியின் குறுக்கல் விகாரம். துரோணாசாரியர் பரத்துவாச முனிவரின் குமாரராவர். (15)

### வீடுமன் திருதராட்டிரனுக்கு உறுதி கூறல்.

16. காடுமன்னுநின்புதல்வருக்கறுதிசெய்காலமோகழிந்தன்று
நாடுமன்னவகொடாமல்வெஞ்சமர்பொரநாடினையெனினுநாக்
கோடுமன்னுவிலருச்சுனற்கெதிரெவர்குனிக்க வல்லவரென்று
வீடுமன்றிருத்தனயனோடுறுதிகள் வெகுண்டுரைத்தனனன்றே.

(இ - ள்.) (அப்பொழுது), வீடுமன் - பீஷ்மன், வெகுண்டு - கோபங்கொண்டு, திரு தனயனோடு - (தனது) சிறந்த குமாரனான திருதராட்டிரனுடனே, 'மன்னவ - அரசனே! காடு மன்னும் நின் புதல்வருக்கு - வனத்தில் வசித்திருந்த உனது குமாரர்களான பஞ்ச பாண்டவர்க்கு, அறுதி செய் காலமோ - (வனவாசமும் அஜ்ஞாத வாசமுமாக) வரையறைசெய்யப்பட்டிருந்த (பதின்மூன்று வருஷ) காலமோ, கழிந்தன்று - கழிந்துவிட்டது; (இனி மேல்), நாடு கொடாமல் - (அவர்களுக்கு) இராச்சிய பாகத்தை அளித்திடாமல், வெம் சமர் பொர - (அவர்களுடன்) கொடிய போரைச் செய்தற்கு, நாடினை எனின் - விருப்பங்கொண்டாயானால், நாளை - நாளைக்கு, (யுத்தகளத்தில்), அருச்சுனற்கு எதிர் - அருச்சுனனுக்கு எதிராக, கோடு மன்னு வில் குனிக்க வல்லவர் - வளைவுபொருந்தின வில்லை (ப்போர் செய்தற்கு) வளைக்கவல்லவர், எவர் - (இந்தப்பக்கத்தில்) யாவர்உளர்? (எவருமில்லை யன்றோ?) என்று—உறுதிகள் உரைத்தனன் - நன்மையைத் தரும் வார்த்தைகளைக் கூறினான்; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

துரோணகிருபர் துரியோதனனிடம் கூறியதுபோலவே வீடுமனும் தன் கருத்தைத் திருதராட்டிரனிடம் தெரிவித்தனனென்க. இங்கே, வெகுளி, திருதராட்டிரனும் துரியோதனனும் பாண்டவர் திறத்தில் அநீதியை நடத்தலால் வீடுமனுக்கு உண்டாயிற்று. அறுதி - வரையறுத்தல், பீஷ்மனது தம்பியான விசித்திரவீரியனது புத்திரனை திருதராட்டிரனை 'தனயன்' என்றது - அவனை வளர்த்தவன் வீடுமனாதலாலும், பெரிய தந்தையெனப்படுவானாதலாலும், தந்தைக்கு உள்ள அவ்வளவு அன்பு இவனுக்கு அவனிடம் இருக்குமாதலாலு மென்க. பாண்டவரை 'நின்புதல்வர்' எனத் திருதராட்டிரகுமாரராக அபேதப்படுத்திக் கூறியதற்குங் காரணம் இதுவே. காலமோ, ஓ-உயர்வு சிறப்பு; அது அவ்வனவாச அஜ்ஞாத வாசங்களின் கழிதற்கருமையை விளக்கும். கழிந்தன்று - உடன்பாட்டு ஒன்றன்பால் வினைமுற்று; நாளை - எதிர்காலங் குறிப்பதொரு இடைச்சொல்; இனி, விரைவில் என்றபடி. கோடு - வளைவு; முதனிலைத்தொழிற்பெயர். இனி கோடு - வினைத்தொகையாய், வளைந்த உறுதிபெற்ற வில்லுமாம், அர்ச்சுனன் - வெண்ணிறமுடையவன் என்பது பொருள். இது முதலில் இந்நிறமுடைய கார்த்தவீரிய மகாராசனுக்குப் பெயராயிருந்தது. பின்பு அவனைப்

போன்ற சௌரிய தைரியங்களையுடைய பார்த்தனுக்கு இட்டு வழங்கப் பட்டது; இது - உவமவாகுபெயரின்பாற்படும்: பார்த்தன் கருநிற முடையவனாதலால் அவனுக்கு அருச்சுனனென்பது நிறம்பற்றி வந்த பெயரென்றல், பொருந்தாது; இனி, "குருச்சுடர் மணிசெய் பச்சைக் கொழுந்துடற் பொலிவுநோக்கி, யருச்சுனனென்பரீதென னரும்பெயர் வந்த பான்மை" என்ற நல்லாப்பிள்ளை பாரதச் செய்யுளைக்கொண்டு அருச்சுனனென்பது பசுமைநிறம்பற்றிவந்த பெயரென்றலும் ஒன்று. எவர் என்ற வினாப்பெயர், இன்மை குறித்து நின்றது. கோடுமன்னுவில் என்பதை அருச்சுனனுக்கு அடைமொழியாக்கிவிட்டால், குனிக்க என்பதற்கு - வில்லையென்னுஞ் செயப்படு பொருள் வருவித்தல் வேண்டும். (16)

## கர்ணன் வீடுமனை நோக்கிக் கோபத்தோடு கூறுதல்.

17. முன்னமேயுகிரிழந்தவெம்புலியெனமுரணழிமுனிமைந்தன்
றன்னைமற்றவனிடத்துநீகற்றவெஞ்சரத்தின் வென்றமையல்லால்
என்னசேவகங்கொண்டுநீயாரையுமிகழ்ந்துரைப்பதுவென்று
கன்னனுந்திறற்காங்கெயன்றன்னொடுகண்சிவந்துரைசெய்தான்.

(இ - ள்.) (அதுகேட்டு), கண் சிவந்து -(கோபத்தாற்) கண்கள் சிவந்து, கன்னனும் - கர்ணனும்,—'உகிர் இழந்த வெம் புலி என - நகம் போகப்பெற்ற கொடிய (கிழப்) புலிப்போல, முன்னமே முரண் அழி - முற்காலத்திலேயே (தசரத ராமனால்) வலிமையொழிந்த, முனி மைந்தன் தன்னை - ஜமதக்நி முனிவனது குமாரனாகிய பரசுராமனை, மற்று - பின்பு, அவனிடத்து நீ கற்ற வெம் சரத்தின் - அவனிடம் நீ அறிந்துகொண்ட கொடிய அம்புகளால், வென்றமை அல்லால் - சயித்துவிட்டதேயல்லாமல், என்ன சேவகம் கொண்டு-வேறு என்ன பராக்கிரமத்தால், நீ—, யாரையும் இகழ்ந்து உரைப்பது - எல்லோரையும் அவமதித்துப் பேசுவது?' என்று—, திறல் காங்கெயன் தன்னொடு - வலிமையையுடைய கங்காபுத்திரனான வீடுமனுடனே, உரை செய்தான் - சொன்னான்; (எ-று.)

வீடுமனைநோக்கி இங்ஙனம் கூறினன் கர்ணன் என்பதாம். கீழ் வீடுமன் அருச்சுனனுக்கெதிரில் வில்வளைப்பாரில்லை யென்று கூறியதைத் தனக்கு விஞ்சினவர் எவருமில்லை யென்ற செருக்கினால் எல்லா வீரரையுங் கீழ்ப்படுத்தித் தன்னாலாகாத காரியத்தைப் பிறராலும் ஆகாததாகக் கூறினதெனக் கொண்டு, கர்ணன் மிக வெகுண்டான். கர்ணன் தன்னிடம் எவ்வளவு சாமர்த்தியம் உண்டோ அவ்வளவினும் மிக அதிகம் உள்ளதென்று கருதிக் கர்வங் கொண்டவனாதலாலும், பாண்டவர்களிடத்தும் அவர்களுள் முக்கியமாக அர்ச்சுனனிடத்தும் வெகுகாலமாக வைரங்கொண்டவனாதலாலும், அர்ச்சுனனை வீடுமன் மிகச் சிறப்பித்துப் பேசினதைப் பொறாமல் கண்சிவப்பவனானான். மனிதர் தேவர் முதலாக யாவரையும் திக்குவிசயஞ் செய்து வென்ற இராவணனை எளிதிற் சிறையிலிட்ட கார்த்தவீரியார்ச்சுனன் முதலாக நிலவுலகத்து அரசர்பலரையும் வேரறுத்த பரசுராமனை இளமையிலேவென்றிட்ட தன்னால் ஆகாத

காரியம் பிறரெவராலும் ஆகமாட்டாதென்ற உறுதி வீடுமனுக்கு இருத்தல் கூடுமென்று கருதி, கர்ணன் அதனை யெடுத்துக் காரணங் காட்டிக் கண்டித்துப் பேசுகிறான். தசரதராமன் சீதையை மணம் புரிந்து மிதிலையினின்று மீண்டுவருகையில், அவனை வலியச்சென்று எதிர்த்துப் பரசுராமன் அவனால் வெல்லப்பட்டு அப்பொழுது எல்லா வலிமைகளையுமிழந்தன னாதலாலும், 'பாம்பின் கால் பாம்பறியும்' என்றபடி அவனது வில்வித்தையிலுள்ள அந்தரங்கமான பொருள்களை யெல்லாம் அவனிடம் நீ மாணாக்கனாயிருந்து அறிந்தவனாதலாலும், நீ அவனுடன் பொருதகாலத்திலும் அவன் பிராயம் முதிர்ந்தவனும் நீ நல்ல தருண வயதுடையவனுமாதலாலும், அவனை வென்றது ஒரு வெற்றியாகச் சிறிதும் மதிக்கத்தக்க தன்றென்று இகழ்ந்தவாறு. கர்ணன் இளம்பிராயத்திற் பிராமண வடிவங்கொண்டு பரசுராமனிடஞ்சென்று வில்வித்தையைக் கற்றுக் கைதேர்ந்துவருகையில், க்ஷத்திரியவம்ச நாசகனான அவன், இவனை க்ஷத்திரியசாதியானென்று அறிந்து கடுங்கோபங்கொண்டு 'யான் உனக்குக் கற்றுக் கொடுத்த கல்வியனைத்தும் தக்க சமயத்தில் உதவாதபடி மறந்து போய்விடக்கடவது' என்று சாபங்கொடுத்ததுபற்றிக் கர்ணன் பரசுராமன் மீது துரபிப்பிராயமுடையவனாதலால், இங்கே வீடுமனைப் பழிக்கிற சந்தர்ப்பத்தில் அவனையும் பழித்தான். காசிராஜனது பெண்கள் மூவரைத் தன் தம்பியான விசித்திரவீரியனுக்கு மணம் புரிவிக்கும் பொருட்டுச் சுயம்வரத்தில் வீடுமன் வலியத்தேரேற்றிக் கொண்டு செல்லுகையில், அரசர்கள் பலர் வந்து பொருது தோல்வியடைய, அவர்களுள் சிறிது போரில் முன்னிட்ட சாலுவனிடத்து அம்பை யென்பவள் மனத்தைச்செலுத்தி வீடுமனினின்று நீங்கிச் சாலுவனிடஞ் சென்று சேர, அவன் 'பகைவர் கவர்ந்து போன உன்னை யான் தொடேன்' என்று மணம்மறுத்துவிட்டதனால், அவள் பின்னர் வீடுமனை மணஞ்செய்யும்பொருட்டுப் பலவாறு முயன்றும் பயன்படாமையால், முடிவில் பரசுராமனைச் சரணமடைய, அப்பிரான் அருளால் விரைந்துவந்து வீடுமனை மணஞ்செய்யும்படி வற்புறுத்த, விரதவுறுதியையுடைய வீடுமன் அதனை மறுக்கவே, அவன் கோபங்கொண்டு அறைகூவிப் பெரும்போர்செய்ய, அப்போரில் வீடுமன் பரசுராமனை வென்றிட்டனனென்பது வரலாறு; இதனைக் கீழ்க் குருகுலச் சருக்கத்திலும் காணலாம்.

முதலடி உவமையணி. பரசுராமனுக்குப் புலியும், வலிமைக்கு உகிரும் உவமை. சேவகம் - வீரமாதலை "சார்ங்கவிற் சேவகன்" எனப் பெரியாழ்வார் திருமொழியிலும், "எறுசேவகன்" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. மற்று - இடைச்சொல்; இங்கு, பிறபொருள் தந்தது. காங்கெயன் - விகாரம்; காங்கேயன் தந்திதாந்த நாமம். கண் சிவத்தல் - கோபக்குறிப்பு. புலிக்கு மற்றையுயிர்களை வருத்துதற்குக் கருவி நகமாதலால், அதனைப் பரசுராமனது வலிமைக்கு உவமை கூறினர். வெம் புலியென உபமானத்தை விசேடித்தது, உபமேயமான பரசுராமன் முன்பு பல அரசர்களைக் கருவறுத்த வீரமுடையவனாதலின். ஆவேசாவதாரம் அம்சாவதாரத்தினுங் குறைவுபட்டதாதலால், ஆவேசாவதாரமான பரசுராமனுடைய சக்தி

அம்சாவதாரமான ரகுராமனுற் கவர்ந்துகொள்ளப் பட்டதென்றும், பரசுராமனிடம் ஆவேசித்திருந்த திருமாலின் சக்தி அங்ஙனம் நீங்கினபின்பு அவன் வீடுமனிடம் தோல்வி யடைந்தன னென்றும் உண்மையுணர்க. 'நீ கற்ற வெம்சரத்தின் வென்றமையல்லால்' என்றது, நீ அவனிடம் கல்விபயிலாமலிருந்தால் அவனை வென்றிருக்க மாட்டாயென்பது தோன்ற நின்றது. (17)

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்: அவற்றுள் முதலிரண்டு கவிகள் - வீடுமன் வெகுண்டு கர்ணனைப் பரிகசித்துச் சொல்லும் உத்தரம்.

18. தூமவெங்கனற்றோன்றியதோகையந்தொடையல்சூட்டியநாளில்
நாமவெஞ்சிலைநாணெடுத்தனையடாநரனொடும் போர்செய்தாய்
தாமவெண்குடைநிருபனையந்தரசரிதர்கொண்டேகாமல்
வீமன்வெஞ்சிறைமீட்டநாளினுந்திறல்வினைபுரிமுனைவென்றாய்.

(இ - ள்.) அடா—கர்ண! தூமம் - புகையையுடைய, வெம் - வெப்பத்தையுடைய, கனல் - அக்கினியிலே, தோன்றிய - பிறந்த, தோகை - மயில்போன்ற சாயலையுடைய திரௌபதி, அம் தொடையல் - அழகிய மணமாலையை, சூட்டிய நாளில் - (அருச்சுனனுக்கு) இட்டகாலத்தில், நாம வெம்சிலை நாண் எடுத்தனை - அச்சத்தைத் தருகிற கொடிய வில்லில் நாணியை யேற்றி, நரனொடும் போர் செய்தாய் - அருச்சுனனுடனே யுத்தம்பண்ணி வென்றாய்! (அன்றியும்), தாமம் - ஒளியையுடைய, வெள்குடை - வெண்கொற்றக்குடையையுடைய, நிருபனை - துரியோதனராசனை, அந்தர சரிதர் - ஆகாயத்திற் சஞ்சரித்தலையுடைய (சித்திரசேனன் முதலிய) கந்தருவர்கள், கொண்டு ஏகாமல் - கட்டித் தூக்கிக்கொண்டு செல்லாதபடி, வீமன் - வீமசேனன், வெம் சிறை மீட்ட நாளினும் - பயங்கரமான காவலினின்று விடுவித்த காலத்திலும், திறல் வினை புரி முனைவென்றாய் - வலிமையையுடைய போர்த்தொழிலைச் செய்யுமிடமான யுத்தகளத்தில் (அவனைச்) சயித்திட்டாய்! (எ - று.)

போர் செய்தாய், முனை வென்றாய் என்றவற்றில், அக்காலங்களில் யாதொன்றுஞ் செய்யமுடியாது தோற்று ஓடிப்போனுயே? இப்பொழுது வீண் வீரவாதஞ் செய்வதிற் பயனென்ன? என்னும் பொருள் தொனிக்கும். போர்செய்தாய், வென்றாய் என்பன - பிறகுறிப்பின்பாற்படும்; இகழ்ச்சிக்குறிப்பு; எதிர்மறையிலக்கணையுமாம். திரௌபதியின் கலியாண காலத்தில் பிறரால் அறுத்தற்கு முடியாத மத்ஸ்யயந்திரத்தை அருச்சுனன் அறுத்திட்டு அவளால் மாலை சூட்டப்பட்டது காரணமாக அழுக்காறுகொண்டு துரியோதனனியரும் கர்ணனும் மற்றும் பல அரசர்களோடு எதிர்த்துப்போர் செய்து அருச்சுனனுலும் வீமனுலும் வென்று அடித்துத் துரத்தப் பட்டு ஓடினர்களென்பது பிரசித்தம். "புகைத்தகனல்விழிகன்னன் தருக்கா லெள்ளிப் பூசுரனென்றவமதித்துப் புனைவில்வாங்கி, உதைத்த பகழியுமுகைத்தா னுரனுந் தன்கை யொரு கணையா லுடல்பிளந்தானுருமேறொப்பான்" எனக்கீழ்த் திரௌபதி மாலை

யிட்ட சருக்கத்தில் வந்ததுங் காண்க. பாண்டவர் வனவாசஞ் செய்கையில், ஒருநாள் துரியோதனன் தன் பெருமையைப் பாராட்டிப் பாண்டவரை அழுங்கச் செய்யவேண்டு மென்று ஆடம்பரத்துடனே அருகிற்சென்றபோது, இந்திரனேவலால் சித்திரசேனனென்னுங் கந்தருவராசன் வந்து துரியோதனனைக் கயிற்றாற் கட்டி வானத்தில் தூக்கிக்கொண்டுபோக, அப்பொழுது கர்ணன் முதலானோர் எதிர்த்துப்பொருது தோற்று ஓட, பின்பு துரியோதனனது பரிதாபகரமான நிலைமையை அவனது பரிவாரத்தா லறிந்த தருமபுத்திரனது கட்டளையால் வீமன் அருச்சுனனோடு சென்று கந்தருவனை வென்று துரியோதனனை மீட்டனனென்பது பின்னிரண்டடியிற் குறித்த கதை.

அங்கிவேச முனிவனிடத்தில் துரோணாசாரியனுடன் வில்வித்தையைக் கற்றுவந்தபோது 'எனக்கு இராச்சியங் கிடைத்த பின்னர்ப் பாதி உனக்குப் பங்கிட்டுக் கொடுப்பேன்' என்று அவனுக்கு வாக்குத்தத்தஞ் செய்திருந்த பாஞ்சாலராசனாகிய துருபதன் பின்பு ஒரு காலத்தில் அத்துரோணன் தன் குழந்தைக்குப் பாலுக்காகப் பசு வேண்டுமென்று சென்று கேட்டபொழுது முகமறியாதவன் போல் 'நீ யார்?' என்று வினவிச் சில பரிகாச வார்த்தைகளைச் சொல்லிச் சபையிற் பங்கப்படுத்த, அப்பொழுது அவன் 'என் மாணாக்கனாகிய இராசகுமாரனொருவனைக் கொண்டு உன்னை வென்று கட்டிக் கொணரச் செய்து உன் அரசையுங் கைக்கொள்வேன்' என்று சபதஞ் செய்துவந்து, பின் அங்ஙனமே அருச்சுனனைக் கொண்டு பங்கப்படுத்தி அப் பிரதிக்ஞையை நிறைவேற்றிவிட, யாகசேனன் துரோணன் மீது மிகக் கறுக்கொண்டு அவனைக்கொல்லும்பொருட்டு ஒரு புத்திரனும், அருச்சுனனது பலபராக்கிரமங்களைக் கண்டு மகிழ்ந்து அவனுக்கு மணஞ்செய்து கொடுக்கும் பொருட்டு ஒரு புத்திரியும் உதித்தல்வேண்டும்' என்று புத்திரகாமயாகஞ் செய்விக்க, அவ்வோமத் தீயினின்றும் திருஷ்டத்யும்நனும், திரௌபதியுந் தோன்றினராதலின், 'கனற்றோன்றிய தோகை' எனப்பட்டாள்.

ஆசாரிய சிஷ்யக்கிரமத்தை அனைவரும் அறிந்து அனுஷ்டித்து உய்யுமாறு சிஷ்யனுங் குருவுமாகிப் பதரிகாச்சிரமத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவின் அமிசமாகிய நரன் நாராயணன் என்னும் முனிவர்களே இங்கு அருச்சுனனும் கிருஷ்ணனுமாகத் தோன்றினதனால், நரனென்று அருச்சுனனுக்கு ஒரு பெயர். இனி, நரனென்னும் மனிதனை யுணர்த்தும் பெயர், சிறப்பாய், அம்மனிதருட் சிறந்த அருச்சுனனை உணர்த்துவதெனக் கொள்ளலு மொன்று. வெம்மை - கனலுக்கு இயற்கை யடைமொழி; இனம்விலக்க வந்ததன்று. தோகையென்னும் மயில் வாலின் பெயர்; அதனையுடைய மயிலுக்குச் சினையாகுபெயரும், அம்மயில் போன்ற சாயலையுடைய பெண்ணுக்கு உவமையாகுபெயருமாதலால் இருமடியாகுபெயர். கனற்றோன்றிய தோகையென்றது மனிதர் வயிற்றிற் பிறவாத அவளது தெய்வத்தன்மையை விளக்கும். (மலர்களைக்கொண்டு) தொடுக்கப்படுவது தொடை எனக் காரணக்குறி. 'அத் தொடை

யல்' என்ற பாடத்துக்கு அகரச்சுட்டு பிரசித்தியைக் காட்டிற்றென்க; சூட்டிய அந்நாளில் என இயைத்தலுமாம். நாம் - அச்சமுணர்த்தும் உரிச்சொல்; இதன்மேல், அ - சாரியை. அம் - சாரியை; மவ்வீ றொற்றழிந்ததெனினும் அமையும்; இனி, நாம் என்பதை உரிச் சொல்லடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சமெனக் கொள்ளலு மாம். நாமம் எனப்பிரித்து பிரசித்தமான என்றாவது, புகழைத் தருகிற என்றாவது கொள்ளினுமாம். அடா - இகழ்ச்சி பற்றிவரும் முன்னிலை யொருமை யாண்பால் இடைச்சொல். இதன் பெண் பால் - அடி. தாமம் - குடையிற் சுற்றிலுந் தொங்கவிடப்படும் முத்து மாலைகளுமாம். நீதி தவறாது புகழோடு கூடிய அரசாட் சியை வெண்குடை யென்றல் கவிமரபு. காவலின்பெயர் - இலக்கணை யாய், இங்கே கட்டையுணர்த்திற்று. இனி, அடா நரன் - உனக்கு ஏற்றவனல்லாத அருச்சுனனென்றுமாம். அடர் நரன், மீட்ட காணிலும் என்றும் பாடம். (18)

19. ஒருதன்மாநெடுந்தேரினை யறிவுறாவுத்தரன் விரைந்தூர
நெருநலானிரைகவர்தருமுகத்தினுநின்றனைநெடும்போது
மருநறாவுமிழ்துழாயவன்றேர்விடமலையுநாள்வயவாளி
வெருநர்மேல்விடாவிசயனை நீயலால்வெல்லவல்லவருண்டோ.

(இ - ள்.) ஒரு - ஒன்றான, தன் - தனது, மா - பெரிய, நெடு - உயர்ந்த, தேரினை - இரதத்தை, அறிவுறா உத்தரன் - (செலுத்து தற்கு) அறியாத உத்தரகுமாரன், விரைந்து ஊர - துரிதமாகச் செலுத்த, நெருநல் - நேற்று, ஆன் நிரை - பசுக் கூட்டங்களை, கவர் தரு - (அருச்சுனன்) மீட்டுக்கொண்டு போன, முகத்தினும் - போர் முகத்திலும், நெடுபோது நின்றனை - வெகுநேரம் (அருச்சுனன் முன் நீ எதிர்த்து) நிலைநின்றாய்; மரு - வாசனையையும், நறா - தேனையும், உமிழ் - வெளிப்படுத்துகிற, துழாயவன் - திருத்துழாய்மாலையை யுடைய கண்ணபிரான், தேர் விட - (தனது) தேரைச் செலுத்த, மலையும் நாள் - (அருச்சுனன் இனிப்) பெரும்போர் செய்யும்பொழுது, வெருநர் மேல் வயவாளி விடா விசயனை - (போரில்) அஞ்சுகிறவர் கள்மீது வலிமையையுடைய அம்பைச் செலுத்தாத தன்மையை யுடைய அருச்சுனனை, வெல்ல வல்லவர் - சயிக்க வல்லவர், நீ அலால் உண்டோ - நீ யல்லாமல் (வேறு யாவராயினும்) உளரோ? [எவரும் இல்லைபோலும் எனப் பரிகாசமாகக் கூறியபடி]; (எ - று.) நன்மா நெடுந்தேரினை என்றும் பாடம்.

நெடும்போது நின்றனை என்றது, சிறிது பொழுதாயினும் உறுதியோடு முன்நிற்கவும் மாட்டாமல் ஓடினாய் - என்றதைக் குறிப் பால் உணர்த்தும். விராடநகரத்திற் பாண்டவர் ஒளித்திருத்தல் கூடுமென்று துரியோதனாதியர் அந்நகரத்தின்மேல் படையெடுத்து வடபுறத்திற் சென்று பசுக்களைக் கவர்ந்து கொண்டனர். அதனை யறிந்து நிரைமீட்டற்குப் போருக்குவந்த உத்தரகுமாரனுக்குச் சாரதி யாய் நின்ற பேடிவடிவமான அருச்சுனன் உத்தரனைத் தேர்செலுத் தச்சொல்லித் தான் போர் செய்து அத்தனை பேரையும் வென்று துரத்திப் பசுக்களைத் திருப்பியோட்டிக்கொண்டு சென்றனன் என்

பது கீழ் விராடபருவத்தில் நிரைமீட்சிச் சருக்கத்தின் வரலாறு. அப்பொழுது கர்ணன் அருச்சுனனை எதிர்க்கமாட்டாமல் தோற்றோடினன் என்பதைக் கீழ் அச்சருக்கத்தில் "இம்முறை வந்து வந்தெதிர்ந்து வெஞ்சமர், மும்முறை முறிதலும் முனிவன்மாமகன், அம்முறை முதுகிடும் அருக்கன்மைந்தனைத், தெம்முறைமையிற் சில வார்த்தை செப்புவான்" என்ற கவியாலும் உணர்க. போர்த்தொழிலேயும் போர்க்குதிரை செலுத்துந் தொழிலேயுஞ் சிறிதும் அறியாத அதைரியசாலியான உத்தரனென்னுஞ் சிறுவனைப்பேருக்குச் சாரதியாக வைத்துக் கொண்டு தானே சாரதியும் ரதியுமாக வேறுதுணையின்றித் தனியே வந்து போர் செய்த காலத்திலும் அருச்சுனனை வெல்லமாட்டாத நீயோ, போர்த் தொழிலேயும் போர்க்குதிரை செலுத்துந் தொழிலேயும் முழுவதுமறிந்த தந்திரசாலியும் மிக்க தைரியமுடையவனுமான கண்ணபிரானைச் சாரதியாக வைத்துக்கொண்டு பெருஞ் சேனையோடு வந்து அருச்சுனன் எதிர்த்துப் பெரும்போர் செய்யும்பொழுது அவனை வெல்வாய்? என்றவாறு.

மா நெடு - ஒருபொருட்பன்மொழியாய், மிகப்பெரிய என்றலுமாம்; இனி, மா - குதிரை பூட்டிய எனினுமாம். நெருநல் - இறந்த காலங் குறிக்கும் இடைச்சொல்; இங்கே, நெருநல் என்றது, மிகச் சில நாளுக்கு முன் என்றவாறு. முகத்தின் - போர்க்களத்தின் முன்னிடத்திலென்றபடி. அறிவுறா உத்தரன் என்றது, உணர்வு தோன்றாத மிக்க இளம்பிராயத்தையுடையவனென்பதைக்குறிக்கும். உத்தரன் - மச்சதேசத்தரசனான விராடனது இளைய குமாரன்; மூத்தமைந்தன் பெயர், சுவேதன், 'வயவாளிவெருநர்மேல் விடா விசயன்' என்றது, அவனது, தரும யுத்தத்தைக் குறிப்பிக்கின்றது. கீழ் நிரைமீட்சியில் "அரிவையர் வெஞ்சமரஞ்சுவோர் பெருங், குரவரென்றிவர்களைக் கோறல் பாவமே" என்றதனாலும், போரில் அஞ்சுபவர்மேல் அம்பு செலுத்துதல் அதருமமாதல் அறிக. 'என்று' என இறுதியில் வருவித்து, அடுத்த கவியில் 'புகல' என்பதனோடு இயைக்க. இங்கே 'வயவாளி வெருநர்மேல் விடா விசயன்' என்றதனால், நீ அவனை எதிர்த்து வெல்லமாட்டாது அஞ்சிப் புறங்கொடுத்து ஓடுகையில் தருமம் நோக்கி அவன் உன்மேல் அம்பு செலுத்தாமையின், நீ ஒருகால் உய்தல் கூடியதேயன்றி, இன்றாயின், உயிர்த்திருக்கமாட்டாயென்றதாம். உத்தரகோக்கிரகண காலத்திலேயே ஒழிந்திருப்பாயென்றபடி. விசயனை நீயலால் வெல்ல வல்லவருண்டோ - விசயனை வெல்ல நின்னால் ஆகாது. ஆனிரை - ஒன்றன்கூட்டத் தற்கிழமைப்பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத்தொகை. தேரினை ஊர என இயையும். (19)

## பாண்டவர்க்குப் பாகமில்லை யென்று துரியோதனன் கூற, உலூகன் பாண்டவரிடம் செய்தி கூறுதல்.

20. கங்கைமாமகனிவையிவைபுகலவுங்கன்னனைக்கசிந்துட்கொண்
டங்கைகொட்டிநக்கிருந்தவந்தணனையுமவமதித்தெமதேபார்
தங்கள்கானகந்தமதெனப்புகன்றனன்சர்ப்பகேதனனந்தப் [றனன்.
பங்கயாசனமுனிவனுமீண்டுபோய்ப்பாண்டவர்க்கவைசொன்

(இ - ள்.) கங்கை மா மகன் - கங்காதேவியின் சிறந்த குமாரனான வீடுமன், இவை இவைபுகலவும் - இந்த இந்த வார்த்தைகளைச் சொல்லவும், (சிறிதும் லக்ஷியஞ் செய்யாமல்), சர்ப்ப கேதனன்-பாம்புக் கொடியையுடைய துரியோதனன், கன்னனை கசிந்து உள்கொண்டு - கர்ணன் வார்த்தையையே விரும்பிக் கொண்டாடி, இருந்த அந்தணனையும்-(அங்குத் தூதனாய் வந்து) வீற்றிருந்த உலூகமுனிவனையும், அம் கை கொட்டி நக்கு அவமதித்து - அகங்கைகளைத் தட்டிச் சிரித்துப் (பரிகாசஞ் செய்து) அலக்ஷியம் பண்ணி, 'பார் - இந்த ராச்சியம், எமதே-எங்களுடையதே; தங்கள் கான் அகம் - பாண்டவர்கள் தாங்கள் இவ்வளவு காலம் வசித்திருந்த காட்டினிடம், தமது - அவர்களுடையதேயாம், என-என்று, புகன்றனன் - சொன்னான்; (அதுகேட்டு உடனே), அந்த பங்கயம் ஆசனம் முனிவனும் - திருமாலின் திருநாபித் தாமரை மலரைத் தங்குமிடமாகவுடைய பிரமதேவனைப் போன்ற அவ்வுலூக முனிவனும், மீண்டுபோய் - திரும்பி (உபப்பிலாவியத்துக்கு)ச் சென்று, அவை - அங்கு நடந்த அவ்வரலாறுகளை, பாண்டவர்க்கு சொன்னான் - பாண்டுகுமாரர்களுக்குச் சொல்லியருளினான்; (எ - று.)

'இவையிவை' என்றது, கீழிரண்டு கவிகளிலுங் கூறியவற்றை. கசிந்து உட்கொண்டு - அன்புகொண்டு அங்கீகரித்து என்றபடி. அகம் + கை = அங்கை: "அகமுனர்ச் செவி கை வரின் இடையன கெடும்" என்னுஞ் சூத்திர விதி. இனி, அம் கை-அழகிய கை என்றுமாம். இராச்சியபாகம் வேண்டுகிற பாண்டவரிடத்து உள்ள அலட்சியத்தையும் பரிகாசத்தையும் அவர்களுக்குத் தூதனாய் வந்த உலூகன்மேற் காட்டினான் துரியோதனன். பங்கயம் - சேற்றில் முளைப்பது என்று பொருள்: காரணவிடுகுறிப்பெயர்; பங்கயமென்னுங்கொடியின் பெயர், அதன் மலரைக் குறித்தலால், பொருளாகுபெயர்: இதுபோல்வனவற்றை முதலுக்குஞ் சினைக்கும் பொதுவென்பாருமுளர். உலூகனுக்குப் பிரமன் உவமை - தூய்மைக்கும் சிறந்த அறிவுக்கும், எப்பொழுதும் வேதமோதுதற்கும், நல்லொழுக்கத்துக்குமென்க. பங்கயாசன முனிவன் - உவமைத்தொகை. இவையிவை என்ற அடுக்கு, பன்மைப் பொருளது. இனி, பங்கயாசன முனிவன் என்பதற்கு - (யோகத்துக்குரிய அங்கங்கள் எட்டனுள் ஒருவகையிற் சேர்ந்த) பதுமாசனத்தையுடைய முனிவனென்றும் உரைக்கலாம்; பதுமாசனமாவது-இருதொடையின் மேலும் இரண்டு உள்ளங்காலையும் மாறி மேல்தோன்ற வைத்து உட்காரும் நிலை. (20)

அருச்சுனனைத் தன்னிடம் வரும்படி கண்ணன் உலூகனிடம் செய்தி கூறியனுப்புதல்.

21. ஆங்கவர்க்கிவனவணிகழ்ந்தனவெலாமருந்தகையுடன்சொல்லி
யீங்குவந்தெழில்யாதவற்கியம்பலும்யாதவன்மகிழ்வுற்று
வாங்குவெஞ்சிலைவிசயனை விரைவினில்வரவிடுகெனமீள
வோங்குமாதவவுலூகனைப் போக்கினனவனும்வந்துரைசெய்தான்.

(இ - ள்.) இவன் - உலூகன், ஆங்கு - அவ்விடத்தில் [உபப்பிலாவியத்தில்], அவர்க்கு - அப்பாண்டவர்களுக்கு, அவண் நிகழ்ந்தன எலாம் - அவ்விடத்து [அத்தினபுரியிலே] நடந்த செய்கைகளையெல்லாம், அரு தகையுடன் சொல்லி - (பிறருக்கு) அருமையான தகுதியுடனே சொல்லி, ஈங்கு வந்து - இவ்விடத்தில் [துவாரகையில்] வந்து, எழில் யாதவற்கு - அழகையுடைய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு, இயம்பலும் - சொன்னவளவிலே, யாதவன் - அந்தக் கண்ணபிரான்,— மகிழ்வு உற்று - (அதுகேட்டு) மகிழ்ச்சியடைந்து, 'வாங்கு வெம் சிலை விசயனை - வளைந்த கொடிய வில்லையுடைய அருச்சுனனை, விரைவினில் வர விடுக - சீக்கிரத்தில் (இவ்விடம்) வரும்படி அனுப்புவாயாக,' என - என்று சொல்லி, மீள - மறுபடி, ஓங்கு மா தவம் உலூகனை - சிறந்த பெருந்தவத்தையுடைய உலூகமுனிவனை, போக்கினான் - (உபப்பிலாவியத்துக்கு) அனுப்பினான்; அவனும் - அவ்வுலூகனும், வந்து - (உபப்பிலாவியத்துக்கு) வந்து, உரைசெய்தான் - கிருஷ்ணபகவான் வரச் சொன்ன செய்தியை அருச்சுனனுக்குச் சொல்லியருளினான்; (எ - று.)

தகை - தகுதி; இது - தொழிலடியாகப் பிறந்ததாயினும், பொருளாற் பண்புப்பெயர். யாதவன் - யதுகுலத்தில் அவதரித்தவன்; தத்திதாந்தநாமம். துரியோதனன் பாண்டவர்க்கு இராச்சியத்தைக் கொடுத்தற்குச் சம்மதியாதது பாரதயுத்த மூலமாகப் பலரை ஒழித்துத் தான் அவதரித்த தன் காரியமான பூமிபாரநிவிருத்தியை விரைவில் நடத்துதற்குக் காரணமாகுமென்ற கருத்தால், கண்ணன் மகிழ்வு மிகுவானாயினன். அவர்க்கு அவண் நிகழ்ந்தன எலாம் - அப்பாண்டவர்கள் விஷயமாக அங்கு நடந்த வார்த்தைகளையெல்லாம், அருந்தகையுடன் சொல்லி - (பிறரிடத்தில்) அருமையான நற்குணங்களையுடைய தருமனுடனே கூறி என்று உரைப்பினும் அமையும்; இவ்வுரைக்கு, அருந்தகை - பண்புத்தொகைய்ன்மொழி. தகையுறச் சொல்லி என்றும் பாடம். (21)

உலூகன்தூது சருக்கம் முற்றிற்று.

---

## இரண்டாவது

# வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கம்.

அதாவது - வசுதேவகுமாரனான கண்ணபிரானைத் தம்தமக்குப் போரில் ஏற்ற துணையாகும்படி துரியோதனனும் அருச்சுனனும் ஒருங்கே சென்று கூப்பிட்ட வரலாற்றைக் கூறும் பாகமென்று பொருள். வாஸுதேவன் - வசுதேவகுமாரன்; காரணப்பெயர். இது திருமாலின் திருநாமங்களுள் ஒன்று. வாசுதேவனை யழைத்த என இயையும். படை - போர்செய்தல், பகைவரை யழித்தல்; சேனை யென்றும் பொருள்.

## கடவுள் வணக்கம்.

1. அராவணை துறந்துபோந்தன்றசோதைகண்களிப்பநீடு
தராதலம்விளங்கவெண்ணெய்த்தாழிசூழ்தரநின்றுடிக்
குராமணங்கமழுங்கூந்தற்கோவியர்குரவைகொண்ட
புராதனன்றனையேயேத்தும்புனிதர்தாள்போற்றிசெய்வாம்.

(இ - ள்.) அரா அணை - ஆதிசேஷனாகிய சயனத்தை, துறந்து - விட்டு, போந்து - (வடமதுரையில் கண்ணனாக) வந்து அவதரித்து, அன்று - அக்காலத்தில், அசோதை கண் களிப்ப - (தன்னைவளர்க்கிற தாயாகிய) யசோதைப் பிராட்டி கண்களாற்கண்டு ஆனந்தத்தையடையவும், நீடு தராதலம் விளங்க - நீண்ட பூலோகத்தினிடம் செழிப்பையடையவும், வெண்ணெய் தாழி சூழ்தர நின்று ஆடி - வெண்ணெய் வைக்கும் பாத்திரத்தைச் சூழ்ந்து கூத்தாடி, குரா மணம் கமழும் கூந்தல் - குராவென்னும் மரத்தின்மலர் நறுமணம் வீசப்பெற்ற தலைமயிரையுடைய, கோவியர் - இடைப்பெண்களுடனே, குரவைகொண்ட - குரவையென்னுங் கூத்தை ஆடியருளின, புராதனன் தனையே - மிகப் பழையவனான திருமாலையே, ஏத்தும் - (எப்பொழுதும்) வணங்குகின்ற, புனிதர் - பரிசுத்தர்களான அடியார்களது, தாள் - திருவடிகளை, போற்றி செய்வாம் - (யாம்) வணங்கித் துதித்தல் செய்வோம்; (எ - று.)

சர்ப்பங்களுக்குத் தலைவனான ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷன் திருமாலுக்குப் படுக்கையாதலை "சென்றாற் குடையா மிருந்தாற் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாம் திருமாற்கு அரவு" என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தாலும் அறிக. 'அராவணை துறந்துபோந்து' என்றது, "ஆதியஞ் சோதியுருவையங்குவைத்து இங்குப்பிறந்த" என்றபடியே திருப்பாற்கடலில் தமது மூலகாரணமான வடிவம் நிற்க, தேவர்கள் வேண்டுகோளால் அதில் நின்று அமிசமாய் இங்கே அவதரித்ததை. இங்கு அவதரித்தவிடத்தில் ஆதிசேஷன் பலராமனாகத் தோன்றி உடன் இருந்தாலும், தமக்கு ஏற்ற திருப்பள்ளி மெத்தையாகும் தன்மை இல்லையாதலால், 'அராவணை துறந்து' என்றது. அசோதை - (தனது நற்குண நற்செய்கைகளால் தான் பிறந்த குலத்துக்கும் புகுந்த குலத்துக்கும்) புகழைத் தருபவளென்று பொருள்; இவள் - வடமதுரைக்குச் சமீபத்திலுள்ள கோகுல பிருந்தாவனம் எனப்படுகிற திருவாய்ப்பாடியிலிருக்கிற இடையர்களுக்கெல்லாந் தலைவரான நந்தகோபர்க்கு மனைவி. வசுதேவரும் தேவகியும் கம்சனால் சிறையில் இருத்தப்பட்டுத் தளைபூண்டிருக்கையில், திருமால் தேவகியினிடம் எட்டாவது கருப்பத்தில் கண்ணனாய் அவதரிக்க, அக்குழந்தையைக் கம்சன் கொன்றுவிடக் கூடுமென்ற அச்சத்தால் தாய் தந்தையர் அத்தெய்வக் குழவியின் அனுமதிபெற்று, அந்தச் சிசுவை அது பிறந்த நடுராத்திரிலேயே நந்தகோபரது திருமாளிகையிலே இரகசியமாகக் கொண்டு சேர்த்துவிட்டு அங்கு அப்பொழுது யசோதைக்கு மாயையின் அமிசமாய்ப் பிறந்திருந்ததொரு பெண் குழந்தையை எடுத்துக்

கொண்டு வந்துவிட, அதுமுதல் கம்சனைக் கொல்லுகிறவரையில் இளம்பருவத்திலெல்லாம் கண்ணபிரான் அவ்வாய்ப்பாடியிலேயே பலவகைத் திருவிளையாடல்கள் புரிந்து வளர்ந்தருளினனென்பது வரலாறு. குடக்கூத்து, குரவைக்கூத்து முதலியன - இடையர்கள் தமது செல்வச் செருக்குக்கு அறிகுறியாகவும், பெரியோர்கள் கொண்டாடவும், தமது வாசஸ்தானமான முல்லை நிலமும் அதிலுள்ள பசுக்கள் முதலிய செல்வங்களும் எக்குறையுமின்றிச் செழித்துவளரவும் ஆடுவனவாதலால், 'யசோதை கண்களிப்ப நீடுதராதலம் விளங்க' எனப்பட்டது.

குரவம் முல்லைநிலத்து மலராதலால், 'குராமணங்கமழுங் கூந்தற் கோவியர்' என அதனை எடுத்துக் கூறினர். குராவென்னும் மரத்தின் பெயர், பூவுக்கு முதலாகுபெயர், பசுக்களைக் காப்பவனென்னுங் காரணத்தால் இடையனுக்கு வடமொழியில் கோபனென்று பெயர்; அதன் பெண்பாலான கோபீ என்பது விகாரப்பட்டுக் கோவியென நின்று பலர்பால் விகுதியேற்றது. குரவையாவது - கைகோத்தாடுங் கூத்து; "குரவைக்கூத்தே கைகோத்தாடல்" என்பது நிகண்டு. பல நாட்டியப் பெண்கள் வட்டமாய் நின்று விசித்திரமான தாளலயைகளுடன் மெதுவாகவும் உன்னதமாகவும் கூத்தாடுதல், இதனிலக்கணமாம்; குரவையென்பது - காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனுங் கைபிணைந் தாடுவது; 'குரவையென்பது கூறுங்காலைச், செய்தோர்செய்த காமமும்விறலும், எய்தக்கூறு மியல்பிற்றென்ப' எனவும் 'குரவையென்ப தெழுவர்மங்கையர், செந்நிலைமண்டலக் கடகக் கைகோத்து, அந்நிலைகொட்ப நின்றாடலாகும்' எனவுஞ் சொன்னாராதலின்' என்பது, சிலப்பதிகாரத்து அடியார்க்குநல்லாருரை. கண்ணன் கோபஸ்திரீகளுடனே ராஸக்கிரீடை செய்கையில், தான் விரைவாய்ப்பாயும் லாகவ சமத்காரத்தினாலே, தன்னைவிட்டு நீங்க மனமில்லாமல் தன் கைகையையே தனித்தனி பிடித்திருக்கக்கருதிய அவ்வாயர் மகளிர் யாவர்க்கும் பக்கத்திலிருந்தவன் போலக் காணப்பட்டனனாதலால், கோவியர் குரவை கொண்ட புராதனனென்றது, "ஊருந் திரைப் பொன்னிநன்னீரரங்க வுருப்பலவாய்க், காருந்தடித்துங் கலந்ததுபோ லிடைக்கன்னியர்கள், யாருங்களிக்க விடையிடையே கலந்தின்ப நலங், கூருந்திருநடமாடிய மாயமென் கூறுகவே" என்றபடி ஏககாலத்தில் பலவடிவங்கொண்டு அவர்களிடையிடையே நின்று ஒவ்வொருத்தியது இவ்விருகைகளிலும் தன்கைகளிரண்டும் பொருந்த ஆடினதாகவுங் கூறுப.

புராதநன் - மிக்கப்பழையவனென்று பொருள்; அநாதிமூர்த்தியென்க. ஏ - பிரிநிலை; இதனால்; தேவாதிதேவனான எம்பெருமானைத் திருவடிதொழுபவர் தேவதாந்தரங்களை அடைதல் கூடாதென்பது விளங்கும். "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்றார் திருமழிசையாழ்வாரும். புநிதர்-பரிசுத்தராக்கப்பட்டவர், போற்றி-இங்கே தொழிற்பெயர்; இ - விகுதி. இப்பாட்டால், இந்நூலாசிரியர் தமக்குப் பாகவதர்களிடத்திலுள்ள பரமபக்தியை வெளியிட்

டார். செய்வாம் - தாளொருவன் கடவுளை யறிந்து அன்பு கூர்ந்து வணங்கி அப்பயனைத் தான்மாத்திரமே யடைதலினும், சிருஷ்டி தொடங்கித் தன்கோத்திரத்தாரையுந் தன்னொடுகூட்டி வணங்கி அவர்க்கும் அப்பயனை யடைவித்தலே சிறந்ததெனக் கருதி அவர்களை உளப்படுத்திய தன்மைப்பன்மை யென்று கொள்ளலாம்: இனி தமது மாணாக்கர்களையும், இந்நூல் படிப்பவர்களையுங் கூட்டிக் கூறியது என்பாருமுளர். உத்தம அங்கமாகிய தலையிலுள்ள கூந்தலின் சிறப்பை எடுத்துக்கூறியது, மற்றை அங்கங்களின் சிறப்புக்கும் உபலக்ஷணம். அசோதைகண்களிப்ப நீடுதாரதலம் விளங்கப் போந்து என அந்வயித்து, யசோதைப்பிராட்டியின் கண்கள் களிப்பையடையவும், நீண்டபூமி முழுவதும் பாரந்தீர்ந்து விளக்கமடையவுங் கண்ணனாய் அவதரித்து என்றும் உரைக்கலாகும்.

இதுமுதல் இச்சருக்கம் முடிகிறவரையில் இருபதுகவிகள்- பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (22)

## அப்போது துரியோதனன் மந்திரிமாரோடு ஆலோசனை செய்தல்.

2\. புரோகிதன் றூது வந்து போனபின் புயங்க கேது
விரோசனன்சுதனைக்கங்காசுதனொடும்வெகுளிமாற்றித்
துரோணனைமுதலாமிக்கதொன்மதியமைச்சரோடுஞ்
சரோருகசதனமென்னத்தனித்திருந்தெண்ணினானே.

(இ - ள்.) புரோகிதன் - (உலூகனென்னும்) புரோகிதன், தூது வந்து போன பின் - (பாண்டவர்களிடத்தினின்று) தூதனாய்வந்து சென்ற பின்பு,—புயங்க கேது - பாம்புக்கொடியையுடைய துரியோதனன்—விரோசனன் சுதனை - சூரியனது குமாரனான கர்ணனையும், கங்கா சுதனொடும் - கங்கையின் குமாரனான வீடுமனையும், வெகுளி மாற்றி - கோபந்தணியச் செய்து—(பின்பு)—துரோணனை முதல் ஆம் மிக்க தொல் மதி அமைச்சரோடும்-துரோணாசாரியனை முதலாக வுடைய மிகுந்த பழமையான நல்லறிவையுடைய மந்திரிகளுடனே, சரோருக சதனம் என்ன - தாமரையிலைபோல, தனித்து இருந்து - தனியனாயிருந்து, எண்ணினான் - ஆலோசித்தான்; (எ - று.)

உலூகன் பாண்டவதூதனாகி வந்து போனபின்பு, துரியோதனன் பீஷ்மனுக்கும் கர்ணனுக்கும் உண்டான கோபத்தைத் தணிப்பித்து, துரோணர் முதலிய அமைச்சரோடு தனித்திருந்து ஆலோசித்தன னென்பதாம், 'சரோருகசதனமென்னத் தனித்திருந்து' என்பதற்கு - தாமரையிலை நிர்மலமான பல நீர்த்துளிகளோடு கூடியிருந்தாலும் அவற்றுடன் தான் கலவாமலே யிருத்தல் போல, துரியோதனன் துரோணன் முதலிய குற்றமற்ற பல பெரியோருடன் கூடியிருந்தாலும் அவர்களோடு மனங்கலவாத தன்மையுடையவன் என்று கருத்துக் கூறுவர். சதநம் - இனி, இலக்கு

மிக்கு வாசஸ்தானமான தாமரை மலரிற்போல, (ஐசுவரியம் மிகுந்த தனது அரண்மனையில்) தனிப்பட்ட மந்திரிகளோடு ஆலோசித்தா னென உரைத்தலுமாம். 'தொன்மதியமைச்சர்' என்றது, பலகால மாகப் பலகாரியங்களில் மிகப்பழகி அநுபவமுடைய இயற்கையறி வோடுங் கூடின மந்திரிகளென்றபடி.

துரோணகும்பத்திலிருந்து தோன்றினதனால், துரோணனென்று காரணப்பெயர். ஸரோருகம் - குளத்தில் முளைப்பது; தாமரைக்குக் காரணவிடுகுறிப் பெயர். புஜங்ககேது - வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; பாம்பைக் கொடியிலுடையவனென விரிக்க. புஜங்கம் என்பதற்கு-(கால்களில் லாமையால்) மார்பினாற் செல்வதென்றும், வக்கிரகதியாய்ச் செல்வதென்றும் பொருள்; புஜமென்னும் தோளின்பெயர் - மார்புக்கு இலக்கணையாம்; புஜம் - வக்ரம். விரோசனன் - மிகுதியாகப் பிரகாசிப்பவனென்பது பற்றிச் சூரியனுக்குக் காரணக்குறி. அமைச்சர்- அருகிலிருப்பவரென்று பொருள்; அமா - அண்மை: இடைச்சொல். மந்திரிக்குத் தமிழில் 'உழையிருந்தான்', 'உழையன்' எனப் பெயர் வழங்கும். தூது - தூதனுக்குப் பண்பாகுபெயர். (23)

## பலதேயத்து அரசர்களை ஒருங்கே சேர்க்குமாறு தூதனுப்பி விட்டுத் துரியோதனன் கிருஷ்ணனையழைக்கத் தானே செல்லுதல்.

8. தேயமெங்கெங்குஞ்செங்கோல்செலுத்துமத்திகிரிவேந்த
ராயவர்தம்மைக்கூட்டவடைவினிற்றூதுபோக்கிக்
காயமுமுயிருமாகிப்பொருடொறுங்கலந்துநின்ற
மாயவன்றன்னைக்கூட்டவளர்மதிற்றுவரைசேர்ந்தான்.

(இ - ள்.) (அங்ஙனம் ஆலோசித்தபின்பு துரியோதனன்),— தேயம்எங்கு எங்கும் - பூமியில் பலபல நாடுகளில்,—செங்கோல் - நீதிதவறாத அரசாட்சியை, செலுத்தும் - நடத்துகின்ற, அ திகிரி வேந்தர் ஆயவர் தம்மை - பிரசித்தமான ஆஜ்ஞாசக்கரத்தையுடைய அரசர்களை, கூட்ட - (தனக்குப்படைத்துணையாகச்) சேர்ப்பதற்கு, அடைவினில் தூதுபோக்கி - முறையே தூதர்களை அனுப்பிவிட்டு, —காயமும் உயிரும் ஆகிபொருள்தொறும் கலந்துநின்ற மாயவன் தன்னை - எல்லாப்பிராணிகளினிடத்தும் வியாபித்துநின்ற மாயை யுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவானை, கூட்ட - (தனக்குப்படைத்துணை யாகச்) சேர்த்துக்கொள்வதற்கு, வளர்மதில் துவரை - ஓங்கின மதில்களையுடைய (அவனது) துவாரகாபுரியை, சேர்ந்தான் - அடைந்தான்; (எ - று.)

மற்றையரசர்களைப் படைத்துணையாகச் சேர்த்துக்கொள்வதற்குத் தூதர்களை அனுப்பிவிட்டு, ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தனக்குப் படைத்துணையாக அழைப்பதற்குத் துரியோதனன் தானே துவாரகைக்குச் சென்றனனென்பதாம். இக் கவியில் 'போக்கி', 'சேர்ந்தான்' என்ற வினைகளுக்கும், கீழ்க்கவியிலுள்ள 'புயங்ககேது' என்பதே எழுவாய். 'காயமுமுயிருமாகிப் பொருள்

தொறுங் கலந்துநின்ற' என்றது—ஸர்வாந்தர்யாமியாய் எல்லாப் பொருள்களிலும் மறைந்துநின்று தொழில்செய்பவனென்றபடி: சரீரத்தினுள் ஜீவாத்மா இன்றியமையாததாய் மறைந்து நின்று அதனைக்கொண்டு தொழில்களையெல்லாம் நடத்துதல்போல, அந்தச் சீவாத்மாவினுள்ளும் பரமாத்மா இன்றியமையாது மறைந்து நின்று தொழில்களையெல்லாம் நடத்துகின்றனனென்பது நூற்கொள்கை. "திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை, படர்பொருள் முழுவது மாயவையவைதொறும், உடல்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன், சுடர்மிகு சுருதியுளிவையுண்டசுரனே" என்னும் திருவாய்மொழியையும் காண்க. ஆகி - உவமவுருபு. இனி, 'ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்றபடி காணப்படுந் தோற்றமுடைய உடம்பும் உயிரும் என்ற அனைத்தின் வடிவமாய் எனினும் அமையும். 'வளமதில்' என்ற பாடத்துக்கு - அழகிய மதிலென்க. மூன்றுமடியிற்கூறியதுபோன்ற திருமாலுக்குஉரிய அடைமொழிகள், அவனது அவதார விசேஷமான கண்ணனுக்கும் பொருந்தும். எங்கெங்கும் என்ற அடுக்கு - பன்மைபற்றியது. நீதி தவறாத அரசாட்சி கோணுதலில்லாத கோல் போலுதலால், அதனைச் செங்கோல் என்றது - உவமவாகுபெயர்; இதன் எதிர்மொழி - கொடுங்கோல்; வளைவான கோல்போல நீதிகோணியதென்பதாம். ஆளுகைகைக் கோலென்றும், கட்டளையைச் சக்கரமென்றுங் கூறுதல் - கவிமரபு. (24)

இதுமுதல் நான்குகவிகள் - துவாரகாபுரியின் வருணனை: அவற்றுள் இம்முதற்கவி - மதிலின் சிறப்பைக் கூறும்.

4. மாடநீள்வீதிமூதூர்வயங்குமாமதிலின்தோற்றம்
ஏடவிழ்துளபமாலங்கிருந்தனனென்றுகேட்டுச்
சேடன்வந்தநந்தகோடிசெங்கதிர்மணியின்பத்திச்
சூடிகாமகுடத்தோடுஞ்சூழ்ந்ததோர்தோற்றம்போலும்.

(இ - ள்.) மாடம் - பெரிய மாளிகைகளையுடைய, நீள் - நீண்ட, வீதி - தெருக்களையுடைய, முது ஊர் - பழமையான துவாரகாபுரியின் புறத்தில், வயங்கும் - விளங்குகின்ற, மா - பெரிய, மதிலின் - மதிலினது, தோற்றம் - காட்சி, (எத்தன்மையதெனின்),—சேடன் - (திருமாலுக்குச் சயநமான) ஆதிசேஷன், ஏடு அவிழ் துளபம் மால் அங்கு இருந்தனன் என்று கேட்டு - இதழ்கள் விரிந்த திருத்துழாய் மாலையையுடைய திருமால் அந்நகரத்தில் (கண்ணனாய்) எழுந்தருளியிருக்கிறானென்று செவியுற்றறிந்து, அநந்த கோடி - அநேக கோடிகளான, செம் கதிர் மணியின் பத்தி சூடிகா மகுடத்தோடும் - சிவந்த ஒளிபொருந்திய மாணிக்கங்களின் வரிசைகளோடு கூடிய உச்சிக் கொண்டையையுடைய (தனது ஆயிரம்) முடிகளுடனே, வந்து சூழ்ந்தது ஓர் தோற்றம் - வந்து சூழ்ந்ததாகிய ஒருகாட்சியை, போலும் - ஒக்கும்; (எ - று.)

மதிலினது வளைவு பருமை நீட்சிகளுக்கு - ஆதிசேஷனது உடம்பின் வளைவு பருமை நீட்சிகளும், காஞ்சில் முதலாக மதிலின்

மீது உயர்ந்து தோன்றுகிற உறுப்புக்களுக்கு - ஆதிசேஷனது சூட்டோடுகூடிய தலைகளும், மதிலின்மேல் இழைக்கப்பட்டுள்ள இரத்தினங்களுக்கு ஆதிசேஷனது தலையிலுள்ள மாணிக்கங்களும் உவமையாம். இங்கு ஆதிசேஷன் வருவதற்கு, 'ஏடவிழ்துளபமாலங்கிருந்தனன் என்றுகேட்டு' எனக்காரணங் கற்பித்தபடி, இது - தற்குறிப்பேற்றவணி. சராசந்தனும் காலயவனனும் ஏககாலத்தில் மதுரையில் வந்து எதிர்த்தால் யாதவர்களுக்கு நாசமுண்டாகக் கூடுமென்று கருதிக் கண்ணன் மதுரையிலுள்ள குடிகளை வேற்றிடத்திற் சேர்ப்பிக்கும் பொருட்டுச் சமுத்திரராசனைப் பன்னிரண்டு யோசனை தூரம் இடம் விடும்படி கேட்டு அவ்விடத்தில் மிகவும் அழகாய்ப் புதிதாக நிருமித்துவைத்த துவாரகா நகரத்தை 'மூதூர்' எனப் பழையதாகக் கூறினது, அந்நகரம் பகவானது சங்கற்பத்தால் செயற்கைபோலத் தோன்றாமல் சிருஷ்டிகாலத்தில் இயற்கையாய்த் தோன்றினதுபோல அமைந்ததாதலினென்க; அன்றியும், கண்ணனது பழைய இராசதானியான மதுராபுரிபோலவே எல்லாம் அமைந்ததாதலின் மூதுரென்றதாகவுங் கொள்ளலாம்.

மாடம் - உபரிகை வீடு. தோற்றம் - தோன்றும் நிலை. சேடன் என்ற சொல்லுக்கு-(பிரளயகாலத்திலும் அழியாது) மிகுபவனென்று பொருள்; நித்தியனென்று கருத்து: சேஷித்தல் - விஞ்சுதல். இனி, சேடனென்பது - "சென்றாற்குடையாம் இருந்தாற் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் நீள் கடலுள்—என்றும், புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம், திருமாற்கரவு" என்றபடி திருமாலுக்குப் பலபடியாக சேஷவிருத்தியை [அடிமைத்தொழிலை]ச் செய்வதால் வந்த பெயரெனினும் அமையும். மகுடம் என்னும் சொல், இங்கே தலைக்கு இலக்கணை. (25)

இது - அகழியின் அமைதி கூறுகின்றது.

5. கார்க்கடல்வண்ணன்றன்பாற்கண்டுயிலொழிந்துபோந்து
மேற்கடற்றுவரைமூதூர்மேவரும்விரகுநோக்கிப்
போர்க்கடற்பொறிகள்யாவும்பொறித்தவப்புரிசைதன்னைப்
பாற்கடல்வளைத்ததொக்கும்பன்மலரகழியம்மா.

(இ - ள்.) பல்மலர் - பலவகையான புஷ்பங்களையுடைய, அகழி - அகழியானது,—பால் கடல் - திருப்பாற்கடல், கார் கடல் வண்ணன் - கருங்கடல் போன்ற திருநிறத்தையுடைய திருமால், தன்பால் - தன்னிடத்தில், கண் துயில் ஒழிந்து - யோகநித்திரை செய்தலைவிட்டு, போந்து - சென்று, மேல் கடல் துவரை மூதூர் மேவரும் - மேற்கடலிலேயுள்ள துவாரகையாகிய பழைய நகரிலே எழுந்தருளியிருக்கிற, விரகு - உபாயத்தை, நோக்கி - பார்த்து, —போர் கடல் பொறிகள் யாவும் - போராகிய கடலைக் கடத்தற்கு உரிய (ஆயுதரூபமான) பலவகை யந்திரங்களையும், பொறித்த - தாங்கிய, அ புரிசை தன்னை - அந்த (த்துவாரகாநகரத்தின்) மதிலை, வளைத்தது - வந்துசூழ்ந்ததை, ஒக்கும் - போலும்; (எ-று.)— அம்மா - ஈற்றசை; அவ்வகழியின் ஆழம் பரப்பு முதலியவற்றைக் கருதின வியப்புப்பற்றி வந்ததுமாம்.

திருப்பாற்கடல் தனது நடுவிற் பள்ளிகொள்ளுகின்ற திருமால் அவ்விடத்தைவிட்டு இந்தத் துவாரகாபுரியில் வந்திருக்கிறானென்பதைக் கேள்வியுற்று இங்குத்தானே வந்து இந்நகரத்து மதிலைச் சூழ்ந்தது போன்றுள்ளது, அந்தத் துவாரகாநகரியின் மதிலைச் சூழ்ந்துள்ள அகழி யென்க. இதுவும் தற்குறிப்பேற்றவணி. அவ்வகழி நீரின் ஆழ்ச்சி, அகற்சி, நீட்சி, தெளிவு என்பவற்றிற்குப் பாற்கடல் உவமையாம். "வாளாற் காய்ந்தே கடந்தான் பகை வேலை" என்றாற்போல, 'போர்க்கடற்பொறிகள்' என்றார்; இனி, போர்க்கு அடல் எனப் பதம்பிரித்து, போர்செய்தற்கு வலிமையையுடைய யந்திரங்களென்றுமாம்; பொறிகள் - நூற்றுவரைக்கொல்லி முதலாகச் சிந்தாமணியிலும் பிற நூல்களிலுங் கூறப்பட்டவை. கண் துயில் - எல்லாப்பொருள்களையும் மனத்தாற்கண்டுகொண்டே, வெளிக்கு உறக்கமாகப் பாவனைகாட்டும் அறிதுயில். பன்மலர் - தாமரை முதலியன. அகழப்படுதலின், அகழியென்று காரணப் பெயர்: அகழ்தல் - தோண்டுதல். விரகு - மாயை; தந்திரம். (26)

இது - கொடிகளின் காட்சி.

6. ஈண்டுநீவரினுமெங்களெழிலுடையெழிலிவண்ணன்
பாண்டவர்தங்கட்கல்லாற்படைத்துணையாகமாட்டான்
மீண்டுபோகென்றென்றந்தவியன்மதிற்குடுமிதோறுங்
காண்டகுபதாகையாடைகைகளாற்றடுப்பபோன்ற.

(இ - ள்.) வியன் - விசாலமான, அந்த மதில் - அந்நகரத்து மதில்களின், குடுமிதோறும் - சிகரங்களிலெல்லாம், காண் தகு - காணுதற்குத்தக்க [மிக அழகிய], பதாகை ஆடை - கொடிச்சீலைகள்,—'ஈண்டு நீ வரினும்-இந்நகரத்திற்கு நீ வந்தாலும், எழில் உடை - அழகையுடைய, எங்கள் எழிலி வண்ணன் - மேகம்போன்ற திருநிறத்தையுடைய எங்கள் தலைவனான கண்ணபிரான், பாண்டவர் தங்கட்கு அல்லால்-பாண்டவர்களுக்குப் (படைத்துணையாவனே) அல்லாமல், படை துணை ஆகமாட்டான் - (உனக்குப்) போருக்கு உதவியாகமாட்டான்; (ஆதலால், நீ இங்குவருவதிற் பயனில்லை); மீண்டு போகு - திரும்பிப் போய்விடு, என்று என்று - என்று பலமுறை தெரிவித்து, கைகளால் தடுப்ப - (தமது) கைகளினால் அசைத்து (த் துரியோதனனது வருகையை)த் தடுப்பவற்றை, போன்ற - ஒத்தன; (எ - று.)

துரியோதனன் அந்நகரத்தினருகில் செல்லும்பொழுது, அந்நகரத்து மதில்களின்மேலுள்ள கொடிகள் காற்றில் இயற்கையிற் பலமுறை அசைதலை அத்துரியோதனனை நோக்கி நீ இங்கு வாராதே' என்று குறிப்புக் காட்டிக் கைகளால் மறுத்துத் தடுப்பது போன்றதென வருணித்தார், தற்குறிப்பேற்றவணி. கொடிச்சீலையைக் கையாகவும், துவசதண்டத்தை அந்தக்கைக்கு உடையவனாகவும் கருதுக; பதாகையைக் கைகளாகவும், ஆடையைக் கைவிரல்களாகவுங் கொண்டு, மதிலை அவற்றிற்கு உடையவரெனக் கருதுதலும் அமையும். 'ஈண்டு நீ வரினும் என்றது' மற்றையரசர்களுக்குப் போலத் தூது போக்காமல் நீயே நேரில்வரினும் என்பது தோன்றநின்றது. என்று என்று - அடுக்கு; பலமுறை குறிக்கும். (27)

இது - நகர வருணனை.

7. அருள்குடியிருக்குங்கண்ணனவதரித்தனனென்றெண்ணித்
தரணியின்மீதுவந்துதன்னுடைச்சோதிவைகும்
பரமமாஞானபோகப்பதிகுடியிருந்ததன்ன
திருநகர்வீதிபுக்கான்சித்தசித்துணர்விலாதான்-

(இ - ள்.) 'அருள் குடி இருக்கும் கண்ணன் - கருணை நிலைத் திருக்கப்பெற்ற திருக்கண்களையுடைய திருமால், அவதரித்தனன் - (கண்ணனாகத்) திருவவதாரஞ்செய்தருளினான்,' என்று எண்ணி- என்று மனத்தில் அறிந்து, தன்னுடை சோதி - தன்னுடைய (கண்ணனது எல்லா அவதாரங்களுக்கும் ஆதிகாரணமான) ஒளி வடிவமான சொரூபம், வைகும் - நிலையாய் எழுந்தருளி யிருக்கப் பெற்ற, பரமம் மா ஞானம்-(எல்லா அறிவுகளினும்) மேலான சிறந்த தத்துவ ஞானத்தாற் பெறுதற்கு உரிய, போகம்-நிரதிசயப்பேரின் பத்தைத் தருகிற, பதி - பதவியான வைகுண்ட நகரம், தரணியின் மீது வந்து - பூமியிலே (இழிந்து) வந்து, குடி இருந்தது அன்ன - குடியிருந்ததைப் போன்ற, திரு நகர் - சிறந்த துவாரகா நகரத் தினது, வீதி - திருவீதியில்—சித்து அசித்து உணர்வு இலாதான்- சித்தின் நிலைமையையும் அசித்தின் நிலைமையையும் அறிதலில்லாத துரியோதனன், புக்கான் - சேர்ந்தான்: (எ - று.)

மிகுந்த இன்பந்தருகிற நகரமாதல்பற்றித் துவாரகையை வைகுந்த நகரம் வந்ததுபோன்றதென்றார்: முதலடி - இதற்குக் காரணங் கற்பித்தவாறு. தற்குறிப்பேற்றவணி. முத்திதரும் நகரம் ஏழனுள் துவாரகை ஒன்றாதலால், முத்திபெறுதற்குக் காரண மாகிய அந்நகருக்குப் பயனாகிய முத்தியுலகத்தையே உவமை கூறுதல் ஏற்கும்; அன்றியும், திருமால் எழுந்தருளியுள்ள நகரத் துக்கு - அத்திருமாலின் திவ்விய நகரந்தானே உவமை கூறத்தகும். "வெற்றவின்பம் விளைவிப்பான் விண்ணுவந்து வீழ்ந்தென, மற்றை நாடு வட்டமாக வைகுமற்றந்நாட்டரோ" எனச் சிந்தாமணியி லும் நாட்டின் இன்பந்தருதற் சிறப்புக்கு மேலுலகப் பதவியையே உவமை கூறியவாறு காண்க. பிறர்மேற் கண்சென்றவிடத்து அவ் வழியே கருணை நிகழ்தலாலும், கருணைக் குறிப்பு கண்ணின் நோக் கத்தில் காணப்படுதலாலும், 'அருள்குடியிருக்குங் கண்ணன்' என்றது. அவதரித்தல் - அங்கு நின்று இங்கு இழிதல். உயிர் என்றும் நிலைத்திருக்குந் தன்மையையும் உடல் நிலைத்திராததன்மையையும் ஆராய்ந்து அறியாமல், சித்தாகிய உயிருக்கு நற்கதிபெறுதற்கு வேண்டிய நற்றொழில்களுள் ஒன்றையுஞ் செய்தலின்றி, அசித்தாகிய உடம்பை வளர்த்தற்குவேண்டிய பாடுகளையே எப்பொழுதும் பட்டு அலைபவனாதலால், துரியோதனனை 'சித்தசித்துணர்விலாதான்' என்றார். பரமம்ஆம் ஞானம் என்றும் பிரிக்கலாம்; சிறந்ததான அறி வென்க. தரணீயென்னும் சொல்லுக்கு - (எல்லாப்பொருள்களையுந்) தரிப்பதென்று பொருள். தரணியின்மீது வந்து என்பது-'அவதரித் தனன்' என்றதனோடும் இயைதற்குஏற்றதாம். சித் என்பதற்கு உணர்வுடையதென்றும், அசித் என்பதற்கு உணர்வில்லாத

தென்றும் பொருள். சித் சேதநம் என்பனவும், அசித் அசேதநம் என்பனவும்-ஒருபொருளன. சித்து-ஆத்மா, அசித்து-தேகம். (28)

ஸ்ரீ கிருஷ்ணன் அப்போது பள்ளிகொண்டிருத்தல்.

8. வந்தமையறிந்துகொற்றவாயிலோர்தம்மைநோக்கி
அந்தன்மாமதலைவந்தாலறிவியாதழைமினென்று
சந்திரனொடுங்கிநிற்பத்தபனனேசரிக்குமாறு
பந்தனையிலாதான்யோகத்துயில்வரப்பள்ளிகொண்டான்.

(இ - ள்.) பந்தனை இலர்தான் - (இயல்பாகவே) பாசங்களின் தொடர்ச்சியில்லாத கண்ணபிரான்—வந்தமை அறிந்து - (துரியோதனன் அருச்சுனனுக்கு முன்பு துவாரகைக்குள்) வந்து சேர்ந்துவிட்ட செய்தியை (த் தனது ஞானதிருஷ்டியால்) உணர்ந்து, கொற்றம் வாயிலோர் தம்மை நோக்கி - வெற்றி விளங்கும் (தனது அரண்மனை) வாயில் காவலாளரைப் பார்த்து, 'அந்தன் மாமதலை வந்தால் - பிறவிக்குருடனான திருதராட்டிரனது மூத்த குமாரனான துரியோதனன் இங்கு வந்தால், அறிவியாது - (எனக்கு முன்பு செய்தி) தெரிவிக்காமலே, அழைமின் - (அவனை உள்ளே) வரவிடுங்கள்,' என்று-என்று கட்டளையிட்டு, சந்திரன் ஒடுங்கி நிற்ப தபனனே சரிக்கும் ஆறு-சந்திரகலை குறைந்து நிற்கச் சூரியகலையே மிகுதியாக உலாவும்படி, யோகம் துயில் வர - (தனக்கு வழக்கமான) யோக நித்திரை வந்து பொருந்த, பள்ளிகொண்டான் - சயனித்துக்கொண்டான்; (எ-று.)

மூக்கின் இடப்பக்கச் சுவாசத்துக்குச் சந்திரகலை யென்றும், வலப்பக்கச் சுவாசத்துக்குச் சூரியகலை யென்றும் பெயராதலால், சந்திரன், தபனன் என்பன - அக்கலைகளை உணர்த்தின; சாய்ந்த பக்கத்துச் சுவாசம் அதிகப்பட்டும், மற்றைப் பக்கத்துச் சுவாசம் குறைந்தும் நிற்குமாதலால், வலப்பக்கம் ஒருக்கணித்துச் சாய்ந்து படுத்தன னென்பார், 'சந்திரன் ஒடுங்கி நிற்பத் தபனனே சரிக்குமாறு' என்றார்: திருமால் பள்ளிகொள்கையில் வலப்புறமாக ஒருக்கணித்திருத்தல் வழக்கமாதலை "குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்புகாட்டித் தென்திசை யிலங்கை நோக்கிக், கடல்நிறக் கடவுளெந்தை அரவணைத் துயிலுமா கண்டு, உடலெனக் குருகுமாலோ என்செய்கே னுலகத்திரே" என்கிற திருமாலைப் பாசுரங் கொண்டும், "தாமக்கடையுகத்துள்ளே விழுங்கித்தரித்த பழஞ், சேமப் புவனஞ் செரிக்குமென்றே சிவன்மாமுடிக்கு, நாமப்புனல்தந்த பொற்றா ளரங்கர் நலஞ்சிறந்த, வாமத்திருக்கரமேலாகவே கண்வளர்வதுவே" என்னுந் திருவரங்கத்துமாலைச் செய்யுளாலும் அறிக. சந்திரகலை இடைகலை என்பன - இடமூக்கின் நாடிக்கும், சூரியகலை, பிங்கலை என்பன - வலமூக்கின் நாடிக்கும் பெயராம். இனி ஒளியிற்குறைவுள்ள சந்திரன் ஒடுங்கி நிற்க ஒளியில் மிகுந்த சூரியனே சஞ்சரிக்கும்படி எனறது- ஆற்றலிற் குறைவுள்ள துரியோதனன் அழிவுபெற, ஆற்றலில் மேம்பட்ட அருச்சுனனே வென்று வாழும்படி திருவுள்ளத்திற் கருதி என்ற பொருளைப் பிறிதுமொழிதலென்னும் அணியின்

வகையால் விளங்குவதாகக்கொள்ளல் பொருந்தும். எல்லாப் பொருளையும் பற்றிநின்றே பற்றற்ற இறைவனென்பார், 'பந்தனை யிலாதான்' என்றார்; தனக்கு இயல்பாகக் கரும சம்பந்தமில்லை யென்பதனோடு, தனக்குச் சரீரமாகவுள்ள சராசரங்களின் கருமத்தின் தொடர்ச்சியும் பகவானுக்கு இல்லையென்பது இதில் விளங்கும்: உடம்பினுள்ளிருந்து தொழில் செய்விக்கிற உயிருக்கு அவ்வுடம்பின் குணமான கருமை செம்மை பெருமை சிறுமை வளர்ச்சி தேய்வு முதலியவற்றின் தொடர்ச்சி இல்லாதவாறு போல, அச்சீவான்மாவினுள்ளிருந்து தொழில்செய்விக்கின்ற பரமான்மாவுக்கும் அவ்வுயிரின் குணங்களாகிய நல்வினை தீவினை முதலியவற்றுள் யாதொரு சம்பந்தமும் இல்லையென அறிக. அறிவியாது அழைமின் என்றது - முன்னே அருச்சுனனைக் கண்டு அவனுக்குத் தான் படைத்துணையாம்படி அருள்புரியவேண்டுமென்னுந் திருவுள்ளத்தால் என்க. 'கொள்கை கொள்ளாமை யிலாதான், எள்கலிராகமிலாதான்'' ''ஈடுமெடுப்புமிலீசன்'' ''வேண்டுதல் வேண்டாமையிலான்''. ''பகைநண்பொடில்லான்'' என்றபடி இயற்கையில் இறைவன் விருப்புவெறுப்பில்லாதவனாயினும், அவதாரகாரியமான துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநத்தின் பொருட்டு ஒருவனிடத்தில் விருப்பும் ஒருவனிடத்தில் வெறுப்புங் காட்டினனென்பது, 'பந்தனை யிலாதான் யோகத்துயில் வரப் பள்ளிகொண்டான்' என்றதில் தொனிக்கும். யோகத்துயில், அறிதுயில், விழிதுயில், துயிலாத் துயில், பொய்த்துயில் என்பன ஒரு கருத்துடையன. தபநன் என்பதற்கு-(எல்லாப்பொருள்களையும்) தபிப்பவனென்று பொருள். (29)

## துரியோதனன் ஸ்ரீ கிருஷ்ணபகவான் பள்ளிகொண்ட சயனத்தின் தலைப்பக்கத்தி லிட்ட ஆசனத்திற் சேர்தல்.

8. பொற்புடைப்புனிதன்கோயிற்புறத்தினிலனிகநிற்பச்
சற்பவெம்பதாகைவேந்தன்றடையறத்தனிச்சென்றெய்தி
உற்பலவண்ணன்பள்ளியுணர்தருகாறுமிட்ட
சிற்பவண்டவிசினேறித்திருமுடிப்பக்கஞ்சேர்ந்தான்.

(இ - ள்.) சற்பம் வெம் பதாகை வேந்தன்-பாம்பின் வடிவத்தை யெழுதின பயங்கரமான துவசத்தையுடைய துரியோதனராசன்—பொற்பு உடை புனிதன் கோயில் புறத்தினில் - அழகையுடைய பரிசுத்தமூர்த்தியான கண்ணபிரானது அரண்மனையின் வெளிப்புறத்திலே, அனிகம் நிற்ப - (தனது) சேனை நின்றுவிட—தனி - தான் தனியனாய், தடை அறசென்று எய்தி - தடையில்லாமல் உள்ளே போய்ச்சேர்ந்து, உற்பலம் வண்ணன் பள்ளி உணர்தரு காறும் - கருங்குவளைமலர்போன்ற திருநிறத்தையுடைய அக்கண்ணபிரான் தூக்கம் விழித்தெழுந்திருக்குமளவும், இட்ட - (அங்கு) அமைத்து வைக்கப்பட்ட, சிற்பம் - விசித்திர வேலைப்பாடமைந்த, வண் தவிசின் - அழகிய (பெரிய) சிங்காசனத்தில், ஏறி - வீற்றிருந்து, திருமுடி பக்கம் சேர்ந்தான் - (கண்ணபிரானது) அழகிய முடியின் பக்கத்தை அடைந்தான்; (எ - று.)

துரியோதனன் அளவிறந்த செருக்குக் கொண்ட வணங்காமுடி மன்னனாதலால், அங்கு இருந்த ஆசனங்களுள் சிறந்ததொன்றன் மேலேறி உட்கார்ந்து அதனைக் கண்ணனது தலைப்பக்கத்தே சேர்த்திருந்தன னென்க. கீழ், 'அந்தன் மாமதலைவந்தா லறிவியாதமைமின்' என்றதனால், தடையறச் சென்று எய்துபவனானான். இனி, அடிப் பக்கத்தினுஞ் சிறந்த முடிப்பக்கமென்பார், 'திருமுடிப்பக்கம்' என்றா ரென்றுங்கொள்ளலாம்; திரு - சிறப்பு. பொற்பு - பொலிவுணர்த்தும் உரிச்சொல். பள்ளியென்னும் படுக்கையின் பெயர், துயிலுக்கு ஆகுபெயர். மயிர் - முடியப்படுதலால், முடியென்று தலைக்குப் பெயர். (30)

## அருச்சுனன் திருவடிப்பக்கத்தில் வந்துசேர, ஸ்ரீகிருஷ்ணன் முந்துற அவனைக் கடாட்சித்தல்

10. வந்திலன்விசயனென்றுவான்றுயில்புரிந்தவண்ணல்
சிந்தனைசெய்யும்வேளைச்சிந்தையிற்கடியதேரோன்
பந்தனையறுக்கும்பாதபங்கயம்பணிந்துநிற்ப
முந்துறவிழித்துநோக்கிமுகமலர்ந்தருள்செய்தானே.

(இ - ள்.) வான் துயில் புரிந்த அண்ணல் - சிறந்த யோகநித்திரையைக் கொண்டருளின கண்ணபிரான், விசயன் வந்திலன் என்று - (இன்னும்) அருச்சுனன் வந்தானில்லையே யென்று, சிந்தனை செய்யும் வேளை - (அருச்சுனனது வருகையை) நினைத்தல் செய்கிற சமயத்திலே, சிந்தையின் கடியதேரோன் - மனோவேகத்தினும் மிக்க வேகமுடைய தேரையுடைய அருச்சுனன், (வந்து), பந்தனை அறுக்கும் பாத பங்கயம் பணிந்து நிற்ப - (சரணமடைந்த அடியார்களுடைய) வாழ்வினைக்கட்டுக்களை அறுத்தருளுகிற செந்தாமரைமலர்போலும் (கண்ணபிரானது) திருவடிகளைச் சேவித்து (அத்திருவடிப்பக்கத்தில்) நிற்க,—(ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி), முந்துற விழித்து நோக்கி - முற்பட (அவ்வருச்சுனனை) விழித்துப் பார்த்து, முகம் மலர்ந்து அருள் செய்தான்-(மகிழ்ச்சியால்) திருமுகமலர்ச்சி பெற்று (அவன் பக்கல்) கருணைபுரிந்தான்; (எ - று.)

'வந்திலன் விசயனென்று' என்பதுவே, வான் துயில் புரிந்ததற்குங் காரணமாம். மற்றையோரது தூக்கம்போலத் தம்மை மறந்து உறங்கும் உறக்கமின்றி எல்லாவற்றையும் அறிந்து நின்றே ஆலோசனையோடு செய்வது யோக நித்திரை யாதலால், வான் துயிலென அதனைச் சிறப்பித்தார். எவ்வளவு தூரத்திலுள்ள பொருளையும் நினைத்தமாத்திரத்தில் மனம் அப்பொருளினிடத்துச் செல்லுதலால், அது - மிக்க விரைவுக்கு உவமை கூறப்படும்; அதனினும் அதிகமான விரைவையுடைய குதிரைகளைப் பூட்டிய இரத மென்பார், 'சிந்தையிற் கடிய தேர்'' என்றார். சிறந்த வலியதொரு தேரும், விரைந்த அழகிய நான்கு வெள்ளைக் குதிரைகளும் காண்டவதகனகாலத்தில் அருச்சுனனுக்கு அக்கினிபகவானால் அளிக்கப்பட்டன என அறிக. ''உடற் பகையை வேரறுக்கு மொள்வாள்'' ஆதலால், 'பந்தனையறுக்கும் பாதம்' என்றார்; வாழ்வினைத் தொடர்ச்சியை ஒழித்தலைக் கட்டறுத்தலாக உருவகப்படுத்திய

தற்கு ஏற்ப, திருவடியை வாளென்றது - ஏகதேசவுருவகம். விழித்து நோக்கி அருள் செய்தானென்பது - கிருபாகடாக்ஷம் வைத்தான், கண்ணோட்டஞ் செய்தான் என்றதாம். அருச்சுனன் கண்ணனிடத்தில் மெய்யன்பும் விநயமு முடையவனாதலால், அவன் காற்கடையில் வணங்கி நின்றானென்க. பங்கயபாதம் - முன்பின்னாகத் தொக்குவந்த உவமைத்தொகை; திருவடியாகிய தாமரையென உருவகமாக்கி உரைத்தற்கு இங்கே இயைபின்று; பாதபங்கயஞ் சூடியென வருமாயின் உருவகமாகும். வந்து மாலைப் பணிந்து மன்னையும் வணங்கி நிற்ப, என்ற பாடத்திற்கு - வந்து திருமாலினவதாரமாகிய ஸ்ரீகிருஷ்ணனை வணங்கிப் பின்பு தனக்கு அண்ணனாகின்ற துரியோதன மகாராசனையும் வணங்கி நிற்க எனப் பொருள் காண்க. வந்து மாலைப் பணிந்து பின்னையும் வணங்கி நிற்ப என்று சில பிரதிகளில் மூன்றாமடி. (31)

அருச்சுனனால் துரியோதனனது வருகையை யறிந்து ஸ்ரீகிருஷ்ணன் அவனுக்கு முகமன் கூறுதல்.

நின்றவனிருந்தவேந்தன்வரவினை நிகழ்த்தநேமிப்
பொன்றிகழ்படையோனந்தப்பொய்த்துயிற்பாயனீங்கி
மன்றலந்தொடையன்மார்பாவரவெமக்குரைசெயாதென்
என்றுரநெருங்கப்புல்லியின்சொலாலுவகைசெய்தான்.

(இ - ள்.) (பின்பு), நின்றவன் - (திருவடிப்பக்கத்தில் வணங்கி) நின்ற அருச்சுனன், இருந்த வேந்தன் வரவினை நிகழ்த்த - (திருமுடிப்பக்கத்தில் பெரிய ஆசனத்தி லேறி) வீற்றிருந்த துரியோதனனது வருகையைச் சொல்லித் தெரிவிக்க, (உடனே), நேமி பொன் திகழ் படையோன் - (சுதரிசனமென்னுஞ்) சக்கரமாகிய அழகு விளங்கும் ஆயுதத்தையுடைய அக்கண்ணன், அந்த பொய் துயில் பாயல் நீங்கி - பொய்யான உறக்கத்தைக் கொள்ளுதற்கு இடமாயிருந்த அந்தப் படுக்கையை விட்டு எழுந்து (மரியாதை செய்து அத் துரியோதனனை நோக்கி), மன்றல் அம் தொடையல் மார்பா - பரிமளத்தையுடைய அழகிய (நஞ்சாவட்டைப்பூ) மாலையைத் தரித்த மார்பையுடைய அரசனே! 'வரவு எமக்கு உரை செயாது என் - (உன்னுடைய) வருகையை நமக்குத் தெரிவியாதது என்ன காரணம்' என்று - என்று சொல்லி,—உரம் நெருங்க புல்லி - (அவனைத் தன்) மார்போடு இறுகத் தழுவி, இன் சொலால் உவகை செய்தான் - இனிய உபசாரவார்த்தைகளைக் கூறி (அவற்றால் அவனுக்கு) மகிழ்ச்சியை உண்டாக்கினான்; (எ - று.)

தன்னைக் காண வந்து தனது திருவடிப்பக்கத்தில் நின்று தனது திருவருளுக்குப் பாத்திரனான அருச்சுனன், அப்போது துரியோதனன் வந்திருப்பதை ஸ்ரீ கிருஷ்ணனிடம் தெரிவிக்க, அந்தப் பரமன் தான் யோகநித்திரை செய்த அந்தப் படுக்கையினின்று உடனே எழுந்து "நீ வந்ததை எனக்கு ஏன் அறிவிக்கவில்லை?" என்று அவன் மனமகிழும்படி இன்சொற் கூறி அவனைத் தழுவிக்கொண்டனனென்பதாம். எம்பெருமானுக்குச் சக்கரம்

முதலியன - பகைவர்களுக்கு அச்சஞ்செய்து ஆயுதகோடியிலும், அடியார்களுக்கு அழகு செய்து ஆபரணகோடியிலும் அமைதலால், 'நேமிப்பொன்திகழ்படை' என்றார். பொன் திகழ்தல் - பொன் போல விளங்குதலுமாம். பொய்த்துயிற் பாயல் - 'பொய்யுறக்கங் கொண்டபிரான்'' என்றார் பெருந்தேவனாரும். உரை செய்தல் - சொல்லுதலைச்செய்தல்; என்றது, சொல்லுதலை முன்பு தூதன் மூலமாகச் செய்திதெரிவியாமை, பின்புவாயில் காவலாளராலறிவி யாமை, அதன்பின்பு தான் நேரிலெழுப்பாமை இவையெல்லாவற் றையும் அடக்கி, 'உரைசெயாதென்' என்றார். கீழ்க் களங்கமின்றி அருச்சுனனுக்கு முகமலர்ந்து அருள் செய்ததனினும் வேறுபாடு விளங்க, 'இன்சொலாலுவகை செய்தான்' என்றார்; துரியோதன னுக்கு மகிழ்ச்சியுண்டாக்கினது, சொல் மாத்திரத்தாலென்க. (32)

## கிருஷ்ணன் இருவரையும் வந்த காரியத்தை வினவ, இருவரும் தெரிவித்தல்.

12. இருவிரும்வந்தவாறென்னியம்புதிரென்றுவாச
மருவிரிதுளபமாலைமரகதவண்ணன்கேட்பச்
செருவினீயெமக்குவெம்போர்செய்துணையாகவேண்டும்
பொருவிலோயென்றுகொண்டவ்விருவரும்புகன்றகாலை.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) (பின்பு இருவரையும் நோக்கி), வாசம் - பரிமளத் தையும், மரு - தேனையுமுடைய, விரி - மலர்ந்த, துளபம் மாலை - திருத்துழாய் மாலையையுடைய, மரகதம் வண்ணன்-மரகத ரத்தினம் போலும் திருநிறத்தையுடைய ஸ்ரீ கிருஷ்ணன், 'இருவிரும் வந்த ஆறு என் இயம்புதிர்' என்று கேட்ப - நீங்கள் இரண்டுபேரும் வந்த காரியம் யாது? கூறுவீர்' என்று (பொதுப்பட) வினவ—அ இருவரும் - துரியோதனனும் அருச்சுனனும், 'பொருவு இலோய் - ஒப்பில்லாதவனே! நீ—, செருவில்- (இனி நிகழும்) போரில், எமக்கு—, வெம் போர் செய் துணை ஆகவேண்டும் - கொடிய போரைச்செய்யும் உதவியாகவேண்டும்,' என்று கொண்டு புகன்ற காலை - என்று (ஒருபடிப்படச்) சொன்னபொழுதில்—(எ - று.)— 'சொன்னான்' என, மேற்கவியில் முடியும்.

ஒப்பில்லாமை கூறவே, உயர்வில்லாமை தானே விளங்கும். இனி, பொரு விலோய், எனப் பிரித்து. வினைத்தொகையாக, போர் செய்யும் வில்லையுடையவனே யென்றுங் கொள்ளலாம். திருமா லின் வில்லுக்குச் சார்ங்கமென்று பெயர். கொண்டு - அசை; 'என்றுகொண்டினையகூறி' எனக் கம்பராமாயணத்திலுங் காண்க: இது அசையாதலைப் புறனடைச் சூத்திரத்தாற் கொள்க: இனி, என்றுகொண்டு - என்று கருத்தமைத்து என்றலுமொன்று. இருவரும் பொருவிலோய் என விளித்தது, தம்மின் வலியனாதலை நோக்கி. துரியோதனன் வார்த்தையில் எமக்கு - செருக்குப்பற்றிய உயர்வுத்தன்மைப்பன்மையும், ஆகவேண்டும் - கட்டளைப்பொருள் வியங்கோளு மாகலாம். வாசம் மரு - மிகுந்த வாசனையென

ஒருபொருட்பன்மொழியுமாம். மரகதம் - பச்சை இரத்தினம்: பசுமை கருமை நீலம் இந்நிறங்களுக்கு வேறுபாடு கருதாது ஒற்றுமை நயம்படக்கூறுதல் கவிமரபாதலால், 'மரகதவண்ணன்' என்றார்; "பச்சைமாமலைபோல் மேனி" என்றார் தொண்டரடிப்பொடியாழ் வாரும். (33)

## ஸ்ரீ கிருஷ்ணன் தான் பாண்டவர்கட்கே போர்த்துணையாக வேண்டுமென்றல்.

13. உற்றமருதவிசெய்வானுதிட்டிரன்றனக்குமுன்னே
சொற்றனமாங்கணீங்குந்துயிலுணர்பொழுதத்தின்று
விற்றிறல்விசயன்முந்தவிழிக்கிலக்கானனென்று
பற்றறத்துணிந்துசொன்னான்பாண்டவர்சகாயனானன்.

(இ - ள்.) பாண்டவர் சகாயன் ஆனான் - பாண்டவர்களுக்குத் துணை செய்பவனான கண்ணபிரான்,— (துரியோதனனைநோக்கி), 'அமர் உற்று உதவி செய்வான் - போரிற் பொருந்தி உதவிசெய்யும் படி, உதிட்டிரன் தனக்கு - தருமபுத்திரனுக்கு, ஆங்கண் - அவ்வி டத்தில் (உபப்பிலாவியத்தில்) முன்னே சொற்றனம் - முன்னமே கூறினோம்; (தருமபுத்திரனுக்குப் போர்த்துணை செய்வதாக வாக்குத்தத்தஞ் செய்துவிட்டோமென்றபடி;) ஈங்கும் - இவ்விடத் திலும், இன்று-இப்பொழுது, துயில் உணர் பொழுதத்து - தூக்கம் விழிக்கும்பொழுதில், வில் திறல் விசயன் - வில்லில் வலிமையை யுடைய அருச்சுனனே, முந்த - முற்பட, விழிக்கு இலக்கு ஆனான் - (என்) கண்ணெதிரிற் பட்டான், என்று—, பற்று அற - (தான் படைத்துணையாதலில் துரியோதனனுக்கு இருந்த) ஆசை நீங்க, துணிந்து சொன்னான் - உறுதியாகச் சொல்லிவிட்டான்; (எ-று.)

'பற்றறத் துணிந்துசொன்னான் பாண்டவர் சகாயனானன்' என்றது - அருச்சுனனிடம் விருப்பமும் துரியோதனனிடம் வெறுப்புமாகப் பட்சபாதமில்லாமல் தக்க காரணம்பற்றி நடுவு நிலைமையாக நடத்துபவன்போல இங்ஙனம் நிச்சயித்துச் சொல்லிப் பாண்டவர்க்கே துணைவனானான் என்றவாறுமாம். யுதிஷ்டிரன் - போரில் ஸ்திரமாக இருப்பவன். (34)

## ஸ்ரீகிருஷ்ணன் படையைத் தொடேனென்று துரியோதனனுக்கு அவன் வேண்டுகோளின்படி வாக்களித்து, படை தொடாத என்னால் யாது பயனென்று அருச்சுனனிடம் வினவுதல்.

14. முடைகமழ்முல்லைமாலைமுடியவன்றன்னைப்போரிற்
படையெடாதொழிதியென்றுபன்னகதுவசன்வேண்ட
நெடியமாமுகிலுநேர்ந்துநினக்கினிவிசயபோரில்
அடுபடையின்றிச்செய்யுமாண்மையென்னறைதியென்றான்.

(இ - ள்.) (அதுகேட்டு), பன்னக துவசன் - பாம்புக்கொடியை யுடைய துரியோதனன், முடை கமழ் முல்லை மாலை முடியவன்

தன்னை - முடை நாற்றம் வீசுகின்ற முல்லைப்பூமாலையைச் சூடிய மயிர் முடியையுடைய கண்ணபிரானை, 'போரில் படை எடாது ஒழிதி என்று - யுத்தகளத்தில் (பாண்டவர் பக்கத்தில்) ஆயுதத்தை யெடாமல் ஒழிவாயாக' என்று சொல்லி, வேண்ட - பிரார்த்திக்க— நெடிய மா முகிலும் - பெரிய கரிய மேகம் போன்ற கண்ணனும், நேர்ந்து - (அவ்வேண்டுகோளுக்கு) உடன்பட்டு—(அருச்சுனனை நோக்கி), 'விசய - அருச்சுனனே! அடுபடை இன்றி - கொல்லவல்ல ஆயுதத்தை யெடுத்தலில்லாமல், போரில் - யுத்தத்தில், நினக்கு - உனக்கு, (உதவியாக), இனி செய்யும் - இனிமேல் (நான்) செய்யத் தக்க, ஆண்மை - ஆண்தொழில், என் - யாது? அறைதி - கூறுவாய்' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

'ஒழிமினென்று' எனப் பிரதிபேதம். முடைகமழ் என்ற அடைமொழி, கண்ணனுக்கு உரியது; முடை - நெய்க்கந்தம்: இடையர்க்கு உரிய இதனை, அவ்விடையர்சேரியில் வளர்ந்த கண்ணனது அடியார்க்கெளிமையை [சௌலப்பியத்தை] விளக்கும் பொருட்டு அக்கண்ணனுக்கு அடைமொழியாகக் கூறுதல், கவி மரபு; கண்ணன் திருவாய்ப்பாடியாகிய முல்லை நிலத்தில் வளர்ந்தவனாதலாலும், அந்நிலத்துக்கு முல்லை உரியதாதலாலும். "மாயோன் மேய காடுறை யுலகம்" என்றபடி அந்நிலத்துக்கு உரிய தெய்வம் கண்ணனாதலாலும், 'முடைகமழ் முல்லைமாலை முடியவன்' என்றது. பங்கம் என்பதற்கு - கால்களால் நடவாததென்றும். வளைவாகச் செல்வதென்றும் பொருள்: நெடிய - முன்னே திரிவிக்கிரமாவதார காலத்தில் நீண்ட, அல்லது பெருமைக் குணமுடைய என்றுங் கொள்ளலாம். (35)

## அருச்சுனனது உத்தரம்.

15. செருமலியாழியங்கைச்செழுஞ்சுடர்நின்றென்றேரிற்
பொருபரிதூண்டினிந்தப்பூதலத்தரசரொன்றோ
வெருவருமியக்கர் விண்ணோர்விஞ்சையரெனினுமென்கை
வரிசிலைகுழையவாங்கிமணித்தலைதுமிப்பனென்றான்.

(இ - ள்.) (அதற்கு அருச்சுனன்), 'செரு - போர்த் தொழிலில், மலி - மிக்குவிளங்குகிற, ஆழி - சக்கராயுதத்தையேந்திய, அம் - அழகிய, கை - வலத்திருக்கையையுடைய, செழுசுடர் - (எல்லா வொளிகளினுஞ்) சிறந்த ஒளி வடிவமான எம்பெருமானே! (நீ), என் தேரில் நின்று - எனது இரதத்தின்மீது (முன்புறத்தில்) எழுந்தருளி, பொரு பரி தூண்டின் - போர் செய்தற்கு உரிய குதிரைகளைச் செலுத்தினால், இந்த பூதலத்து அரசர் ஒன்றோ - இந்த நிலவுலகத்தினிடத்துள்ள (மனிதர்களான) அரசர்கள் மாத்திரமோ? (மற்றை எவ்வுலகத்திலுமுள்ள), வெருவரும் - (கண்டவர்) அஞ்சத்தக்க, இயக்கர் - யக்ஷர்களும், விண்ணோர் - தேவர்களும், விஞ்சையர் - வித்தியாதரர்களும், எனினும் - (எதிர்ப்பவர்) எவரானாலும், என் கை வரிசிலை-எனது கையிலுள்ள கட்டமைந்தவில்லை, குழைய வாங்கி-வளையும்படி வளைத்து, மணி தலை துமிப்பன்- (அவர்

களது) அழகிய தலைகளைத் துணித்திடுவேன்', என்றான் - என்று கூறினான்; (எ-று.)

இது - தனது வீரவாத முகத்தால் கண்ணனது மகிமையை விளக்கியபடியாம். கண்ணன் வேறொரு தொழிலுஞ் செய்யாது தேர்செலுத்துதல் மாத்திரமே அமையுமென்பது கருத்து; புறவிருளை மாத்திரமே ஒழிக்கவல்ல சூரிய சந்திர அக்கினியரென்னும் முச்சுடர்களின் ஒளியெல்லாவற்றினும் மேம்பட்ட ஒளியென்பார், 'செழுஞ்சுடர்' என்றார். சுடர் என்றது - நித்தியமாய் சுவயம்பிரகாசமான ஞானத்தைக் குணமாகவுஞ் சொரூபமாகவும் உடையவனென்றபடி. இங்கே சுடர் என்றது - சுடர் வடிவானவனுக்குப் பண்பாகுபெயரென்றாவது, தேவர்களை அஃறிணையாலுஞ் சொல்லலாம் என்ற நியாயம் பற்றி வந்த அஃறிணை யென்றாவது, உடைமைக்கும் உடையதுக்கும் உள்ள அபேதத்தை நோக்கின உபசாரவழக்கென்றாவது கொள்க.

"பொய்படுமொன்றோ" என்ற குறளில்[836],பரிமேலழகர் 'ஒன்றோ என்பது - எண்ணிடைச்சொல்' என உரைத்தனராதலால், இங்கும் அப்படியே கொள்ளவும். இயக்கர் முதலியோராயினும் என் கை வில்லை வளைத்துத் தலையை துணிப்பேன்: அப்படிப்பட்ட எனக்குப் பூதலத்தரசர், ஒன்றோ - ஒரு பொருளோ? என உரைத்தலும் ஒன்று. இயக்கர் முதலியவர் - பதினெண்தேவகணத்தினுட்பட்டவர். மாயவித்தையை யுடையவர், விஞ்சையர். வெருவரு என்பதை முத்திறத்தார்க்குங் கூட்டுக. விண் - வானம்; இங்கே தேவலோகம்: அங்குள்ளவர், விண்ணோர். வரிசிலை - நீண்ட வில்லுமாம். குழைய வாங்கி - நன்றாகவளைத்து என்றபடி. மணி - கருவியாகுபெயராம். நவரத்தினமிழைத்த கிரீடத்தையுடைய என்றலுமாம். செழுஞ்சுடர் என்றது - இயல்பாகிய அண்மைவிளி; முதல் வேற்றுமையாக்கி, முன்னிலைக்குப் படர்க்கைவந்த இடவழுவமைதி யென்று கொள்ளினுமாம்; சுடராகிய நீ என்று கருத்து. (36)

### ஸ்ரீ கிருஷ்ணன் தான் படையெடுப்பதில்லையென்று துரியோதனனுக்கு உறுதிகூறுதல்.

16. அடர்சிலைவிசயனிவ்வாறிசைத்தலுமமலன்வஞ்சப்
படவரவுயர்த்தவென்றிப்பார்த்திவன்றன்னைநோக்கி
நடையுடைப்புரவித்திண்டேர்நானிவற்கூர்வதன்றி
மிடைபடையேவிநும்மோடமர்செயேன்வேந்தவென்றான்.

(இ - ள்.) அடர் - போர்செய்கின்ற, சிலை - வில்லையுடைய, விசயன் - அருச்சுனன், இ ஆறு - இந்தப்படி, இசைத்தலும் - சொன்னவளவிலே,—அமலன்-குற்றமில்லாதவனான கண்ணபிரான், வஞ்சம் - வஞ்சனையையுடைய, படம் அரவு உயர்த்த - படத்தையுடைய பாம்பின் வடிவத்தை யெழுதிய கொடியை உயர நாட்டின, வென்றி - வெற்றியையுடைய, பார்த்திவன் தன்னை நோக்கி - துரியோதனராசனைப்பார்த்து, 'வேந்த-அரசனே! நான்—,இவற்கு - இந்த அருச்சுனனுக்கு, நடை உடை புரவி திண் தேர் - பலவகை

நடைகளையுடைய குதிரைகளைப் பூட்டிய வலிய தேரை, ஊர்வது அன்றி - செலுத்துவதேயல்லாமல், மிடை படை ஏவி - நெருங்கின ஆயுதங்களைப் பிரயோகித்து, நும்மோடு - உங்களுடன், அமர் செயேன் - போர்செய்வேனில்லை', என்றான் - என்று சொன்னான்;

அருச்சுனன் 'எனக்கு நீ தேரூர்ந்தாயானாற்போதும், நான்வில் திறமையால் எனது பகையாக எவர்வரினும் வெல்வேன்' என்று ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கிக் கூற, அந்த ஸ்ரீ கிருஷ்ணன் அப்போது துரியோதனனை நோக்கி, அருச்சுனனுக்குத் தேரூர்வதன்றிப் படையெடுத்து நும்மோடு போர்செய்வதில்லை என்று உறுதி கூறினனென்பதாம். பாண்டவர்களை மாய்ச்சூதில் வஞ்சனையால் வெற்றி கொண்டவனென்பார், 'வஞ்சவென்றிப் பார்த்திவன்' என்றார். அமலன் - துர்க்குணமில்லாதவன்; கருமத்தொடக்கற்றவன். வஞ்சப்பார்த்திவனென இயையும்; வஞ்ச அர வென்று இயைப்பினும் அமையும். அரவு - பாம்பின் வடிவத்தை யெழுதின கொடிக்கு இருமடியாகுபெயர். பிருதிவியை ஆள்பவன், பார்த்திவன், தந்திதாந்தநாமம். பிருதிவி - பூமி. பிருது சக்கரவர்த்தியால் சீர்திருத்தப்பட்டதெனப் பொருள்பட்டு இதுவும் தந்திதாந்த நாமமாம். குதிரைக்குப் பலவகை நடையுண்டு; ஐங்கதி, நவகதி கூறப்படுதல் காண்க. நோக்கி என்றானெனக. (37)

## ஸ்ரீ கிருஷ்ணன் தன்னைச் சேர்ந்தவரை யெல்லாம் படைத் துணையாகக் கொள்ளுமாறு துரியோதனனிடம் சொல்லுதல்.

17. எம்மையேயொழியவுள்ளயாதவகுலத்துளோர்கள்
தம்மையுமெம்முனைதாலகேதுவையுஞ்சேரச்
செம்மையோடுதவியாகக்கொண்டுநீசெல்கவென்று
மும்மையுமுணர்ந்தநாதன்முன்னுறப்பின்னுஞ்சொன்னான்.

(இ - ள்.) (என்று சொல்லி மற்றும்), மும்மையும் உணர்ந்த நாதன் - மூன்று காலத்துச் செய்கைகளையும் அறிந்த தலைவனான கண்ணபிரான், முன்உற - முன்னாக, (துரியோதனனை நோக்கி) எம்மையே ஒழிய உள்ள - எம்மைத்தவிர இருக்கிற, யாதவகுலத்து உளோர்கள் தம்மையும் - யதுகுலத்திலுள்ள அரசர்களையும், எம் முன் ஆன தாலகேதுவையும் - எமது தமையனான பனைக்கொடியையுடைய பலராமனையும், சேர - ஒருசேர, செம்மையோடு - மனநிறைவோடு, உதவி ஆக கொண்டு - படைத்துணையாக அழைத்துக் கொண்டு, நீ செல்க - நீ போவாயாக, என்று - என்று சொல்லி, பின்னும் சொன்னான் - மீண்டுஞ் சொல்பவனானான், (எ - று.)— அது மேற்கவியிற் காண்க.

'செம்மையோடு உதவியாகக்கொண்டு நீ செல்க' என்றது, பட்சபாதமின்றித் துரியோதனனுக்கு ஒருவகையில் உதவிபுரிவதாகக் காட்டியபடியாம். மும்மையுமுணர்ந்த நாதன் - முன் நடந்தவை, இப்பொழுது நடக்கின்றவை, இனி நடப்பவை என்னும் இரிகால வரலாறுகளையும் அறிந்தவன். இங்கே 'மும்மையுமுணர்ந்த நாதன்' என்றது எத்தனைபேரைத் துணையாகக்கொண்டாலும்

துரியோதனன் போரிற் பாண்டவர்களை வெல்லமாட்டானென்று முன்னமே அறிந்துள்ளவனாதலால்.

எம்மை என்பதை உளப்பாட்டுத் தன்மைப் பன்மையாகக் கொண்டு அதில் சாத்தகியை அடக்குதலுமொன்று: ஏ - பிரிநிலை. யாதவர்-யதுவின் சம்பந்தமானவர்; தத்திதாந்தநாமம்; யது என்பவன், சந்திரகுலத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன். முன் - முன்னமே பிறந்தவனுக்குக் காலவாகுபெயர். தாலகேது-பனைமரவடிவத்தைக் கொடியிலுடையவன்; 'பனைந்துவசன் முசலி கருந்துகிலுடையவன் பலதேவன், பலபத்திரன் பேரே'' என்பது நிகண்டு. வீடுமனுக்கும் பனைமரமே கொடியாதலால், இப்பெயர் அவனுக்கும் வழங்கும். தாலகேது - வேற்றுமைத்தொகையன்மொழி. மும்மை என்பது - இங்கே மூன்றின் தன்மையைக்குறியாமல் மூன்றைக் குறித்ததனால், மை - பகுதிப்பொருள்விகுதி, தன்மைப்பொருள் விகுதி அன்று. முர்மை - மூன்று காலத்துச் செய்திக்கு இருமடியாகு பெயர். (38)

## துரியோதனன் பலராமனைக் காணுதல்.

18. கிருதவன்மாவக்குரோணிகிளர்படையோடுநின்பால்
வருவனென்றுரைத்துவேண்டுமதுரவாய்மைகளுங்கூறி
மருதுபோழ்ந்திட்டசெங்கண்மாயவன்விடுப்பவேகிக்
கருதலான்வினயமொன்றுங்கண்ணன்முன்னோனைக்கண்டான்.

(இ - ள்.) மருது - இரட்டை மருதமரங்களை, போழ்ந்திட்ட - (இடையிலே உரலொடு புகுந்து) முறித்துத் தள்ளின, செம் கண் மாயவன் - சிவந்த திருக்கண்களையுடைய கண்ணபிரான்—(துரியோதனனைநோக்கி)—'கிருதவன்மா - (நமது) கிருதவர்மாவென்பவன், அக்குரோணி கிளர் படையோடு - ஒரு அக்ஷௌஹிணியென்னுந் தொகையுள்ள விளங்குகின்ற (நமது) சேனையுடனே, நின்பால் வருவன் - உன் பக்கத்தில் (படைத்துணையாக) வருவான்' என்று உரைத்து - என்று சொல்லி, வேண்டும் மதுரம் வாய்மைகளும்கூறி - (இன்னும் அச்சமயத்துக்கு) ஏற்ற இனிப்பான வார்த்தைகளையுஞ் சொல்லி, விடுப்ப - விடைகொடுத்தனுப்ப,—(துரியோதனன்), வினயம் ஒன்றும் கருதலான் - (அவ்வுதவியைப் பெறுதற்கேற்ற) வணக்கஞ் சிறிதையுஞ் செய்யநினையாதவனாய், ஏகி - சென்று, கண்ணன் முன்னோனை கண்டான் - ஸ்ரீகிருஷ்ணனது தமையனை பலராமனைப் பார்த்தான்; (எ - று.)

இங்கும், மதுரவாய்மைகள் கூறி என்றதனால், கண்ணனுக்குத் துரியோதனனிடம் இன்சொல்மாத்திரத்தால் அன்பேயன்றி மனப்பூர்வமான அன்பில்லையென்பது விளங்கும்.

இதில் வர்மா என்பது - க்ஷத்திரிய சாதிக்கு உரிய பெயர்: (பிராமணர்க்குச் சர்மா என்றும், வைசியர்க்குக் குப்த என்றும், சூத்திரர்க்குத் தத்த அல்லது தாஸ என்றும் வழங்கும்.) கிருத

வர்மா - யதுகுலத்தில் இருதிகன்என்பவனது குமாரன்: இவனைக் கிருஷ்ணன் துரியோதனனுக்குப் படைத்துணையாகத் தான் அனுப்பும் யாதவசேனைக்குத் தலைவனாக்கி அனுப்புகிறான். வாய்மை - வாயின் தன்மை; அது - வாயினாற் சொல்லுஞ் சொல்லுக்குக் கருவியாகுபெயர். மாயவன் என்பதற்கு - மாயைபோலக் கருநிறமுடையவனென்றும், வியக்கத்தக்க குணஞ்செயல்களை யுடையவனென்றுங் கருத்து உரைப்பர். வணங்காமுடிமன்னனுதலால், விநயமொன்றுங் கருதலானன். இனி, வினயமொன்றும் கருதலான் என்பதற்கு-கண்ணனது சூதுசிறிதையும் அறியாதவனாய் என்றும் உரைக்கலாம்; வினயம் - வஞ்சனை. (39)

## துரியோதனன் பலராமனை யாதவருடன் போர்த்துணையாக வருமாறு அழைத்துவிட்டுச் செல்லுதல்.

19. கண்ணனங்கருளிச்செய்தகட்டுரைப்படியேசங்க
வண்ணனுக்கிளவல்சொன்னமாற்றமுமரசன்சாற்றி
எண்ணருந்தொகைகொள்சேனையாதவகுமரரோடே
அண்ணலேவருகென்றோதியத்தினபுரிபுக்கானே.

(இ - ள்.) (கண்டு), அரசன் - துரியோதனராசன், கண்ணன் அங்கு அருளிச்செய்த கட்டுரை படியே - கிருஷ்ணமூர்த்தி அப்பொழுது சொல்லியருளின உறுதிச்சொல்லின்படியே,—சங்கம் வண்ணனுக்கு - சங்குபோல வெளுத்த நிறத்தையுடைய பலராமனுக்கு, இளவல் சொன்ன மாற்றமும் சாற்றி-(அவன்) தம்பியான கண்ணன் சொன்னவார்த்தையைச் சொல்லுதலுஞ் செய்து, 'அண்ணலே - பெருமையிற்சிறந்தவனே! எண் அரு தொகைகொள் சேனை யாதவ குமரரோடே - எண்ணியளவிடுதற்கருமையான பெருந்தொகையைக் கொண்ட யாதவசேனையோடும் யாதவகுமாரர்களோடும், வருக - (நீ என் பக்கல் போர்த்துணையாக) வருவாயாக', என்று ஓதி - என்று சொல்லி, அத்தினபுரி புக்கான் - (தனது) அஸ்தினபுரியைச் சேர்ந்தான்; (எ - று.)

பெரியோர்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் அருளோடு கூடியதென்னுங் கருத்தால், இங்கு 'அருளிச்செய்த' என்றது; இனி துரியோதனன் பெருங்கூட்டத்தைத் தனக்குத் துணையாக அனுப்புவதைக் கண்ணன் அருளோடு செய்ததாகக் கருதினனென்பார், 'அருளிச்செய்த' என்றாருமாம். கட்டுரையென்றது, உள்ளே யடங்கிய கருத்து வெளித்தோன்றுதபடி நன்றாக அமைத்துச் சொல்லுஞ் சொல் என்றபடி. யாதவகுமரர் - கண்ணனுக்குப் பதினாயிரங் கோபஸ்திரீகளிடம் பிறந்த நாராயணகோபாலர்களும் பிறருமாம் படைத் துணையாக வரும்படி வேண்டுகின்றனனாதலின் அண்ணலேயென உயர்த்திக் கூறினன். அங்கு - அவ்விடத்தில் என்றுமாம். குமாரனென்னும் சொல்லுக்கு மன்மதனையுங் குற்சித ரூபமுடையவனாக்க வல்ல கட்டழகுடையவனென்று பொருள். (40)

## அருச்சுனனும் கிருஷ்ணனும் தருமபுத்திரனுள்ள விடத்துச் செல்லல்.

20. கூறியவேகநாகக்கொடியவனகன்றபின்னர்த்
தேறியவிசயனோடுஞ்செழும்புனற்றுவரைநீங்கி
யாறிருநாமத்தோனுமையிருநாமத்தோனும்
ஊறியகருணைநெஞ்சினுதிட்டிரனிருக்கைபுக்கார்.

(இ - ள்.) கூறிய - (இவ்வாறு) சொன்ன, வேகம் நாகம் கொடியவன் - உக்கிரமான பாம்பின்வடிவத்தையெழுதின துவசத்தையுடைய துரியோதனன், அகன்றபின்னர் - (துவாரகையி னின்று) நீங்கிச் சென்றபின்பு, (கண்ணபிரான்) தேறிய விசயனோடும் - (தான் படைத்துணையாதற்கு உடன்பட்டதனால்) மனந் தேறின அருச்சுனனுடனே, செழு புனல் துவரை நீங்கி - மிகுந்த நீர்வளத்தையுடைய துவாரகாபுரியினின்று புறப்பட்டு, (விரைவில்), ஆறு இரு நாமத்தோனும் ஐ இரு நாமத்தோனும் - பன்னிரண்டு திருப்பெயர்களையுடைய அக்கண்ணனும் பத்துத்திருப்பெயர்களை யுடைய அருச்சுனனும், ஊறிய கருணை நெஞ்சின் உதிட்டிரன் இருக்கை புக்கார் - மேன்மேற் சுரக்கின்ற அருளையுடைய மனத்தை யுடைய தருமபுத்திரனது இருப்பிடத்தை [உபப்பிலாவியத்தில் அரண்மனையை] அடைந்தார்கள்; (எ - று.)

வேகம் - விரைவுமாம். ஏகம் எனப் பதம் பிரித்து, ஒப்பற்ற எனினுமாம். ஆறிருநாமத்தோன் - துவாதசநாமன்; அத்திரு நாமங்கள் - கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், இருடீகேசன், பதுமநாபன், தாமோதரன் என்பவை. ஐயிருநாமம் - 'பார்த்தனருச் சுனன் கரியோன் விசயன், பாகசாதனி சவ்வியசாசிபற்குனன்பா, ரேத்து தனஞ்சயன் கிரீடி சுவேதவாகன் எனும் நாமம் படைத்த பிரான்'' எனக் கீழ்த் தீர்த்தயாத்திரைச் சருக்கத்திற் கூறியவை. ஆறிரு நாமம், ஐயிருநாமம்என்பன - பண்புத்தொகைப் பன்மொழித் தொடர். இருக்கை - இருத்தல்: இருப்பிடத்துக்குத் தொழிலாகு பெயர். தேறிய விசையினோடும் என்ற பாடத்திற்கு - மிக்க விரை வுடனே யென்க. (41)

வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கம் முற்றிற்று.

---

## மூன்றாவது

# சஞ்சயன் தூதுசருக்கம்.

சஞ்சயனென்னும் முனிவன் திருதராட்டிரனது வேண்டுகோளின்படி பாண்டவரிடம் தூது வந்த செய்தியைச் சொல்லும் பாகம். சஞ்சயன் கவல்கணனென்பவனது குமாரன். ஆதலால், இவனுக்குக் காவல்கணியென்று ஒரு பெயரும் வழங்கும். இவன் திருதராட்டிரனுக்கு மிகவும் இஷ்டனான நண்பன்; இவன் அவனுக்குச் சில சமயங்களில் தேர் செலுத்துதலுமுண்டு.

### கடவுள் வணக்கம்

1. ஒருதலத்திடையவதரித்தணிபொதுவர்சிற்குடிலுறைவதோர்
மரகதப்புயறனையெடுத்தொருமகவெனத்தனதிறுதியால்
அரிதுபற்றியவலகைசெற்றிடவணிமுலைப்பயநுகர்வுறு
மருதிடைத்தவழ்பொருவில்வித்தகன்மலரடிக்கண்வழுத்துவாம்.

(இ - ள்.) ஒரு தலத்திடை - ஓரிடத்திலே [வடமதுரையில் என்றபடி], அவதரித்து - திருவவதாரஞ்செய்து, அணி பொதுவர் சில் குடில் - அழகிய இடையர்களது சிலவான குடிசையிலே (மற்றோரிடத்தில் என்றபடி], உறைவது - வசித்தருளுந்தன்மையதான, ஓர் மரகதம் புயல் - ஒப்பற்ற பச்சையிரத்தினமும் மேகமும் போன்ற நிறத்தையுடையவனும்,—தனது இறுதியால் - தனது [பூதனையின்] மரணகாலம் சமீபித்ததனால், தனை ஒரு மகவு என எடுத்து - தன்னை [கண்ணனை] ஒரு சாதாரண சிறு குழந்தையைப் போலக் கையிலெடுத்து, அரிது பற்றிய - அருமையாகப் பிடித்திருந்த, அலகை - பேய் மகளாகிய பூதனையை, செற்றிட - கொன்றிடும்பொருட்டு, அணி முலை பயம் - அழகிய (அவளது) தனத்தின் பாலை, நுகர்வுறு - குடித்தருளி, மருதிடை தவழ் - (பின்பு ஒரு காலத்தில் இரட்டை) மருதமரங்களிடையிலே தவழ்ந்து சென்ற, பொருவு இல் வித்தகன் - ஒப்பில்லாத ஞானவடிவமானவனுமாகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினது, மலர் அடிக்கண் - செந்தாமரைமலர் போலுந் திருவடிகளை, வழுத்துவாம் - துதிப்போம்; (எ - று.)

"ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில், ஒருத்திமகனா யொளித்து வளர" எனப் பெரியார் அருளிச்செய்தபடி திருமதுரையில் வசுதேவ குமாரனாய்த் தேவகியின் திருவயிற்றில் உதித்துத் திருவாய்ப்பாடியில் நந்தகோபர்மனையில் யசோதையின் திருமகனாய் வளர்ந்தருளின கண்ணனது தன்மையை 'ஒரு தலத்திடை யவதரித்தணிபொதுவர் சிற்குடி லுறைவது' எனக் கூறினர். கண்ணன் வளர்தற்கு இடமாதற்கேற்ற மகிமை [தவப்பயன்] உடைமையாலும், கண்ணனுக்கு மதுரையினும் ஆய்ப்பாடி இனியதாயிருந்ததனாலும், முன்பு எளிய காடாயிருந்தது கண்ணனது திருக்கடைக்கண்ணின் அருள் நோக்குமாத்திரத்தால் பின்பு மிகச் செழிப்படைந்ததனாலும், பொதுவர் சிற்குடிலுக்கு அணியென்று அடைமொழி கொடுத்தது.

குறிஞ்சி நிலத்துக்கும், மருதநிலத்துக்கும் பொதுவான இடம் (காடும் காடு சேர்ந்த இடமுமான) முல்லை நிலமாதலால், அங்குள்ள இடையர்க்குப் பொதுவர் என்று பெயர்; பொது - நடுவிடம், மத்தியஸ்தானம்; இடையரென்ற பெயர்க்குங் காரணம் இதுவே. மக - இளமை யுணர்த்தும் உரிச்சொல். உ - சாரியை; மகவுஎன்ற இது - இளமையையுடைய குழந்தைக்குப் பண்பாகுபெயர்.

பூதனைக்கு அழிவுகாலம் அருகில் வந்ததற்கு ஏற்பக் கண்ணனைக் கொல்லவேண்டுமென்னுந் துர்ப்புத்தி உண்டாயிற்று என்பார், 'தனதிறுதியால்' என்றார். மிகுந்த அன்போடு அருமையாக எடுப்பதுபோல அக்குழந்தையைக் கையிலேந்தியதனால், 'அரிது பற்றிய' என்றது; அன்றியும், இப்படிப்பட்ட பரிசுத்தமான தெய்வக்குழந்தையை ஏந்தப்பெறுதல் பேய்மகளுக்கு என்றும் அரிதாமிறே; இத்தகைய கொடுஞ்செயலைப் பிறரெவருஞ்செய்ய உடன்படாராகிய அருமைபற்றியும், 'அரிதுபற்றிய' என்னலாம். அவள் அப்பொழுது கண்டவர் காதல்கொண்டு நம்புதற்கு ஏற்ற கட்டழகுடைய வடிவத்தைத் தனது மாயையினால் எடுத்துவந்தனளாதலாலும், கண்ணன் பால்அமுதுசெய்யும் பேறுபெறுதலாலும், அணிமுலை யென்றது. அணிமுலை - (ஆரம் முதலிய ஆபரணங்களை) அணிந்தகொங்கையென வினைத்தொகையுமாம். தன்னைக்கொல்லப் பிறந்தவன் ஒளித்துவளர்கிறானென்று உணர்ந்த கம்சனால் விசேஷமான பலம் சாமர்த்தியம் அழகு முதலிய சிறப்புக்களையுடைய குழந்தைகளைக்கொல்லும்படி ஏவியனுப்பப்பட்ட பூதனை யென்னும் ராட்சசி, நல்லபெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து தூங்கிக்கொண்டிருந்த கண்ணனாகிய குழந்தையை யெடுத்து நஞ்சுதீற்றிய தனது முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் முலைகளைக் கைகளால் இறுகப் பிடித்து அவளுயிரோடு உறிஞ்சிப் பேரிரைச்சலிட்டுக் கதறி விழுந்து இறக்கும்படி செய்ததென்பது கதை. வித் - (எல்லாப் பொருளையும்)அறியுந்தன்மையை, அகன்-தன்னிடத்தில் உடையவன் எனக் காண்க; இனி, வித்தகன்-ஒருசொல்லாய், சதுரப்பாடு உடையவனுமாம். முதலடியினால்-பரத்துவமும் சௌலப்யமும், மூன்றாமடியினால்-துஷ்டநிக்கிரகமும், நான்காமடியினால் - நிர்ஹேதுககருணையும் விளங்கும்.

இதுமுதல் இச்சருக்கம்முடிகிறவரையில் பத்தொன்பதுகவிகள்-பெரும்பாலும் முதல்மூன்று ஐந்தாஞ் சீர்கள் - மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (42)

திருதராட்டிரன் பாண்டவரிடத்துத் தூதனுப்புமாறு சஞ்சய முனிவனை வருவித்துக் கூறத்தொடங்குதல்.

உ. நஞ்சநாகமுயர்த்தமீளிதனகர்புகுந்துழிநண்பறக்
கஞ்சமாமனை வென்றவன் செயல்கணை ணிலானெடுரைத்தபின்
வஞ்சமைந்தரொடுயவிமீளவுமண்கொடாதகுறிப்பினன்
சஞ்சயன்றனைவருகவென்றிருதாள்பணிந்திவைசாற்றுவான்.

(இ - ள்.) நஞ்சம் - விஷத்தையுடைய, நாகம் - பாம்பை யெழுதின கொடியை, உயர்த்த - உயர நிறுத்தின, மீளி - வலிமையிற் சிறந்த துரியோதனன், தன் நகர் புகுந்த உழி-(துவாரகையினின்று) தனது அத்தினபுரியைச் சேர்ந்தபொழுது, நண்பு அற கஞ்ச மாமனை வென்றவன் செயல் - உறவுமுறை சிறிதும் பாராட்டாமல் கம்சனாகிய தனது மாமனை அழித்திட்டவனான ஸ்ரீகிருஷ்ணனது செய்தியை [இருவர்க்கும் ஒவ்வொருவகையில் உதவிசெய்ய உடன்பட்டதை], கண் இலானொடு உரைத்த பின் - பிறவிக்குருடனான திருதராட்டிரனோடு சொன்னவுடனே—(அத்தந்தை)—வஞ்சம் மைந்தரோடு மீளவும் உயவி - வஞ்சனைக் குணத்தையுடைய தன்மக்கள் நூற்றுவருடனே மறுபடியும் ஆலோசித்து, மண் கொடாத குறிப்பினன் - (அவ்வாலோசனையிலும்) இராச்சியபாகத்தை (ப் பாண்டவர்களுக்கு)க் கொடுத்தலில்லாத கருத்தையே தேர்ந்தவனாய், (பின்பு) சஞ்சயன்தனை வருக என்று-சஞ்சயமுனிவனை வருவாயாக வென்று (வரவழைத்து உபசரித்து), இரு தாள் பணிந்து - (அவனது) உபய பாதத்தை வணங்கி, இவைசாற்றுவான் - இவ்வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை மேல் இரண்டு கவிகளிற் காண்க.

நாகம் - (கால்களால்) நடவாததென்றும், மலைகளில் அல்லது (சந்தன) மரங்களில் வாசஞ்செய்வதென்றும் காரணப் பொருள் கூறப்படும்; நகம் - நடத்தலில்லாதது; மலையும், மரமுமாம். கண்ணனைப்பெற்ற தாயான தேவகியினது உடன்பிறந்த முறையாகுபவனாதலால், கஞ்சன் கண்ணனுக்கு மாமனாவன். தன்னைக்கொல்லப் பிறந்த தேவகிபுத்திரன் யசோதையினிடம் ஒளித்து வளர்தல் முதலிய விருத்தாந்தங்களை ஆதியோடந்தமாக நாரதர் சொல்லக் கேட்டு, கம்சன் அதிககோபங்கொண்டு கிருஷ்ணனைக் கொல்ல நிச்சயித்து வில்விழாவென்கிற வியாஜம் வைத்து அவனை மதுரைக்கு வரவழைத்துப் பலவகையில் வதைக்க வழி தேடுகையில், சபையில் கிருஷ்ணபகவான் வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மேலேறி அவனது கிரீடங் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்று ஒழித்தனனென்பது கதை. மகாவஞ்சகனாகிய கஞ்சனையும் வென்ற மாயவனது உதவி பாண்டவர்க்கு இருத்தலால், அவர்களை இந்த வஞ்சமைந்தரால் வெல்லலாகாதென்பது தோன்ற 'கஞ்சமாமனை வென்றவன்' என்றார். (43)

இதுவும் மேற்கவியும் - ஒரு தொடர்: திருதராட்டிரன் சிலகூறிச் சஞ்சயமுனிவனைப் பாண்டவரிடம் தூதனுப்புதல்.

8. குருகுலத்தரசர்க்குறுந்தொழில்கூறுநற்குருவாதலால்
இருகுலத்தினுமுற்பவித்தவரென்றுநின்சொன்மறுத்திடார்
பெருகுலைக்கனலன்னபிள்ளைகள்பேசுகின்றபிணக்கறுத்
தொருகுலத்தவருததிகூம்புவியாளுமாறினியுட்கொளாய்.

(இ - ள்.) (நீ) குருகுலத்து அரசர்க்கு - குருவென்னும் அரசனது மரபிலே பிறந்த மன்னர்களெல்லோருக்கும், உறும் தொழில் கூறும்- (செய்யத்) தக்க காரியங்களை (முன்னமே ஆராய்ந்து) சொல்லியருளு கின்ற, நல் குரு ஆதலால் - சிறந்த ஆசிரியனாகையால், இரு குலத் தினும் உற்பவித்தவர் - (என் குலம் என் தம்பியான பாண்டுவின் குலம் என்னும்) இரண்டு குலத்தினும் பிறந்த குமாரர்யாவரும், என்றும் நின்சொல்மறுத்திடார்-எப்பொழுதும் உனது வார்த்தை யைத் தடுக்கமாட்டார்கள்; (ஆதலால், நீ பிரவேசித்து), உலை பெருகு கனல் அன்ன பிள்ளைகள் பேசுகின்ற பிணக்கு அறுத்து - (கொல்ல னது) உலைக்களத்திலே வளர்ந்தெரிகின்ற அக்கினியைப் போன்ற (உக்கிரத்தன்மையையுடைய) பாண்டவரும் துரியோதனாதியரும் ஆகிய சிறுவர்கள் (தனித்தனிப்) பேசுகிற மாறுபாடான வார்த்தை களை ஒழித்து, ஒரு குலத்தவர் உததி சூழ் புவி ஆளும் ஆறு - (இவ் விருவகையாருள்) ஒரு குலத்து இராசகுமாரர்கள் தாமே கடல் சூழ்ந்த நிலவுலகம் முழுவதையும் அரசாளும்படி, இனி-இப்பொழுது, உள்கொளாய்-திருவுள்ளத்திற் கொண்டருள்வாய்; (எ - று.)—இது, திருதராட்டிரன் சஞ்சயனை நோக்கிச் சொல்வது.

'நற்குரு' என்றது - தீமையையொழித்து எப்பொழுதும் நன்மை யையே செய்தருளும் ஆசாரியமூர்த்தி யென்றபடி. கோபாக்கினி யின் ஆவேசத்தால் ஒருவரையொருவர் ஒழித்திடுதற்குச் சீறு கின்றன ரிவரென்பான் 'பெருகுலைக் கனலன்ன பிள்ளைகள்' என்றான். பிள்ளை - இளமைப்பெயர்; இது உயர்திணையிளமைக்கு உரியதாதல், "தவழ்பவைதாமுமவற்றோரன்ன" என்ற தொல் காப்பியச் சூத்திரங்கொண்டு கொள்ளப்படும். உததி - நீர் தங்குமிட மெனக் காரணப்பெயர். உலைக்கனலன்னபிணக்கு என இயைத்தலு மாம். சஞ்சயன் நினைத்தமாத்திரத்திலே தனது கருத்துத் தவறாமல் நிறைவேறிவிடுமென்ற கருத்தால், 'உட்கொளாய்' என்றான். (44)

4. அறத்தின்மைந்தனுமிளைஞரும்புவியாசையற்றகலடவியின்
புறத்திருந்துதவஞ்செயும்படிபரிவுரைத்தருள்போயெனச்
செறுத்திடுந்திருதராட்டிரன்றனசிந்தையொப்பனசெப்பினான்
மறுத்திலன்பெருமுனியுமற்றவர்பாடிவீடுறமன்னினான்.

(இ - ள்.) அறத்தின் மைந்தனும்-யமதருமராசனது குமாரனான யுதிட்டிரனும், இளைஞரும் - அவன் தம்பிமாரான வீமன் முதலிய நால்வரும், புவி ஆசை அற்று - இராச்சிய பாகத்திலுள்ள ஆசை நீங்கி, அகல் அடவியின் புறத்து இருந்து தவம் செயும்படி - விசால மான காட்டுப் பக்கங்களிலே தங்கித் தவத்தைச் செய்யுமாறு, போய்- (நீ அவர்களிடஞ்) சென்று, பரிவு உரைத்தருள் - அன்புள்ள வார்த் தைகளை (அவர்களுக்குச்) சொல்லியருள்வாய், என - என்று, செறுத் திடும் திருதராட்டிரன் - (பாண்டவர்களை) அழிக்குங் கருத்துள்ள திருதராஷ்டிரமகாராசன், தன சிந்தை ஒப்பன செப்பினான் - தனது எண்ணங்களுக்கு இசைந்தவையான வார்த்தைகளைச் சொன்னான்; (சொல்ல), பெருமுனியும் - மகிமையுள்ள சஞ்சயமுனிவனும், மறுத் திலன் - (அவ்வார்த்தைகளைத்) தடுக்காதவனாய், மற்று - பின்பு,

அவர் பாடி வீடு உற மன்னினன் - அப்பாண்டவர்களது படை வீடாகிய உபப்பிலாவியத்தை அடைதலைப் பொருந்தினன் [அடைந்தானென்றபடி]; (எ - று.)

குளிர்ந்த நிழலையும் நீரையும் வேண்டிய சுவையினிய காய்கனி கிழங்குகளைத் தரவல்ல விருக்கவருக்கத்தையுமுடைய நல்லதொரு காட்டின் அகத்தில் இனிமையாக வசித்துக் காலங்கழிப்பாராயின் அதுவும் கண்ணிலாவரசன் கருத்துக்கு ஒவ்வாதாதலால், அவர்கள் கண்டவிடங்களிலும் அலைந்து வருந்தவேண்டுமென்பான், 'அகலடவியின் புறத்திருந்து' என்றான் போலும். தனசிந்தை யொப்பன - தனது கவலைக்கு ஏற்றவை யென்றுமாம். 'தனசிந்தையொப்பன' எனவே, இவன் சொன்னவார்த்தைகள் உலகத்தா ரெவர் கருத்துக்கும் ஒப்பனவல்லவென்பது அருத்தாபத்தியால் விளங்கும். இவற்றை மறுக்காததற்குக் காரணம் முனிவனது பெருந்தன்மையே யாதல்வேண்டு மென்பது தோன்ற 'பெருமுனி' என்றா னென்க. முனிக்குப் பெருமையென்ற அடைமொழி கொடுத்ததனால், திருதராட்டிரனுக்குப் பெருந்தன்மை யில்லை யென்பது தொனிக்கும். தருமத்தினின்றுந் தவறினவர்களுக்குத் தகுந்த தண்டனை செய்து தருமத்தைக் காத்தலால், யமனுக்குத் தருமனென்று பெயர்; 'அறம்' என்ற பெயருக்குங் காரணம் இதுவே. 'தேவர்களை இருதிணையாலுஞ் சொல்லலாம்' என்ற நியாயம் பற்றி, 'அறம்' எனக் கூற்றுவன அஃறிணையாகக் கூறப்பட்டான். செறுத்திடும் என்பதற்கு-(நல்லோர் யாவராலும் மிக்க பொறுமையை யுடையவனென்று) வெறுக்கப்படுகிற என்றும் உரைக்கலாம். 'எண்பது கோடி நினைந் தெண்ணுவன" என்றபடி திருதராட்டிரன் நினைக்கும் எண்ணங்கள் மிகப்பலவாதலால், சிந்தை இங்கே பன்மையாயிற்று. மற்றவர் என எடுத்து, எதிர்திறத்தவரான பாண்டவரென்றலுமாம். பாடிவீடு - பாசறை; பகைமேற்செல்பவர் உறையுமிடம். பரிவுரைத்தல் - இதோபதேசம். பாடிவீடு உற மன்னினன் - பாடிவீட்டின் சமீபமாகச் சேர்ந்தனனென்க. (45)

சஞ்சயன் பாண்டவரிடம் சென்று பேசத்தொடங்குதல்.

6. சென்றவம்முனிசெலவறிந்தெதிர்சென்றுதத்தமசென்னிதாள்
ஒன்றவைத்துவணங்கியாசியுரைக்குமெய்ப்பயனுற்றபின்
மன்றலந்துளவோனுநல்லறன்மைந்தனுந்திறலனுசருந்
துன்றுபொற்றவிசினிலிருத்தவிருந்துசில்லுரைசொல்லுவான்.

(இ - ள்.) மன்றல் அம் துளவோனும் - பரிமளத்தையுடைய அழகிய திருத்துழாய் மாலையையுடைய கண்ணபிரானும், நல் அறன் மைந்தனும் - நற்குண நற்செய்கைகளையுடைய தருமபுத்திரனும், திறல் அனுசரும்-வலிமையையுடைய (அவனது)தம்பிமாரான (வீமன் முதலிய) நால்வரும், சென்ற அ முனி செலவு அறிந்து - (அத்தினாபுரியினின்று புறப்பட்டு) வந்த அந்த சஞ்சயமுனிவனது வருகையை உணர்ந்து, எதிர்சென்று - எதிர்கொண்டுபோய், தத்தம் சென்னி தாள் ஒன்ற வைத்து வணங்கி - தங்கள் தலையை (அம்முனிவனது) திருவடிகளிலே பொருந்த வைத்து நமஸ்கரித்து, ஆசி உரைக்கும்

மெய் பயன் உற்றபின் - (அம்முனிவன்) ஆசீர்வாதங் கூறுதலாகிய உண்மையான பிரயோசனத்தைத் (தாங்கள்) அடைந்தவுடனே, துன்று பொன் தவிசினில் இருத்த-தகுந்ததொரு பொன்மயமான ஆசனத்தின் மேலே (அம்முனிவனை) எழுந்தருளச்செய்ய, இருந்து - (அவன் அச் சுவர்ணபீடத்தில்) வீற்றிருந்து, சில் உரை சொல்லுவான்-சில வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ-று.)—அவற்றை மேல் ஐந்து கவிகளிற் காண்க.

சென்ற அம்முனி செலவு, செல்லுதல் - இங்கு தன்மைக்கு வந்தது. சென்னி தாள் ஒன்ற வைத்து - தமது சிரசின்மேலே அவன் பாதத்தைப் பொருந்த வைத்து, வணங்கி - சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து. நிறைமொழி மாந்தரான முனிவரது சொல் தவருது பயன் தருமாதலால், 'ஆசியுரைக்கும் மெய்ப்பயன்' என்றது. பொன் துன்று தவிசு என மாற இயைத்து, பொன்னினாலமைந்த ஆசன மெனினுமாம். சில் உரை-குளிர்ச்சியான வார்த்தை என்றலும் ஒன்று. ஆசியுரைக்கு மெய்ப்பயன் உற்றபின் - நிச்சயமாய்ப் பலிக்கும்படி அம்முனிவனால் ஆசீர்வசனஞ் சொல்லப்பெற்ற பின்பு என்க. (46)

இதுமுதல் ஏழு கவிகள் – ஒரு தொடர்: ஐந்து கவிகள்-சஞ்சய முனிவன் வார்த்தை.

6. புடவியாளுதல்விட்டுநன்னெறிபுரியுமாதவர்தம்மினீர்
அடவியாளவும்வல்லிராயினிராதலானலமானதே
மடவியார்நிலையற்றசெல்வமகிழ்ந்துவாழ்தினமாறினால்
விடவியாரழலுற்றெனப்பெருநரகிலாழ்வுறவீழ்வரால்.

(இ - ள்.) நீர் - நீங்கள், புடவி ஆளுதல் விட்டு-(அரசர்களாய்ப்) பூலோகத்தை அரசாள்வதை யொழித்து, நல் நெறி புரியும் மாதவர் தம்மின் - நல்ல கதியை (ப் பெற) விரும்புகிற மிக்கதவத்தையுடைய முனிவர்கள்போல, அடவி ஆளவும் வல்லிர் ஆயினிர் - காட்டை இடமாகக்கொண்டு வசிக்கவும் வல்லவரானீர்கள்; ஆதலால் - ஆகையால், நலம் ஆனதே - (உங்களுக்கு இப்படியானது) நன்மையைத்தருவதான காரியமே; மடவியார் - அறியாமையையுடைய கீழ் மக்களோவெனின், - நிலை அற்ற செல்வம் மகிழ்ந்து - (எவரிடத்தும்) நிலைபெறுதலில்லாத பொருளையே (முக்கியமாகக் கருதி அது கிடைத்த மாத்திரத்தில்) மிகமகிழ்ச்சிகொண்டு, வாழ் தினம் மாறினால் - (தமது வாழ்) நாள் கழிந்தால், விடவி ஆர் அழல் உற்று என - மரங்கள் பெரு நெருப்பில் விழுந்தாற்போல, பெரு நரகில் - பெரிய நரகங்களிலே, ஆழ்வு உற வீழ்வர் - அழுந்தும்படி விழுந்து வருந்துவர் : (எ - று.)—ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம்.

பாண்டவர் தவத்தவர்க்குரிய காடாட்சியிற் பழகியதை இதனாற் கொண்டாடுகின்றான். மடவியார் நிலையற்ற செல்வம் மகிழ்ந்து என்பதற்கு-இளம்பெண்களையும் நிலையில்லாப் பொருளையுமே உகந்து என்றும் பொருள் கொள்ளலாம். விடவியாரழலுற்றென என்பதை விடு அவி ஆர் அழல் உற்று என எனப்பிரித்து, சொரியப்பட்ட

நெய்யையுடைய பெரு நெருப்பில் விழுந்தாற்போல என்றும் உரைப்பர். நிலை - நிலைத்தல் என முதனிலைத் தொழிற்பெயரென்றுவது, நிற்றல் என ஐ விகுதி பெற்ற தொழிற்பெயரென்றுவது கொள்க. வாழ்தினம் - உயிர் உடம்போடு கூடி வாழும் ஆயுள்நாள். விடபம் - மரக்கிளை, அதனையுடையது-விடபீ; விடவிஎன வந்தது திரிபு. (47)

7. உற்றயோனிகடம்மிலுற்பவியாமன்மானுடவுற்பவம்
பெற்றுவாழுதலரிதுமற்றதுபெறினுமாயைசெய்பெருமயக்
கற்றஞானியராய்விளங்குதலரிதுவீடுறுமறிவுபின்
பற்றுமாறிஃதிங்குனக்கிவைபண்பிஞேடுபலித்தவே.

(இ - ள்.) உற்ற - (எழுவகையாகப்) பொருந்தின, யோனிகள் தம்மில் - பிறப்புக்களில், உற்பவியாமல்- (வேறொருபிறவியிற்) பிறவாமல், மானுட உற்பவம் பெற்று - மனிதசன்மத்தையே யடைந்து, வாழுதல் - வாழ்வது, அரிது - (உலகத்தில்) அருமையானது; அது பெறினும் - அந்த மனிதப்பிறப்பையடைந்தாலும், மாயை செய் பெரு மயக்கு அற்ற ஞானியர் ஆய் விளங்குதல் - மாயையினுலுண்டாக்கப் பட்ட பெரிய (அறியாமையென்கிற) மயக்கம் நீங்கின தத்துவஞான முடையவர்களாய் விளங்குவது, அரிது - அருமையானது; இஃது - கீழ்க்கூறிய தவமானது, பின் வீடுஉறும் அறிவு பற்றும் ஆறு-இவ்வுடம்பு நீங்கினபின் முத்தியைப்பெறுதற்குக் காரணமான அத்தத்துவஞானம் உண்டாகும் வழியாம்; இங்கு இவை உனக்கு பண்பிஞேடு பலித்த - இங்குக்கூறிய இம் மூன்றும் உனக்கு இயற்கையாகப் பலித்துள்ளன; (எ - று.)

மானுடராக வாழ்ச்சி, தத்துவஞானம், அந்தத் தத்துவ ஞானத்திற்குக் காரணமான தவம் இம்மூன்றும் இயற்கையாகத் தருமபுத்திரனுக்குத் தோன்றியுள்ளமையைச் சஞ்சயன் இதனுற் பாராட்டுகின்றுன். பாண்டவர்க்குப் பொதுவாக உள்ள நற்குணங்களைக் கூறிவிட்டு, அரசனுகுபவன் தருமனேயாதலால், இனி, தருமனை நோக்கியே கூறுகின்றுன். இம்மை மறுமை வீடு என்னும் மூன்றனுள், வேண்டியதை வேண்டியவாறு முயன்று பெறுந் தன்மை மக்கட் பிறப்புக்கு மாத்திரமே உள்ளதாதலாலும், தேவர் முதலிய மற்றையெந்தப் பிறப்புக்கும் அப்படிப்பட்ட சிறப்பு இல்லையாதலாலும், 'மானுடவுற்பவம் பெற்று வாழுதலரிது' என்றது. உறுப்புக் குறையாகப் பிறத்தல், பிறந்தும் அற்ப ஆயுளாய் அழிதல் இப்படிப்பட்ட குறைகளை ஒழித்தற்கு, 'பெற்று வாழுதல்' என்றுர்.

"அரியது கேட்கின் வரிவடிவேலோய், அரிதரிது மானிடராதலரிது, மானிடராயினுங் கூன் குருடு செவிடு, பேடுநீங்கிப் பிறத்தலரிது, பேடு நீங்கிப் பிறந்தகாலையும், ஞானமுங்கல்வியும் நயத்தலரிது, ஞானமுங் கல்வியும் நயந்த காலையும், தானமுந்தவமுந்தான் செயலரிது, தானமுந்தவமுந்தான் செய்வராயின், வானவர் நாடு வழி திறந்திடுமே" என்ற ஔவையார் பாடலையும், "அரிதாற், பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே", "காமனன்னதோர் கழிவனப் பறிவொடுபெறினும், காமநாற்கதி நவைதரு நெறிபல

வொருவி, வாமனூனெறி வழுவறத்தழுவினரொழுக, லேமவெண் குடையிறைவமற்றி யாவதுமரிதே" என்ற சீவகசிந்தாமணியையும் இங்கே அறிக.

மற்று - வினைமாற்று: மாயை செய் பெருமயக்கு - அவித்தை எனப்படும்; அது - திரிபுணர்வு, விபரீத ஞானம். ஞானமாவது - பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களால் அன்றி உண்மையாக அறியும் மெய்யுணர்வு. வீடு - (எல்லாப்பற்றுக் களையும்) விட்டு அடையுமிடமெனக் காரணப்பெயர்; முக்தி-(உயிர்கள் மீண்டு வாராது சென்று சேரத்தக்க) வீடாகவுள்ளது என்றும் கருத்துக் கொள்ளலாம், இஃது என்பதில், ஆய்தம் உயிர்போ லொலித்தது. 'உமக்கு' என்ற பாடத்துக்கு - வீமனுதியோரையும் உட்படுத்திய தென்க. பலித்த - முற்று. மயக்கு - மயங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். அறிவு பின்பற்றும் ஆறு என எடுத்து, ஞானத்தையனுசரிக்கும் வழியெனலுமாம். (48)

8. திகந்தவெல்லையுறப்பெரும்புவிசெல்லநேமிசெலுத்தநும்
அகந்தையோடரசாளவெண்ணிலவ்வரவகேதனனுங்களோ
டுகந்துவாழவொருப்படானினியுற்றதாயமுமுரிமையும்
இகந்துமாதவமுயறலேகடனீறிலாவுலகெய்தவே.

(இ - ள்.) திக் அந்தம் எல்லை உற - திக்குக்களின் முடிவான இடமளவும் பொருந்தவும், பெரு புவி செல்ல - பெரிய பூலோகம் முழுதிலும் பரவவும், நேமி செலுத்த - (ஆஜ்ஞா) சக்கரத்தைச் செலுத்தும்படி, அரசு ஆள - (நீங்கள்) இராச்சியத்தை ஆளுதற்கு, நும் அகந்தையோடு - உங்களது செருக்குடனே, எண்ணில் - நினைத்தால், அ அரவ கேதனன் - பாம்புக்கொடியையுடைய அத் துரியோதனன், உங்களோடு உகந்து வாழ ஒருப்படான் - உங்களு டன் மகிழ்ச்சியாய்க் கலந்து வாழ்வதற்கு உடன்படமாட்டான்; (ஆதலால்), இனி - இனிமேல், உற்ற தாயமும் உரிமையும் இகந்து - (உங்களுக்குப்) பொருந்தியுள்ள இராச்சியபாகத்தையும் அதன் அரசாட்சியுரிமையையும் விட்டு, ஈறு இலா உலகு எய்த மாதவம் முயறலே - அழிதலில்லாத முத்தியுலகத்தைப் பெறும் பொருட்டுப் பெரிய தவத்தைச் செய்வதுவே, கடன் - (உங்களுக்குக்) கடமை யாம்; (எ - று.)

நீர், நிலையில்லாத அரசாட்சியை விரும்பி ஆளக் கருதினால் துரியோதனனோ உங்களுடன்கூடி வாழ உடன்படான்; செருக்குக் கொண்டு போர் புரிதலோ தகுதியன்று; ஆதலால் அக்கருத்தை விட்டு நிலையான பெருநாடு பெறும்படி வனத்திற் சென்று தவமி யற்றுதலே தகுதியென்கிறான். எல்லா வுலகங்களும் அழியும் பிரளய காலத்திலும் நித்தியமான முத்தியுலகத்துக்கு அழிவு இல்லை யாத லாலும், அந்தமிலின்பத்தை யுடைமையாலும், பரமபதத்தை 'ஈறிலாவுலகு' என்றது. 'நேமி செலுத்தும் நும் அகந்தையோ டமராட எண்ணல்' என்ற பாடத்துக்கு - ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்தவேண்டுமெனக் கருதும் உமது செருக்குடனே போர்செய்ய

நினையாதொழிக என்று பொருள். எண்ணல் - எதிர்மறை வியங்கோள். அகந்தை - அகங்காரம்; அதாவது-தானல்லாத உடம்பை யானென்றும், தன்னோடு இயைபில்லாத பொருளை எனதென்றும் கருதி, அவற்றினிடத்துச்செய்யும் அபிமானத்தை எனக்கொள்ளுதல் பொருந்தும்; எனவே, அகந்தையோடு - (நீங்காத) அபிமானத்துடனென்றபடி. (49)

9. பராசரன்குலமாகினும்பெறுபயனிறுக்கிலர்பாரிலே
துராசரன்பிலரென்சொலின்று சுயோதனாதியர்கைக்கொளார்
சராசரங்களனைத்துமாகியசுகனையேநிகர்தன்மையாய்
நிராசர்நின்னளவிற்குறித்தவையுறுதியென்றினிநீகொளாய்.

(இ - ள்.) பராசரன் குலம் ஆகினும் - பராசர முனிவனது குலத்திலே பிறந்தவர்களாயிருந்தாலும், சுயோதன ஆதியர் - துரியோதனன் முதலியோர், பெறு பயன் - (இம்மனிதசன்மத்தாற்) பெறத்தகுந்த (நல்லொழுக்கமாகிய) பயனை, பாரிலே - இவ்வுலகத்திலே, இறுக்கிலர் - கடமையாகச் செய்துமுடித்தாரில்லை; துராசர் - கெட்ட பேராசையையுடையவர்கள், அன்பு இலர் - (உயிர்களிடத்துச்சிறிதும்) அன்பில்லாதவர்கள்; (ஆதலால்), என் சொல் இன்று கைக்கொளார் - எனது வார்த்தையை இப்பொழுது ஏற்றுக் கொள்கிறாரில்லை; சர அசரங்கள் அனைத்துமாகிய சுகனையே நிகர் தன்மையாய் - இயங்குதிணைப்பொருள்களும் நிலைத்திணைப் பொருள்களும் ஆகிய எல்லாவற்றின் சொரூபமான சுக முனிவனையே ஒத்த குணத்தையுடையவனே! நிராசர் - (பொருள்களிற்) பற்றில்லாத பெரியோர்கள், குறித்தவை-சித்தாந்தமாகக்கூறியுள்ள தத்துவ அருத்தங்களை, உறுதி என்று - (உயிருக்கு) நன்மையைத் தருவன என்று, இனி - இனிமேல், நின் அளவில் நீ கொளாய்-உன் மட்டில் நீ கொள்ளக்கடவாய்; (எ-று.)—'கொள்வாய்' என்றும்பாடம்.

தத்துவத்தை உள்ளபடி முழுதும் உணர்ந்த பராசர முனிவனது சிறந்த மரபில் தோன்றியும், இவர்கள் தாம் பொருள்களின் உண்மையைச் சிறிதும் உணர்ந்து ஒழுகாமை மாத்திரமேயன்றி, உணர்ந்தவர் சொன்னாலுங் கேட்டிலரென்னும் இகழ்ச்சிமிகுதிதோன்ற முதலிரண்டடிகளால் கூறினார்; துரியோதனாதியர் கேளாவிட்டாலும் நீயாயினுங் கேட்டு நடப்பது தகுதியென்பான், 'நின்னளவில் உறுதியென்றினிநீ கொளாய்' என்றார். வியாச குமாரனான சுகன் போலவே, வியாசகுலத்திற் பிறந்த நீயும் உடனே உலகப்பற்றற யொழித்து உயர்பதம் பெற முயல்வது தகுதியென்பார். 'சுகனையே நிகர் தன்மையாய்' எனத் தருமனை விளித்தார்; தருமன் அறிவு ஒழுக்கங்களில் மிக்கவனென்க. பயன் நிறுக்கிலர் எனப்பதம் பிரித்து நல்லொழுக்கமாகிய பெறத்தக்க பயனைச்செய்து நிலை நிறுத்துகின்றாரில்லை என்பாருமுளர்.

சுகமுனிவர், பிறந்தபொழுதே இயற்கையிற் பற்றுக்களனைத்தையுமொழித்துப் பரம்பொருளை நோக்கித் தனியே சென்றதைக் கண்டு அவரது தந்தையான வியாசர் அவரது பிரிவைப் பொறுக்க

மாட்டாமல் பின்தொடர்ந்து சென்று அன்போடு 'மைந்தா!' என்று அழைத்தவளவில், அரணியத்திலுள்ள மரம் முதலியன எல்லாம் 'ஏன்'? என்று விடை தந்தன என்ற வரலாற்றால், 'சராசரங்களனைத்துமாகிய சுகன்' என்றதெனை அறிக. இதனால் வேதவியாச பகவானினும் மேம்பட்ட ஞானமுடையவன் சுகமுனியென்பதும், சுகமுனிவன் பகவானது அம்சமர்தலால் சராசரங்களெல்லாம் அவனது சொரூபமாமென்பதும் அறிக; இனி எல்லாப்பொருள் களிலும் உள்ளும் புறம்பும் நிறைந்துள்ள இறைவனை ஒற்றுமை யுறப் பாவனை செய்தலால், சுகன் சராசரங்களனைத்துமாவன் என்றலும் ஒன்று. இந்தச் சுகனே பாகவத புராண சரித்திரத் தைப் பரீட்சித்து மகாராசனுக்குக் கூறுபவன்.

பராசரன்-வியாச முனிவரது தந்தை; வசிஷ்டமகாமுனிவரது புத்திரனான சக்தி முனியின் மைந்தன்; தத்துவ ஞானத்தில் மிகச் சிறந்தவன்; எல்லாப்புராணங்களுள்ளுஞ் சிறந்த ஸ்ரீவிஷ்ணுபுரா ணத்தை மைத்திரேய முனிவனுக்கு அருளிச்செய்தவன்; அன்றி யும், ஸ்மிருதிகளெல்லாவற்றினும் கலியுகத்திற்குச் சிறந்ததெனப் படுகிறதொரு ஸ்மிருதியை இயற்றினவன். வியாசர் மூலமாக உற்பவித்த குலமாதலால், திருதராட்டிரன் பாண்டு இவர்களது குலம் 'பராசரன் குலம்' எனப்பட்டது. சரம் - சஞ்சரிப்பவை, அசரம் - சஞ்சரியாதவை. எழுவகைப் பிறப்பினுள், தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன இவ்வாறும் சரமும், ஸ்தாவரம் - அசரமுமாம். சரம், ஜங்கமம் இயங்குதிணைப்பொருள், இயங்கியற்பொருள் என்பனவும், அசரம், ஸ்தாவரம், நிலைத்திணைப் பொருள், நிலையியற்பொருள் என்பனவும் - ஒரு பொருளன. நிராசர் என்றது-முற்றத்துறந்த முனிவர்களை. (50)

10. பாரிலாசையுநின்னிராசபதத்திலாசையுமன்னுவெம்
போரிலாசையுநேயமங்கையர்போகமன்பொடுபுதிதுணுஞ்
சீரிலாசையும்விட்டுநன்னெறிசேரவுன்னுதிநீயெனத்
தூரிலாசையறத்துறந்தருள்சுருதிமாமுனிசொல்லவே.

(இ - ள்.) பாரில் ஆசையும் - பூமியினிடத்திலுள்ள ஆசையை யும், நின் இராசபதத்தில் ஆசையும் - உனது இராச்சியாதிகாரத்தி லுள்ள ஆசையையும், மன்னு வெம் போரில் ஆசையும் - பொருந்தின கொடிய யுத்தஞ்செய்தலிலுள்ள ஆசையையும், நேயம் மங்கையர் போகம் அன்பொடு புதிது உணும் சீரில் ஆசையும் - அன்புள்ள மாதர்களது கலவியின்பத்தை அன்புடனே புதிது புதிதாக அனுப விக்கும் பெருமையில் உண்டாகும் ஆசையையும், விட்டு - (முழு வதுந்) துறந்து, நீ—, நல்நெறி சேர - எல்லா (வழிகளிலுஞ்) சிறந்த முக்தி மார்க்கத்தை அடைவதற்கு, உன்னுதி - மனத்தில் நினைத்திடு வாய், என - என்று, தூர் இல் ஆசை அற துறந்தருள் சுருதி மாமுனி - அடங்குதலில்லாத ஆசையை முழுவதும் ஒழித்தருளிய வேதம் வல்ல பெரிய சஞ்சய முனிவன், சொல்ல - (தருமனைநோக்கிச்) சொன்னவளவில்—(எ - று.)—'எனக்கனன்றிவை பேசினன்' என மேல் பன்னிரண்டாம் கவியோடு குளகமாய் முடியும்.

"அற்றதுபற்றெனி லுற்றதுவீடு" "பற்றற்றகண்ணே பிறப் பறுக்கும்" என்றபடி எல்லாப் பற்றுக்களையும் ஒழித்தே முத்திநெறி சேர வேண்டுதலால் 'விட்டு நன்னெறிசேர வுன்னுதி' என்கிறான். மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை என்ற மூன்றாசைகளையும் முறையே கூறுவார், இடையில் மண் பொன்களைப் பெறுதற்குக் காரணமான போரிலாசையையுங் கூறினர். தம் பக்கல் எல்லா நற் குணங்களும் அமைந்தவரே பிறர்க்கு உபதேசித்தற்குத் தக்கவராத லால், அவ்வமைதி தோன்ற, 'தூரிலாசையறத் துறந்தருள் சுருதி மாமுனி' என்றார். இராசபதம் - அரசனாயிருக்கும் நிலை; அரசாட்சிச் செல்வம். நேயம் - இது போலியாய் நேச மென்றும் வழங்கும். தூரில் - தூர்தலில்லாத: தூர் - முதனிலைத் தொழிற் பெயர்; இனி ஆசை தூரிலற என இயைத்து ஆசை வேரோடு ஒழிய என்றும் உரைக்கலாம்; "ஆர்வ வேரரிந்து" என்றார் சிந்தாமணியாரும். "அருளிலார்க் கவ்வுலகமில்லை" "அறனுமருளுடையான் கண்ணதே யாகும்" எனத் துறவறத்திற்குச் சிறந்த அருளை உடையதாயிருத் தலை விளக்க 'துறந்தருள்' என்றார். (51)

இதுவும், அடுத்த கவியும் - தருமன் கூறும் உத்தரம்.

11. செம்மையல்லதுவிரகிலாதுதெரிந்தமேதகுசிந்தையான் [செய்
மும்மையுந்தெரிமுனியுரைத்தசொன்முன்னியொண்குறுமுறுவல்
திம்மையேவசைநிற்கவீடுறவெண்ணிநீபுகல்வென்னினும்
வெம்மையேழ்நரகுந்தனித்தனிவீழ்வதேநலமிகவுமே.

(இ - ள்.) செம்மை - (பொருள்களின்) நன்மையையும், அல்லது - நன்மையல்லாத தீமையையும், விரகு இலாது - மாறுபாடில்லாமல், தெரிந்த - (உள்ளபடி பகுத்து) அறிந்த, மேதகு சிந்தையால் - மேன்மை பொருந்தின மனத்தினால், மும்மையும் தெரி - மூன்று காலத்து வரலாறுகளையும் அறிந்த, முனி - சஞ்சய முனிவன், உரைத்த - சொன்ன, சொல் - வார்த்தையை, (தருமபுத்திரன்),— முன்னி - (கேட்டு) மனத்திற் கொண்டு, ஒள் குறு முறுவல் செய்து - ஒள்ளிய புன்சிரிப்பைச் செய்து, 'நீ புகல்வு - நீ (இங்ஙனஞ்) சொல்லு தல், இம்மையே வசை நிற்க - இப் பிறப்பில் இவ்வுலகத்திலே பழி நிலைநிற்க, வீடு உற எண்ணி - முத்தி பெறுதலைக் கருதியே, என்னி னும் - ஆயினும், (இங்குப் பழி நிற்க வீட்டுலகத்தையடைதலினும்), வெம்மை ஏழ் நரகும் தனித்தனி வீழ்வதே மிகவும் நலம் - கொடுமை யையுடைய ஏழ்வகை நரகங்களிலுந் தனித்தனியே விழுந்து வருந்து வதே மிகவும் நன்மையாம்; (எ - று.)—'முறுவல் செய்து' என்பது. அடுத்த கவியில் 'பேசினான்' என்பதோடு குளகமாக முடியும்.

"வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய, வாழ்வாரே வாழாதவர்" என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும். செம்மை யென வந்ததனால், அல்லது-தீமையாயிற்று. விரகு - வஞ்சனை. புன் சிரிப்புச் செய்யுங்காலத்து வெள்ளியபற்களினொளி சிறிது வெளித் தோன்றுதலால், 'ஒண்குறு முறுவல்செய்து' என்றது. ஏழ்நரகம் -

அள்ளல், ரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி எனப்படும்: தமப்பிரபை, இமப்பிரபை, தூமப்பிரபை, வாலுகப்பிரபை, சாகரப்பிரபை, இரத்தப்பிரபை, அழற்பிரபை என்றும், அவையாவன - இருள், குளிர், புகை, மணல், துயிலாமை, இரத்தம், தீ என்றுங் கூறுவாருமுளர். செம்மையல்லது - உம்மைத்தொகை. ஒண்குறு முறுவல் - பண்புத்தொகை பன்மொழித்தொடர். ஏழ் என இது மெய்யீற்றுப் பெயரென்பது ஆசிரியர் தொல்காப்பியனார் கொள்கை; ஏழு என முற்றியலுகரவீற்றுப் பெயரென்பது - நன்னூலார் மதம். (52)

12. நின்னறத்தினினீர்மைதன்னைவிளங்குமாறுநிகழ்த்தினும்
மன்னறத்தினைவிட்டுநல்லறமன்னரானவர்முயல்வரோ
என்னறத்தினினின்றுதெவ்வரையிருவிசும்பினிலேற்றினாற்
பின்னறத்தினினினைவுகூருமெனக்கனன்றிவைபேசினான்.

(இ - ள்.) நின் - உனக்கு உரிய, அறத்தின் - துறவறத்தினது, இன் நீர்மைதன்னை - இனிமையான தன்மையை, விளங்கும் ஆறு - நன்றாகத் தெரியும்படி, நிகழ்த்தினும் - (நீ) கூறினாலும், மன்னரானவர் - அரசர்கள், மன் அறத்தினை விட்டு - ராஜதர்மத்தை நீங்கி, நல் அறம் முயல்வரோ - சிறந்த துறவற வழியையே அடையப் பிரயத்தனப்படுவார்களோ? (படாரன்றே!), என் அறத்தினில் நின்று - எனக்குரிய ராஜதருமத்திலே தவறாமல் நிலைத்து நின்று, தெவ்வரை - பகைவர்களை, இரு விசும்பினில் ஏற்றினால் - பெரிய வீரசுவர்க்கத்திலே சேரச்செய்தால் [கொன்றால் என்றபடி], பின் - அதன் பின்புதான், அறத்தினில் நினைவு கூரும் - துறவறத்தில் எண்ணம் மிகும், என - என்று, இவை - இவ்வார்த்தைகளை, கனன்று - கோபங்கொண்டு, பேசினான் - (சஞ்சயனோடு) சொன்னான், (யுதிட்டிரன்); (எ - று.)

போரிற் பின்வாங்காமற் பகைவராலிறந்தவர் வீரசுவர்க்கமடைவரென்பது நூற்றுணிபு. துறவறம் முத்திபெறுதற்குரிய சிறந்த உபாயமாதலால், நல்லறமெனப்பட்டது. இராசதருமத்தினின்று பகை யொழித்தபின்பே மனத்திற்கு நிச்சலத்தன்மை தோன்றித் துறவறத்திற்குச் செல்லுமாதலால், சஞ்சயமுனிவனே! உன்னுபதேசத்துக்கு என்மனம் இப்போது இடங்கொடாது என்று மறுத்தவாறு. தெவ்-பகைமை யுணர்த்தும் உரிச்சொல்; "தெவ்வுப்பகைமை" என்பது தொல்காப்பியம்; அதனையுடையவர் தெவ்வர். விசும்பு - ஆகாயம். (53)

அதுகேட்டு வீமன் கூறத்தொடங்குதல்.

13. முனியுமப்பெருமுரசுயர்த்தவனும்புகன்றனமுன்னிநா
மினியுரைப்பதுகடனெனத்துணைவிழிசிவப்பெழவெழிலியின்
தனிதமுற்றனவுருமின்வெஞ்சினமூளமற்றிவைசாற்றுவான்
கனியெனத்தினகரனைவவ்வியகடவுண்மாருதிதுணைவனே.

(இ - ள்.) தினகரனை - சூரியபகவானை (நோக்கி), கனி என - ஒரு பழமென்று கருதி, வவ்விய - (கையாற்) கவர்தற்குத் தொடங்கின,

என்று - என்று சொல்லி, (எ - று.)—'விடை கொடுத்ததன்பின்', எனமேற்கவியோடு தொடரும்.

உத்தமரது தானச்சிறப்பை யெடுத்துக்கூறுவார், அதற்கு எதிரர்கிய அதமரது லோபகுணத்தின் இழிவையும் உடனெடுத்துக் காட்டினார். இங்கே 'கர்ணன் மிகுந்த கொடையாளி' என்ற சிறப்புப் பொருளை 'உத்தமரது உதாரகுணம் இத்தன்மையது'என்ற பொதுப் பொருள்கொண்டு விளக்கியது வேற்றுப்பொருள் வைப்பணி. இரந்தவற்கு - இரந்த உனக்கு என முன்னிலைப்படர்க்கை. உயிரினும் அரியது இன்றாதலின், 'ஆருயிர்' எனப்பட்டது. ஆருயிர் - பண்புத்தொகை; இனி வினைத்தொகையாகக்கொண்டு, நிறைந்த [பஞ்ச] பிராணன்களென்றுமாம். எண்மையாயினும், இளைஞரே யேற்பினும், ஆருயிர்மாற்றலார் கேட்பினும் என்றவற்றால், உலோபிகளுக்கும் உதாரகுணமுடையார்க்கும் உள்ள வேறுபாடு நன்குவிளக்கப்பட்டது. வண்மையாளர் - வண்மைக்குணத்தை யாளபவர். மாற்றலார் - தம்மிடத்து மனத்தை மாற்றுதலுடையவரென உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும்பெயராகிய காரணக்குறி. பின் இரண்டடி - உலக இயற்கை கூறியது. எண்மை என்னும் பண்புப்பெயரில் எள் - பகுதி; அது இகரம் பெற்று எளிமையென்றும் நிற்கும். செல்வம் படைத்ததற்குப் பயன் பிறர்க்குக் கொடுத்தலேயாதலால், அத்தன்மையில்லாதாரை, 'இயல்பிலாப் புன்செல்வர்' என்றார். (306)

## 247.—கண்ணன் குந்தியைக் கர்ணனிடம் அனுப்புதல்.

வாசவன்றனக்குவிடைகொடுத்ததன்பின்வந்தகாரியந்தனை முடிப்பான், கேசவன்றனதுதாதையோடுதித்த கேண்மைகூர் தெரிவையைக் கிட்டித், தேசவன்றந்தகுரிசில்பால்விரைவிற் செல்கெனப் பயந்த சேயிழையும், பாசமுன்னுறமாலேவலாற்றனது பாதபங்கயஞ்சிவப்பித்தாள்.

(இ - ள்.) வாசவன் தனக்கு - இந்திரனுக்கு, விடைகொடுத்ததன் பின் - செலவு கொடுத்தனுப்பியபின், கேசவன் - கண்ணன், வந்த காரியந்தனை முடிப்பான் - (தான் திருவுள்ளத்திற்கருதி) வந்த தொழிலை நிறைவேற்றும்பொருட்டு, தனது தாதையோடு உதித்த கேண்மை கூர் தெரிவையை கிட்டி - தனது தந்தையாகிய வசுதேவருடன் பிறந்த [தனது அத்தையாகிய] (யாவரிடத்தும்) அன்பு மிக்க குந்திதேவியை அடைந்து, தேசவன் தந்தகுரிசில்பால் விரைவின் செல்க என - ஒளிமிகுதியையுடைய சூரியன் பெற்ற குமாரனை கர்ணனிடத்திற் சீக்கிரமாகச் செல்வாயென்று சொல்ல,—பயந்த சேயிழையும் - (அவனைப்) பெற்றவளான குந்திதேவியும், பாசம் முன்உற - (மைந்தனாகிய கன்னன்பக்கல்) அன்பு (தனக்கு) முன் செல்ல, மால் ஏவலால் - கண்ணனது கட்டளைப்படி, தனது பாத பங்கயம் சிவப்பித்தாள் - தன்னுடைய தாமரைமலர்போன்ற கால்களைச் சிவக்கச்செய்தாள்; (எ - று.)

முன்னே இராமாவதாரத்தில் சூரியகுமாரனை சுக்கிரீவன் பக்கத்திற் சேர்ந்து இந்திர புத்திரனை வாலியை வதைத்ததற்குப் பிரதியாக இவ் வவதாரத்தில் இந்திரகுமாரனை அருச்சுனன்பக்கல் சேர்ந்து சூரியபுத்திரனை கர்ணனை அழித்தருளுகின்றான்போலும், தெரிவை - இங்கே பெண்ணென்னும் மாத்திரமாய்நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபத்தாறு முதல் முப்பத்தொன்றளவும். தேசு - கிரணம்; அதனையுடையவன், தேசவன். சேயிழை யென்பதற்குச் சிவந்த [செம்பொன்னாலாகிய] ஆபரணங்களையுடையவளென்று பொருள்; பண்புத்தொகை யன்மொழி; செம்மை இழை யெனப் பிரிக்க. இழை - இரத்தினங்களை யிழைத்துச் செய்வதென ஆபரணமாம்; இனி, இழையென்னும் நூலின்பெயர் சினையாகு பெயராய், ஆடையையுணர்த்துவ தென்றுங் கொள்ளலாம். (307)

## 248.—தனது மாளிகைக்கு வந்த குந்திதேவியைக் கர்ணன் எதிர்கொண்டு சென்று உபசரித்தல்.

வந்துகுந்திநின்கோயிலெய்தினளெனவாயிலோருரைத்திட மைந்தன், முந்துமன்புடன்றொழுதெதிர் கொண்டுநன்முறைமையாலாசனத் திருத்தி, யிந்துவின்கதிர்கண்டுமேன்மேலுமுற்றிரங்கிவான்கரைகடந் தேறுஞ், சிந்துவெண்டிரைச்சிந்துவொத்துருகுந் தெரிவையோடுரை சிலசெப்பும்.

(இ - ள்.) (இங்ஙனம் குந்தி கர்ணன்வீட்டுக்கு நடந்து சென்றதும்), குந்தி வந்து நின் கோயில் எய்தினள் என வாயிலோர் உரைத்திட - குந்திதேவி வந்து உனது சிறந்த அரண்மனையை அடைந்தாளென்று வாயில் காவலாளர் சொல்ல, மைந்தன் - புத்திரனாகிய கர்ணன், முந்தும் அன்புடன் - மிகுந்த அன்புடனே, எதிர்கொண்டு - எதிர்கொண்டுவந்து, தொழுது - வணங்கி, நல் முறைமையால் - (சாஸ்திரங்களில் தாய்க்குச் செய்யும்படி சொன்ன) நல்ல உபசார முறைதவறாமல், ஆசனத்து இருத்தி - (சிறந்ததோர்) ஆசனத்திலே வீற்றிருக்கச்செய்து, இந்துவின் கதிர் கண்டு மேல் மேலும் உற்று இரங்கி வான் கரை கடந்து ஏறும் சிந்து வெள் திரை சிந்து ஒத்து உருகும் தெரிவையோடு - சந்திரனது கிரணத்தைப் பார்த்து (மிகமகிழ்ந்து) மேலேமேலே பொங்கி ஒலித்துப் பெரிய கரையைக் கடந்து மீதெழுகிற வீசுகிற வெண்மையான அலைகளை யுடைய கடலைப்போன்று மனம் மிக மகிழ்கிற அக்குந்தியுடனே, சில உரை செப்பும் - சிலவார்த்தைகளைக் கூறுவான்; (எ - று.)

சந்திரனைக் கண்டமாத்திரத்தில் கடல் பொங்குவது பிரசித்தம். சூரியபுத்திரனை கர்ணனுக்குச் சந்திரனையும், அவனது தாய்க்குச் சந்திரனுக்கு உற்பத்தி ஸ்தானமான கடலையும் உவமை கூறினர். இந்து - வடசொல். நான்காமடியிலுள்ள சிந்துவென்னுஞ்சொல் இரண்டனுள், முன்னது - தமிழ்வினைப் பகுதி; பின்னது - ஸிந்து வென்னும் வடமொழிப்பெயர். (308)

## 249.—குந்தி கர்ணனைநோக்கி 'நான் உனக்குத் தாய்' என்றல்.

அன்னைவந்ததென்னருந்தவப்பயனெனவன்பினுலின்புறவணங்கி,
யென்னைவந்தவாறென்னமற்றவளுமே யீன்றதாயானுனக்கென்று,
முன்னைவந்தொருமந்திரந்தவமுனி மொழிந்ததுங் கதிரவனருளாற்,
பின்னைவந்ததும்பேழையில்விடுத்ததும் பிழையிலா துரைத்திடக்
கேட்டே.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) 'அன்னை - தாயே! வந்தது - (நீ என்னிடம்) வந்தது, என் அருதவம் பயன் - எனது அருமையான தவத்தின் பயனும்', என - என்று சொல்லி, அன்பினுல்—, இன்பு உற வணங்கி-மகிழ்ச்சி பொருந்த (அவளை) நமஸ்கரித்து, வந்த ஆறு என்னை என்ன - '(நீ இங்கே) வந்த காரியம் என்ன?' என்று கேட்க,—மற்று - பின்பு, அவளும் - அக்குந்தியும், யான் உனக்கு ஈன்ற தாய் என்று - 'நான் உனக்குப் பெற்றதாயாவேன்' என்று (முதலிற் சுருக்கமாகக் கூறி), (உடனே),—தவம் முனி - தவத்திற் சிறந்த துர்வாசமுனிவன், முன்னை - இளம்பிராயத்திலே, வந்து—, ஒரு மந்திரம் - ஒரு மந்திரத்தை, மொழிந்ததும் - (தனக்கு) உபதேசித்தருளினதையும், கதிரவன் அருளால் - சூரியனது அனுக்கிரகத்தால், பின்னை - பின்பு, வந்ததும் - (கன்னன்) பிறந்ததையும், பேழையில் விடுத்ததும்-(தான் அவனைப்) பெட்டியில் (வைத்து நதியிற்) செலுத்தினதையும், (ஆகிய வரலாறுகளை), பிழை இலாது உரைத்திட - தவறுதலில்லாமற் சொல்ல, கேட்டு - (கர்ணன்) செவியுற்று,—(எ - று.)—'மதித்து' என மேற்கவியோடு குளகமாக இயையும்.

அன்னை - அண்மைவிளி; அன்னையாகிய நீ என முன்னிலைப் படர்க்கையுமாம். "சாபத்தாலுஞ் சாபமொழிதன்னுல் வளருந்தவத்தாலுங், கோபத்தாலும் போர்படைத்த கொடிய முனிவன் துருவாசன்,' ஆதலால், 'தவமுனி' என்றுர். உனக்கு ஈன்ற தாய் - நான்காம் வேற்றுமை முறைப்பொருளது. (309)

## 250.—கர்ணன் சில கூறி அதனை மறுத்தல்.

மாயனுர்விரகிதுவென மனத்தினின் மதித்துவந்தளித்திடும்
வள்ளல், நீயநாளெனைப் பயந்தவளென்னினு நின்மொழி நெஞ்
சுறத்தேறேன், பேயனுர்சிலர் பேறறிவின்மையாற் பெற்றதாயெனக்
கெனவந்து, தூயநாகரினமைந்தரோர் துகிலாற்றுன்பமுற்றென்புரு
வானுர்.

(இ - ள்.) உவந்து அளித்திடும் வள்ளல் - (தன்னை வந்து அடைபவர்க்கு வேண்டிய பொருள்களை) மகிழ்ச்சியோடு கொடுத்திருக்கிற உதாரகுணமுள்ளவனுகிய கர்ணன்,—இது மாயனுர் விரகு என மனத்தினில் மதித்து - (இங்ஙனம் இவள் சொல்லும்) இது கண்ணபிரானது வஞ்சனையாக இருத்தலுங் கூடுமென்று மனத்திலே

வினைத்து, (அவளை நோக்கி),—'நீ அந்நாள் எனை பயந்தவள் என்னினும் - நீ அக்காலத்தில் என்னைப்பெற்றவளென்று சொன்னாலும், நின் மொழி நெஞ்சு உற தேறேன் - உன்வார்த்தையை மனத்திற் பொருந்த நம்பமாட்டேன்; பேய் அனார் சிலர் - பேயை யொத்தவராகிய சில மகளிர், பேர் அறிவு இன்மையால் - சிறந்த அறிவு இல்லாமையால், எனக்கு பெற்ற தாய் என வந்து - எனக்கு ஈன்ற தாயாவேனென்று (தனித்தனி உறவு) கூறி வந்து, தூயநாகரின் அமைந்தது ஓர் துகிலால் - பரிசுத்த குணமுள்ள தேவர்களால் அமைக்கப்பட்டதொரு வஸ்திரத்தால், துன்பம் உற்று - மரணவேதனையடைந்து, என்பு உரு ஆனார் - எலும்பு மாத்திரம் மிகுந்த வடிவமானார்கள்;

இன்னாள் பெற்ற பிள்ளை யென்று ஏற்படாத கர்ணன் மிகுந்த உதாரகுணமுடையவனாக இருந்ததனால் உலகத்தில் பணப்பித்துக் கொண்ட பல மகளிர் இவனிடம் வந்து தாம் தாம் தாயென்று கூறிச் செல்வம் பறிக்க முயல, அதனை நோக்கிக் கர்ணன் தேவர்களை வேண்டவே, அவர்கள் தெய்வத்தன்மையுள்ள ஓராடையைத் தந்து 'உண்மையான தாயொருத்தியொழிய வேறு எவரேனும் தாயென்று வருபவர் இதனை உடுத்தால் இறப்பர்' என்று சொல்லிப் போக, அங்ஙனம் அவனாற் பரீட்சிக்கப்பட்டுப் பல தாய்மார் அச்சேலையால் உடலெரிபட்டு ஒழிந்தனரென வரலாறு காண்க. பேய் - வந்த பூதனையென்னும் பேய்மகளாகவுமாம். அந்நாள் - அநாளென எதுகைப் பொருத்த நோக்கித் தொகுத்தல். (310)

வேறு.

## 251.—கர்ணனளித்த ஆடைகளைத் தரித்துக் குந்தி அழியாதிருத்தல்.

அடாதுசெய்தவர் படாதுபட்டனரெனு மங்கர்கோனருண்மொழி கேட்டுத், தடாதவன்புடைக்கெடாததூமொழி பகர்தையலு மையலிற் றவிர்ந்து, படாமதென்கையிற் றருகெனவருதலும்பயந்திலேனெனி லெனைமுனியென், றெடாவிரித்ததைத் துடற்படப்போர்த் தெதிரீன்ற தாயாமெனவிருந்தாள்.

(இ - ள்.) 'அடாது செய்தவர் - தகாத காரியத்தைச் செய்தவர்கள், படாது பட்டனர் - படுதற்கரிய பாடுபட்டு இங்ஙனம் ஒழிந்தார்கள்,' எனும் - என்று சொன்ன, அங்கர்கோன் அருள் மொழி - கர்ணனது கருணையோடு கூடிய வார்த்தையை, கேட்டு—, தடாத அன்பு உடைகெடாத தூ மொழிபகர் தையலும் - (எவராலும்) தடுக்கப்படாத அன்புடையவளும் குற்றமில்லாத பரிசுத்தமான சொற்களைச் சொல்பவளுமாகிய அழகிய அக்குந்தியும், மையலின் தவிர்ந்து - மயக்கத்தினின்று நீங்கி, படாம் அது என் கையில் தருக என - 'அந்த வஸ்திரத்தை எனது கையிலே கொடுப்பாய்' என்று சொல்லி, வருதலும் - (அவனாற் கொடுக்கப்பட்டு அது தன் கைக்கு) வந்தவளவிலே,—பயந்திலேன் எனில் எனை முனி என்று - ('யான் இவனைப்) பெற்றவளல்லேனானால் என்னைக் கோபித்தழிப்பாய்' என்று (அத்தெய்வ வஸ்திரத்தை நோக்கிச்) சொல்லி, எடா விரித்து

அலைத்து உடல் படபோர்த்து-(அதனை) எடுத்துப் பிரித்து உதறித் தன் உடம்பிலே படும்படி போர்த்துக்கொண்டு, எதிர் - (அக்கர்ண னது) எதிரிலே, ஈன்ற தாய்ஆம் என - பெற்றதாய் இவளேயாம் என்னும்படி, இருந்தாள் - வீற்றிருந்தாள்; (எ - று.)

அடாது - பொய்யுறவுகூறுதல். அடாது, படாது - எதிர்மறை ஒன்றன்பால் வினையாலணையும்பெயர்கள். "அறந்துறந்தென்று மடார்தன செய்தாலார்கொலோ படாதனபடாதார்" என்றார் கீழ்ச் சடாசுரன் வதைச்சருக்கத்தும். 'அடாதுசெய்தவர் படாதுபடுவர்' என்பது ஒரு பழமொழி. எனும் மொழியென இயையும். இவள் பொய்த் தாயாயின் வீணே இறக்கலாகாது என்ற நல்ல கருத்தோடுங் கூறியதனால், "அருள்மொழி" எனப்பட்டது. தையல் - அழகுடைய வர்க்குப் பண்பாகுபெயர். மையலிற்றவிர்ந்து - என்னாகுமோ வென்ற சங்கையில்லாமலென்றபடி; இவள் இங்ஙனம் மையலிற் றவிர்ந்தது, கண்ணன் பேச்சிலுள்ள விசுவாசத்தால். படாம் - பட மென்னும் வடசொல்லின் திரிபு; 'முகபடாம்' என்பதிலுங் காண்க.

இதுமுதற் பதினான்கு கவிகள் - பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரிய விருத்தங்கள்: கீழ் 247 - ஆம் கவியும் இவ்வாறே. (311)

252.—அதுகண்டு வியந்த கர்ணனை நோக்கிக் குந்தி சிலகூறுதல்.

இருந்ததாயீன்றவன்றுபோலுருகி யிருதடங்கொங்கைபால் சொரிந்தாள், அருந்துவான்போல விரவிசேய்விரும்பியாதரத்துடன் புளகானான், புரிந்ததாயன்போடிறுகுறத்தழுவிப்பொன்முடிமோயினை ளுயிராப், பரிந்துநானன்றேயுனைவளர்த்தெடுக்கப் பாக்கியஞ்செய் திலேனென்றாள்.

(இ - ள்.) இருந்த தாய் - (இங்ஙனம் ஆசனத்தில்) வீற்றிருந்த தாயான குந்திதேவி, ஈன்ற அன்றுபோல்-பெற்ற அந்நாளிற்போல, உருகி - மனம் மிக அன்புகொண்டு, இருதட கொங்கைபால் சொரிந் தாள் - தனது பெரிய இரண்டு தனங்களினின்றும் பாலைச் சொரிய விட்டாள்; (அப்பொழுது), இரவி சேய் - சூரியபுத்திரனான கர்ணன், விரும்பி - (தாய்பக்கல்) அன்பு கொண்டு, அருந்துவான்போல-(அம் முலைப்பாலை) உண்பவன்போல, ஆதரத்துடன் - ஆசையுடனே, புளகு ஆனான் - உடம்பு மயிர் சிலிர்க்கப்பெற்றான்; புரிந்த தாய் - (இங்ஙனஞ்) செய்த தாயான அக்குந்தி, அன்போடு—, இறுகுற தழுவி - (அவனை) நன்றாக அணைத்துக்கொண்டு, பொன் முடி மோயினள் உயிரா - அழகிய அவனது உச்சியை மோந்துபெருமூச்சு விட்டு, நான் உனை அன்றே பரிந்து வளர்த்து எடுக்க பாக்கியம் செய்திலேன் என்றாள் - 'நான் உன்னைப்பெற்ற அக்காலத்திலேயே அன்பு கொண்டு எடுத்துவளர்க்க நல்வினைப்பயன் பெற்றேனில்லை' என்று கூறினாள்; (எ - று.)

மிக்க அன்பினால், இப்பொழுது தனங்களிற் பால் சுரந்தது. "அன்றன்போ டெடுத்தணைத்து முலைக்கணூற லமுதூட்டி,' என்பர் மேற்கன்னபருவத்தும். மோயினள் - முற்றெச்சம்; "மோயினளுயிர்த்தகாலை" என்றார் பிறரும். மோ - பகுதி, ய் - எழுத்துப் பேறு, இன் - இறந்தகால இடைநிலை, அள் - பெண்பால்விகுதி. உடம்பில் மயிர் சிலிர்த்தல், அன்பின் மெய்ப்பாடு. ஆதாரம், புளகம், பாக்யம் - வடசொற்கள். பாக்கியம் - அதிருஷ்டம்; நல்லூழ்ப்பேறு. இறுகுற - அழுந்த. 'பால்சுரந்தாள்' என்றும் பாடம். (312)

253. வருகவென்மதலாயிளைஞரைவருநின் மலரடியன்பினால் வணங்கி, யுரிமையான்மனமொத்தேவலேபுரியவொருதனிச்செய்ய கோலோச்சி, யரசெலாம்வந்துன்கடைத்தலைவணங்க வாண்மையுஞ் செல்வமும்விளங்கக், குருகுலாதிபர்க்குங்குரிசிலாய்வாழ்வு கூர்வதே கடனெனக் குறித்தாள்.

(இ - ள்.) (பின்பு குந்தி கர்ணனைப்பார்த்து), 'என் மதலாய் - எனது புத்திரனே! வருக - (என்னுடன்) வருவாயாக; இளைஞர் ஐவரும் - (பாண்டவர்களாகிய உன்) தம்பியரைந்துபேரும், நின் மலர் அடி அன்பினால் வணங்கி - உனது தாமரை மலர்போலும் பாதங்களை அன்பால் நமஸ்கரித்து, உரிமையால் - க்ஷத்திரியதரும முறைப்படி, மனம் ஒத்து ஏவலே புரிய-மனம் ஒருமித்து (நீயேவின) சிறுகுற்றேவல் தொழில்களையே செய்ய, ஒருதனி - ஒப்பற்ற தனியாய், செய்ய கோல் ஓச்சி - (நீ) செங்கோலை நடத்தி, அரசு எலாம் வந்து உன் கடைத்தலை வணங்க - அரசர்களெல்லாரும் வந்து உனது வாயிற்புறத்தில் நின்று வணங்கவும், ஆண்மையும் செல்வமும் விளங்க - வீரமும் செல்வமும் விளங்கவும், குருகுல அதிபர்க்கும் குரிசில் ஆய் - குருகுலத்து அரசர்கட்கெல்லாம் அரசனாய், வாழ்வு கூர்வதே-வாழ்க்கை மிக வேண்டுவதே, கடன் - (நீ செய்தற்கு உரிய) கடமை,' என - என்று, குறித்தாள்-குறிப்பிட்டுக் கூறினாள்; (எ-று.)

மதலாய் - மதலையென்பது ஈறுதிரிந்த விளி. ஏவலே புரிய - அரசுபுரியாமலென்றபடி. ஒருதனி - தன்னந்தனியே. தலைக்கடை - கடைத்தலை; இலக்கணப்போலி. (313)

## 254.—இதுவும் மேற்கவியும் ஒருதொடர்: அதுகேட்டுக் கர்ணன் குந்தியை நோக்கிக் கூறுவன.

பெற்றநீர்மகவன்பிலாமையோவன்றிப்பெரும்பழிநாணியோவிடுத்தீர், அற்றைநாட்டொடங்கி யென்னையின்றளவு மாருயிர்த்துணையெனக்கருதிக், கொற்றமாமகுடம்புனைந்தரசளித்துக் கூடவுண்டுரிய தம்பியருஞ், சுற்றமானவருமென்னடிவணங்கத்தோற்றமுமேற்றமுமளித்தான்.

(இ - ள்.) பெற்ற நீர் - (என்னை) ஈன்ற நீர், மகவு அன்பு இலாமையோ - புத்திரவாற்சலிய மில்லாமையினாலோ? அன்றி- அல்லது, பெரு பழி நாணியோ-பெரியலோகாபவாதத்துக்கு வெட்கப்பட்டோ? விடுத்தீர் - (என்னை) விட்டுவிட்டீர்; அற்றை நாள் தொடங்கி-அன்

றைய தினம் முதல், இன்று அளவும் - இன்றைவரையிலும், என்னை —, ஆர் உயிர் துணை என கருதி - அருமையான உயிரோடொத்த நண்பனாகநினைத்து, (துரியோதனன்), கொற்றம் மா மகுடம்புனைந்து வெற்றியை விளக்குகிற சிறந்தகிரீடத்தை (எனக்கு)ச் சூட்டி, அரசு அளித்து - (அங்கதேசத்து) அரசாட்சியையுங் கொடுத்து, கூட உண்டு - (என்னை) உடன்வைத்துக்கொண்டு புசித்து, உரிய தம்பியரும் சுற்றமானவரும் என் அடி வணங்க - (அவனுக்கு) உரிய தம்பிமார்களாகிய துச்சாதனன் முதலியோரும் (மற்றும்அவனுடைய) உறவினரானவர்களும் எனது பாதங்களை நமஸ்கரிக்க, தோற்றமும் ஏற்றமும் அளித்தான் - பிரசித்தியான பேரையும் உயர்வையும் (எனக்குக்) கொடுத்தருளினான்; (எ - று.)

இவன் பழிநாணி விடுத்தது, அன்பில்லாது விடுத்ததுபோலுமாதலால் இதுவோ அதுவோ என விகற்பித்தான். அன்று + நாள் = அற்றைநாள். தோற்றம் - தோன்றுவதான புகழுக்குக் காரணப் பெயர். (314)

255. மடந்தைபொற்றிருமேகலைமணியுகவே மாசறத்திகழுமே காந்த, விடந்தனிற்புரிந்தேநானயர்ந்திருப்பவெடுக்கவோகோக்கவோ வென்றான், திடம்படுத்திட வேலிராசராசனுக்குச்செருமுனைச் சென்று செஞ்சோற்றுக், கடன்கழிப்பதுவேயெனக்கினிப் புகழுங் கருமமுந்தரு மமுமென்றான்.

(துரியோதனனுக்குத் தன்னிடத்தில் மிகுந்த விசுவாசம் [நம்பிக்கை] எனத் தெரிவித்தற்கு, முன்னே நடந்ததொரு அந்தரங்கமான செய்தியைக் கர்ணன் எடுத்துக் கூறுகிறான்.)

(இ - ள்.) மாசு அற திகழும் ஏகாந்தம் இடந்தனில் - குற்றமில்லாமல் விளங்குவதொரு இரகசியமான இடத்திலே, நான் —, மடந்தை பொன் திரு மேகலை மணி உக புரிந்து - (துரியோதனன் மனைவியான) பானுமதியினது பொன்னினாலாகிய அழகிய மேகலாபரணத்தின்மணிகளைச் சிந்தும்படி செய்து, அயர்ந்து இருப்ப - செயலற்றுச் சிந்தித்திருக்க, (அப்பொழுது துரியோதனன் வந்து), எடுக்கவோ கோக்கவோ என்றான் - (இம்மணிகளை நான்) எடுத்துக்கொடுப்பேனாகவா? கோத்துக்கொடுப்பேனாகவா? என்று (எனக்கு அச்சம்நீங்கும்படி அன்போடு) கேட்டான்; (அப்படிப்பட்ட), வேல் இராசராசனுக்கு - வேலில்வல்ல துரியோதனராசனுக்கு, திடம்படுத்திட - உறுதியை உண்டாக்குதற்கு, செருமுனை சென்று - (நான்) போர்க்களத்திலே போய், செம் சோறு கடன்கழிப்பதுவே - (அவன்) செவ்வையாகப் போகட்டு வந்த சோற்றுக்கு உரிய கடனைத்தீர்ப்பதே, எனக்கு இனி புகழும் கருமமும் தருமமும் - எனக்கு இனிமேல் கீர்த்தி தருவதும் செய்தக்கதொழிலும் அறமுமாம், என்றான் - என்று (கன்னன் குந்தியைநோக்கிக்) கூறினான்; (எ - று.) இங்ஙனஞ் சொல்லித் துரியோதனனைவிட்டுப் பாண்டவரிடம் வரமாட்டேனென்று கன்னன் தடுத்தான்.

"வெஞ்சோற்றூ டினிதருந்தி யமுதருந்தும் விண்ணவர்போலிந்நெடு நாள் விழைந்துவாழ்ந்தேன், செஞ்சோற்றுக்கடனின்றே

கழியேனுகில் திண்டோள்கள் வளர்த்ததனுற் செயல்வேறுண்டோ" "செருவிலெனதுயிரனைய தோழற்காகச் செஞ்சோற்றுக் கடன்கழித்தேன்' எனக் கன்னபருவத்துக் கூறுமாறுங்காண்க முன்புஒருநாள் கர்ணன் துரியோதனன்மனைவியான பாநுமதியோடு தனிமையான இடத்திற்குதாட்டமாடிக் கொண்டிருக்கையில் துரியோதனன் தூரத்தில் வருதலைக்கண்டு பாநுமதி எழுந்துசெல்ல, அவன் வருதலைப் பாராத கர்ணன் ஆட்டத்தின்நடுவில் எழுந்துசெல்லலாகாதென்று அவள்மடியைப்பற்றி இழுத்தபொழுது, மேகலையறுந்து மணிகள் உதிரவே, அச்சமயத்தில் துரியோதனன் வந்ததைநோக்கிக் கன்னன் அஞ்சிவெள்கி என் செய்வதென்று அலமருகையில், அத்துரியோதனன், கன்னன் அஞ்சாதபடி 'இம்மணிகளை நான் எடுத்துக் கோத்துக் கொடுக்கட்டுமா?' என்று கேட்டனனென்பது வரலாறு. பாரதவெண்பாவிலும் இவ்வரலாறு கூறப்பட்டுள்ளது. செஞ்சோறு - சிறந்த அன்னம்; அறுசுவையோடு கூடிய உணவு; மானக்குறைவு இல்லாதபடி இட்டுவந்தது. மேகலை - எட்டுக்கோவையுடையது; "எண்கோவைமேகலை" என்பதுகாண்க. (315)

## 256.—குந்தி வருந்துதல்.

பின்னையும்பற்பன்மொழிந்தபின்பலவும்பேசியென்பூசலோவிளைந்தது, உன்னிநீரிங்குவந்ததென்கரவாதுண்மையா லுள்ளவாறுரைமின், என்னமைந்தனுமிப்பரிசினுலுரைப்ப வீன்றறத்துறந்தவன்றையினும், அன்னைநெஞ்சழிந்தேயிருகணீர்சொரியவலறிவாய்குழறிநொந்தழுதாள்.

(இ - ள்.) மைந்தனும் - புத்திரனான கர்ணனும், பின்னையும் பலபல மொழிந்த பின் - பின்னும் அநேகவார்த்தைகளைச் சொன்ன பின்பு, 'பலவும் பேசி என் - பலவார்த்தைகளையுஞ் சொல்லிப் பயன் என்ன? பூசலோ விளைந்தது - யுத்தமோ உண்டாகிவிட்டது; நீர் இங்கு உன்னி வந்தது என் - நீர் இவ்விடத்தில் [என்னிடத்தில்] நினைத்துவந்த காரியம் யாது? கரவாதுஉண்மையால் உள்ள ஆறு உரைமின் - ஒளிக்காமல் மெய்யாக உள்ளபடிசொல்லும்,' என்ன - என்று, இ பரிசினுல் உரைப்ப - இந்தவிதமாகச் சொல்ல,— அன்னை - தாயான குந்தி, ஈன்று அற துறந்த அன்றையினும் - பெற்று (உடனே) நீங்கும்படி விட்ட அந்நாளினும் (அதிகமாக), நெஞ்சு அழிந்து - மனம்வருந்தி, இருகண் நீர் சொரிய - தனது இரண்டு கண்களினின்றும் நீர் பெருக, அலறி - கதறி, வாய்குழறி-வார்த்தை தடுமாறி, நொந்து - வருந்தி, அழுதாள் - புலம்பினுள்; (எ - று.)

இங்கே 'பெற்றமனம்பித்து, பிள்ளைமனங் கல்லு' என்ற பழமொழியை அறிக. 'உன்னி நீர் இங்கு வந்தது என்' என்பதற்கு - இப்பொழுது நீர் கருதி வந்ததனுல் என்ன பயனென்று உரைப்பினும் அமையும். 'அறற்றுறந்த' என்ற பாடத்துக்கு—அறல் - நீரிலே, துறந்த - விட்ட என்க; பழிக்கு அஞ்சி விட்டவளேயன்றி அன்பின்றி விட்டவளல்லளாதலால், அக்காலத்து மிகுந்த சோகமுற்றேயிருப்பள். விளைந்தது என் இறந்தகாலத்தாற் கூறினது, இனித்தவருதென்ற துணிவால். (316)

## 257.—குந்தியைக் கர்ணன் தேற்றுதல்.

ஆண்டுமாமகனுமிருகணீர்துடைத்தவ்வன்னையைப்பன்முறை தேற்றி, மூண்டவல்வினையின்பயனலாதியார்க்கு முயற்சியால்வருவ தொன்றுண்டோ, வேண்டும்யாவையுமே தருகுவேனீரும் வேண்டிய வேண்டுகவென்னப், பாண்டுவின்றிருமா மனைவியு மதற்குப்பண்பினு லின்னனபகர்வாள்.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, மா மகனும் - பெரிய முதற் புத்திரனான கர்ணனும், இரு கண் நீர் துடைத்து - (அவளது) இரண்டு கண்களினின்றும் பெருகுகிற நீரைத் துடைத்து, அ அன்னையை பல் முறைதேற்றி - அப்படி அழுகிற தாயைப் பலதரம் சமாதானப்படுத்தி, 'மூண்ட வல்வினையின் பயன் அலாது யார்க்கும் முயற்சியால் வருவது ஒன்று உண்டோ - (முற்பிறப்பிற் செய்யப் பட்டு இப்பிறப்பிற்)பயன்தரநின்ற வலியகருமத்தின் பயன் நேர்வதே யல்லாமல் எவர்க்கும் தமது பிரயத்தனத்தால் விளைவதொரு பயன் உண்டோ? [இல்லை யென்றபடி], வேண்டும் யாவையுமே தருகுவேன் - (யான் எல்லோருக்கும்) விரும்பிக் கேட்ட பொருள்கள் எல்லாவற்றை யுமே கொடுக்கும் இயல்புடையேன்; (ஆதலால்), நீரும் வேண்டிய வேண்டுக - நீரும் (இது தவிர) உமக்கு வேண்டிய பொருள்களை வேண்டுவீராக,' என்ன - என்று சொல்ல, பாண்டுவின் திரு மா மனைவியும் - பாண்டுமகாராசனது சிறந்த பெரிய மூத்தமனைவியான குந்தியும், அதற்கு - (அக்கன்னன்) வார்த்தைக்கு, பண்பினுல்-இனி மையாக, இன்னன பகர்வாள் - இவ்வார்த்தைகளைக் கூறுவாள்; (எ - று.)—அவற்றை, மேற்கவியிற் காண்க.

முன்னைய ஊழ்வினைப் பயன்படியே நடக்கும்; நான் வரும்படி நீர் செய்கிற முயற்சி பயன்படாததைப்பற்றி வருந்தவேண்டா என் பது, இரண்டாமடியின் கருத்து. வேண்டிய - பெயர். (317)

## 258.—குந்தி கர்ணனிடம் வரம் வேண்டுதல்.

பார்த்தன்வெஞ்சமரினின்னுடன்மலைந்தாற்பகைப்பெரும்பாந்தளம் பகழி, கோத்தலும்பிழைத்தான்மறித்துநீவிடுத்துக்கோறலென்றொரு வரங்குறித்தாள், வாய்த்தமற்றவர்களிளைஞரென்றவரை மலைய லென்றொருவரங்குறித்தாண், மூத்தவன்காதலிளைஞர்தம்பொருட்டான் மொழிந்தமைகேட்டிவைமொழிவான்.

(இ - ள்.) 'பார்த்தன் - அருச்சுனன், வெம்சமரில் - கொடியயுத் தத்தில், நின்னுடன் மலைந்தால் - உன்னுடன் போர்செய்தால், (அப் பொழுது நீ), பகை பெரு பாந்தள் அம் பகழி - (இவனுக்கு முன்னே தொடங்கிப்) பகையாயுள்ள பெரிய சிறந்த நாகாஸ்திரத்தை, கோத்த லும் - (அவன்மேல் ஒருதரம்) தொடுத்தவளவில், பிழைத்தால் - (அவன் அதற்குத்) தப்பிப் பிழைப்பானுனால், மறுத்தும் நீ விடுத்து கோறல் - மறுபடியும் (அந்த அஸ்திரத்தை) நீ (அவன்மேற்) பிரயோ கித்து (அவனை)க் கொல்லாதே,' என்று ஒரு வரம் குறித்தாள் -

என்று சொல்லி ஒரு வரத்தைக் குறிப்பிட்டு வேண்டினாள்; 'வாய்த்த மற்றவர்கள் - பொருந்தின மற்றைப் பாண்டவர்கள் நால்வரை, இளைஞர் என்று - தம்பிமார்களெனக் கொண்டு, அவரை மலையல்-அவர்களைக் கொல்லாதே,' என்று ஒருவரம் குறித்தாள்—: மூத்தவன் - தமையனான கர்ணன், காதல் இளைஞர்தம் பொருட்டு - அன்புக்கு உரிய தனது தம்பியர்களுக்காக, மொழிந்தமை - (தாய் இங்ஙனஞ்) சொன்னதை, கேட்டு—, இவை மொழிவான் - இவ்வார்த்தைகளைக் கூறுவான்; (எ - று.)

அம்பகழி - பகழிக்கு அழகு, குறித்த இலக்குத் தவறுமை; இனி, அம்-அல்வழிச்சாரியை யெனவுமாம். கோறல், மலையல் - எதிர்மறையொருமை ஏவல்கள். மலையல் என்பதற்கு - போர்செய்யாதே என்று கூறுதல் மேல் யுத்த பருவங்களோடு மாறுபடுமென விடுக்க. ஆல் - அசை. (318)

## 259.—கர்ணனது மறுமொழி.

தெறுகணையொன்று தொடுக்கவுமுனைந்துசெருச்செய்வோன் சென்னியோடிருந்தான், மறுகணைதொடுப்பதாண்மையோவலியோ மானமோமன்னவர்க்கறமோ, வுறுகணையொன்றேபார்த்தன்மேற் றொடுப்பனொழிந்துளோருய்வரென்றுரைத்தான், தறுகணரலர்க்குந் தறுகணனவர்க்குந்தண்ணளிநிறைந்தசெங்கண்ணன்.

(இ - ள்.) 'தெறு கணைஒன்று தொடுக்கவும் - அழிக்கவல்ல அஸ்திரத்தை ஒருமுறை பிரயோகிக்கவும், முனைந்து செரு செய்வோன் சென்னியோடு இருந்தால் - எதிர்த்துப் போர்செய்யும் பகைவன் தலைதுணிக்கப்படாமல் அதனோடு பிழைத்திருந்தால், மறு கணை தொடுப்பது - (அவன்மேல் அந்த அஸ்திரத்தை) இரண்டாம்முறை விடுப்பது, மன்னவர்க்கு - அரசர்களுக்கு, ஆண்மையோ - பராக்ரமமாகுமோ? வலியோ - வல்லமையோ? மானமோ - பெருமையோ? அறமோ - தருமமாகுமோ? [ஆகாதென்றபடி]; உறுகணை ஒன்றே பார்த்தன்மேல் தொடுப்பன்-(நான்) அடைந்துள்ள நாகாஸ்திரத்தை ஒருதரமே அருச்சுனன்மேற் பிரயோகிப்பேன்; ஒழிந்துளோர் உய்வர்-அவனொழிந்த பாண்டவர் நால்வரும் (என்னாற் கொல்லப்படாமற்) பிழைத்திடுவார்கள்,' என்று உரைத்தான்-என்று கூறினான்; (யாவனெனில்),—தறுகணர் அலர்க்கும்-கொடியவரல்லாத நல்லவர்க்கும், தறுகண் ஆனவர்க்கும் - கொடுமையையுடையோர்க்கும், (வேறுபாடின்றி), தண் அளி நிறைந்த - குளிர்ச்சியான கருணை நிரம்பின, செம் கண்ணன் - சிவந்த கண்களையுடைய கர்ணன்; (எ-று.) (319)

## 260.—இதுவும், மேற்கவியும் ஒருதொடர்: கர்ணன் குந்தியை நோக்கிக் கூறுவன.

பெருவரமிரண்டும்பெற்றபின் றன்னைப்பெற்றதாயினைக் கரங்குவித்துத், தருவரமெனக்குமிரண்டுளவுலகிற்சராசரங்களுக்கெலாந் தாயீர், வெருவருமமரிற்பார்த்தனாலடியேன் வீழ்ந்தபோதவனிபரறிய, மருவருமுலைப்பாலெனக்களித்துந்தமகனெனும் வாய்மையு முரைப்பீர்,

(இ - ள்.) பெரு வரம் இரண்டும் பெற்ற பின் - பெரிய வரங்களை இரண்டையும் (குந்தி தன்னிடம்) பெற்ற பின்பு, (கன்னன்), தன்னை பெற்ற தாயினை கரம் குவித்து - தன்னைப்பெற்ற தாயாகிய அவளைக் கைகூப்பி வணங்கி, 'உலகில் சர அசரங்களுக்கு எலாம் தாயீர் - உலகத்திலுள்ள சராசரப் பொருள்களெல்லாவற்றிற்குந் தாயாகவுள்ளவரே!—எனக்கும் தரு வரம் இரண்டு உள - எனக்கும் (நீர்) கொடுக்க வேண்டிய வரங்கள் இரண்டு உண்டு; (அவை யாவையெனில்),—வெருவரும் அமரில் - அஞ்சத்தக்க யுத்தகளத்திலே, பார்த்தனால் அடியேன் வீழ்ந்தபோது - அருச்சுனனால் நான் இறந்து விழும் பொழுது, அவனிபர் அறிய - அரசர்களெல்லாருமறியும்படி, மருவரு முலை பால் எனக்கு அளித்து - மனம் பொருந்திய (உமது) முலைப்பாலை எனக்குக் கொடுத்து, உம்தம் மகன் எனும் வாய்மையும் உரைப்பீர் - உம்முடைய புத்திரன் யானென்கிற உண்மையையும் வெளியிட்டுக்கூறுவீர்; (எ - று.)

'மன்னனுயிர்த்தே மலர்தலையுலகம்' என உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளுக்கும் உயிராகக் கூறப்படுகிற அரசனைப் பெற்ற தாயாதல் பற்றி, குந்தியை 'உலகிற் சராசரங்களுக்கெல்லாந் தாய்' என்றது; அன்றியும், தாயைத் தெய்வமாகப் பாவிக்கவேண்டுமென்பதுபற்றி, இங்ஙனம் கூறியதாகவுங் கொள்ளலாம். மருவு அரு - பெறுதற்கு அருமையான என்றுமாம். (320)

261. உய்வருந்திறல்வெம் போர்முடிப்பளவு முமக்குநான் மகனெனுந்தன்மை, யைவருமறியாவண்ண நீர்காப்பீ ரல்லதங்கவர்சிறிதறியின், மைவருங்கடற்பாரனைத்தையுமெனக்கே வழங்குவர் வழங்கினுல்யானென், கைவருந்துணைவன்றனக்கலால்வழங்கேன் கடைப்பிடி கருமமீதென்றான்.

(இ - ள்.) உய்வு அரு திறல் வெம் போர் முடிப்பு அளவும் - தப்புதலருமையான வலியகொடிய பாரதப்போர் முடிக்கிறவரையிலும், உமக்கு நான் மகன் எனும் தன்மை ஐவரும் அறியா வண்ணம் நீர் காப்பீர் - உமக்கு நான் புத்திரனென்கிற உண்மையைப் பாண்டவர் ஐந்துபேரும் அறியாதபடி நீர் மறைத்துவைக்கக்கடவீர்; அல்லது - அங்ஙனமன்றி, அங்கு அவர் சிறிது அறியின் - அப்படி அவர்கள் சிறிதாயினும் அறிந்தாரானால், மைவரும் கடல்பார் அனைத்தையும் எனக்கே வழங்குவர் - கருநிறம் பொருந்திய கடல் சூழ்ந்த பூமி முழுவதையும் எனக்கே கொடுத்திடுவார்கள்; வழங்கினல் - (அங்ஙனம்) கொடுத்தால், யான்—, என் கை வரும் துணைவன் தனக்கு அலால் வழங்கேன் - எனக்குப் (பலகாலமாகப்) பயின்றுவந்த சிநேகிதனை துரியோதனனுக்கே (அதனைக்கொடுப்பேனே) யல்லாமல் (பிறர்க்குக்) கொடுக்கமாட்டேன்; ஈது கடைப்பிடி கருமம் - இது உறுதியாகக்கொண்ட செயலாம், என்றான் - என்று (கர்ணன் குந்தியைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

இனி, ஈதுகருமம் கடைப்பிடி என மாற்றி, இக்காரியத்தை மறவாமல் உறுதியாகக்கொள்வாய் எனவுரைத்தல், கீழ்ப்பலவிடத்

தும் மரியாதை பற்றிய முன்னிலைப் பன்மையாகக் கூறியவற்றோடு மாறுகொள்ளுமென விடுக்க. கைவருந்துணைவன் - கையையொத்து உதவும் நண்ப னென்றுமாம். (321)

## 262.—குந்தி கண்ணனிடம் சேர்தல்.

என்றலுமதுகேட்டீன்றதாயொக்குமென்றுகொண் டிவ்வரநேர்ந்
து, வன்றுயர்மேன்மேல்வளரயான் றளராவகையுயிருனக்குமுற்பெயர்வ,
தென்றினியெனத்தன்கண்கணீர்சொரிய விணைந்து நைந்தழுதழு
திரங்கி, யென்றருண்மதலைதனைத்தழீஇநிறுத்தியாதவனிருந்துழிச்
சென்றாள்.

(இ - ள்.) என்றலும் - என்று (கன்னன்) சொன்னவளவிலே, அது கேட்டு—, ஈன்ற தாய் - (அவனைப்) பெற்ற தாயாகிய குந்தி, ஒக்கும் என்று கொண்டு - (இவை) தகுமென்று உடன்பட்டு, இ வரம் நேர்ந்து - இந்த இரண்டு வரங்களையுங் கொடுத்து, வல்துயர் மேன்மேல் வளர - கொடிய துன்பம் மேலே மேலே அதிகப்பட்டுவளர, 'யான் தளரா வகை - நான் தளர்ச்சியடையாதபடி, உனக்கு முன் உயிர் பெயர்வது - உனக்கு முன்னே (நான்) உயிர் நீங்குவது, இனி என்று - இனி எக்காலத்திலோ?' என - என்று சொல்லி, தன் கண்கள் நீர் சொரிய - தனது கண்கள் நீரைப் பெருக்க, இணைந்து - சோகித்து, நைந்து - வாடி, அழுது அழுது - மிகப்புலம்பி, இரங்கி - இரக்கமுற்று, என்று அருள் மதலை தனை தழீஇ - சூரியன் பெற்ற பிள்ளையான அக்கன்னனைத் தழுவி, நிறுத்தி - (அங்கே அவனை) நிறுத்திவிட்டு [விடைபெற்று], யாதவன் இருந்த உழி சென்றாள் - கண்ணன் இருந்த இடத்துக்குப் போனாள்; (எ - று.)

என்று - ஒளியையுடையதெனக் காரணப்பெயர்; எல் - ஒளி; பகுதி. (322)

## 263.—கண்ணன் மகிழ்ந்து மீண்டு பாண்டவரிடம் வருதல்.

கண்ணனுங்குந்திகன்னனோடுரைத்தகருத்தெலாந்திருத்தமாக்
கேட்டாங்,கெண்ணமுமுடிந்ததெனமகிழ்ந்தந்தவணங்கையுமில்லிடை
யிருத்தித், தண்ணளியுடன்றன்பின்வருநிருபர்தம்மையுமுறைமுறை
நிறுத்திப், பண்ணமைதடந்தேர்மீதுகொண்டன்றேபாண்டவருறை
நகரடைந்தான்.

(இ - ள்.) கண்ணனும்—, குந்தி கன்னனோடு உரைத்த கருத்து எலாம் - குந்தி கர்ணனுடன்சொன்ன எண்ணங்களையெல்லாம், திருத்தம் ஆ கேட்டு - செவ்வையாக்கேட்டு, ஆங்கு எண்ணமும் முடிந்தது என மகிழ்ந்து - அக் கன்னனிடத்திலுந் தான் எண்ணிய எண்ணம் நிறைவேறிற்றென்று சந்தோஷித்து, அந்த அணங்கையும் இல்லிடை இருத்தி - சிறந்தமகளாகிய அக்குந்தியை யும் வீட்டிலிருக்கச்செய்து, தண் அளியுடன் தன் பின் வரும் நிருபர் தம்மையும் முறை முறை நிறுத்தி - குளிர்ச்சியான அன்புடனே தன்

பின்னே தொடர்ந்துவருகிற அரசர்களையும் ஒருவரொருவராக நிற்கச் செய்து, பண் அமை தட தேர் மீது கொண்டு - அலங்காரம் அமைந்த பெரிய தனது தேரின்மேலேறிக்கொண்டு, அன்றே பாண்டவர் உறைநகர் அடைந்தான் - அப்பொழுதே புறப்பட்டுப் பாண்டவர்கள் வசிக்கிற (உபப்பிலாவிய) நகரத்தைச் சேர்ந்தான்; (எ-று.) (323)

## 264.—கண்ணன் நடந்தவற்றைப் பாண்டவர்க்கு உரைத்தல்.

தூதுபோயரவத்துவசனேடுறுதிசொன்னதுமறுத்தவன்சினந்து, மோதுபோர்புரியத்துணிந்ததும்விதுரன்மூரிவில்லிறுத்ததுங்கங்குற், போதுபோர்வஞ்சம் விளைத்ததுங்கன்னன் புரந்தரற்கீந்ததும் பயந்த, மாதுபோய்வரங்கள்பெற்றவையொழியமற்றெலாமைத்துனர்க் குரைத்தான்.

(இ - ள்.) தூது போய் - (தான்) தூதுசென்று, அரவம் துவசனேடு - துரியோதனனுடனே, உறுதி சொன்னதும் - நன்மைதருவதான சமாதான வார்த்தையைக் கூறியதையும், அவன் - அத்துரியோதனன், மறுத்து - (அதனை உடன்படாது) தடுத்து, சினந்து - கோபித்து, மோது போர் புரிய துணிந்ததும் - தாக்குகின்ற யுத்தத்தைச் செய்ய நிச்சயித்ததையும், விதுரன் —, மூரிவில் இறுத்ததும் - வலிமையையுடைய [அல்லது பழைய] தனது வில்லை யொடித்துப் போகட்டுவிட்டதையும், கங்குல் போது - இராக்காலத்தில், (ஆலோசித்துத் துரியோதனன்), வஞ்சம் போர் விளைத்ததும்-வஞ்சனையான யுத்தத்தை (நிலவறையில்) அமைத்துவைத்ததையும், கன்னன் —, புரந்தரற்கு ஈந்ததும்-இந்திரனுக்குக் (கவசகுண்டலங்களைக்) கொடுத்ததையும், பயந்த மாது போய் வரங்கள் பெற்றவை ஒழிய மற்று எலாம் - பெற்றதாயான குந்தி சென்று (கர்ணனிடத்து) வரங்கள் பெற்றவற்றைத் தவிர மற்றுமுள்ள எல்லாச் செய்திகளையும், மைத்துனர்க்கு உரைத்தான் - (ஸ்ரீகிருஷ்ணபகவான் தனது) மைத்துனர்களாகிய பாண்டவர்களுக்குக் கூறியருளினான்; (எ - று.)

பயந்த மாது போய் வரங்கள் பெற்றவற்றைக் கூறாததற்குக் காரணம் கீழே விளக்கப்பட்டது. அத்தைமகனை மைத்துனனென்பது-முற்காலத்து வழக்கம்போலும். மற்றெலாம் என்றதில், அசுவத்தாமனைப் பேதித்தது அடங்கும். (324)

கிருட்டிணன் தூதுசருக்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது

# படையெழுச்சிச் சருக்கம்.

பாண்டவர் துரியோதனுதியர் என்னும் இருவரது சேனைகள் போரின் பொருட்டுத் தனித்தனி திரண்டெழுந்துநின்ற செய்தியைக் கூறுகின்றதொரு நூற்கூறுபாடென்பது பொருள். படையெழுச்சி என்பது - படை எழுதல் என எழுவாய்த்தொடராகவாயினும், படையினது எழுதல் என ஆரும்வேற்றுமைத் தொகைநிலைத் தொடராகவாயினுங் கொள்ளத்தக்கது. எழுச்சிச் சருக்கம் - எழுச்சியைக் கூறுஞ்சருக்கமெனை இரண்டனுருபும்பயனும் உடன்தொக்க தொகை; இனி, எழுச்சியினது சம்பந்தமான சருக்கமென விரித்து, ஆறும் வேற்றுமைத்தொகை யென்றுங் கொள்ளலாம். படை-(பகைவரைப்) படுத்தற்குக்கருவியானது எனக் காரணப்பெயர்; படு-பகுதி: படுத்தல் - அழித்தல்: ஐ - கருவிப்பொருளீறு. எழுச்சி - தொழிற்பெயர். சி - விகுதி. இச்சருக்கத்தில் முதற்பதின்மூன்று பாடல்கள்-கண்ணன் தூதுசென்று வந்தவுடனே தருமபுத்திரன் பகைமுடித்தற்பொருட்டுச் சேனை திரட்டின செய்கையையும், பின் பதினொரு பாடல்கள் அங்ஙனமே துரியோதனன் சேனை திரட்டின வரலாற்றையுங் கூறுதல் காண்க.

## 1.—கடவுள் வணக்கம்.

படர்ந்தகானகந்திரிந்துமீண்டன்புடன்பணிந்தபஞ்சவர்க்காகக்
கடந்தஞானியர் கடவுளர் காண்கலாக் கழலிணைசிவப்பேறத்
தொடர்ந்தநான்மறைபின்செலப்பன்னகதுவசன் மாநகர்த்தூது
நடந்தநாயகன்கருமுகில்வண்ணமென்னயனம்விட்டகலாதே.

(இ - ள்.) படர்ந்த - பரவியுள்ள, கான் அகம் - காட்டினிடத்திலே, திரிந்து - (பலவருஷகாலம்) அலைந்து, மீண்டு - திரும்பிவந்து, அன்புடன் பணிந்த - அன்போடு (தன்னை) வணங்கின, பஞ்சவர்க்கு ஆக - பஞ்சபாண்டவர்கள் பொருட்டு,—கடந்த ஞானியர் - (இவ்வுலகப்பற்றுக்களை) வென்ற தத்துவஞானமுள்ள முனிவர்களும், கடவுளர் - தேவர்களும், காண்கலா - (உள்ளபடி) காணவொண்ணுத, கழல் இணை - (தனது) திருவடிகளிரண்டும், சிவப்பு ஏற - செந்நிறம்மிகப் பெறவும்,—தொடர்ந்த-(தன்னைத்) தேடுந்தன்மையுள்ள, நால் மறை-நான்கு வேதங்களும், பின் செல - (காணமாட்டாமல்) விடாது தன் பின்னேவரவும்,—பன்னக துவசன் மாநகர் - பாம்புக்கொடியையுடைய துரியோதனனது பெரிய அஸ்தினபுரியிலே, தூது நடந்த - தூதனாய் நடந்து சென்ற, நாயகன் - (எல்லாவுயிர்க்குந்) தலைவனுன கண்ணபிரானது, கருமுகில் வண்ணம் - கரிய மேகம்போன்ற திருமேனிநிறம், என் நயனம் விட்டு அகலாது - (எப்பொழுதும்) எனது கண்களைவிட்டு நீங்காது; (எ - று.)—ஏகாரம் - தேற்றம்; ஈற்றசையெனினும் அமையும்.

"பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்" எனப் பெரியார் திருவாய்மலர்ந்தருளியபடி எம்பெருமானுக்கு அடியார்களிடத்துள்ள சௌலப்பியத்தை 'அன்புடன் பணிந்த பஞ்சவர்க்காகக் கழலிணை சிவப்பேறப் பன்னகதுவசன்மாநகர்த்தூது நடந்த நாயகன்' என்றதனாலும், எம்பெருமானது எவரும் எளிதில் அறிதலரிய பரத்துவத்தை 'கடந்த ஞானியர் கடவுளர் காண்கலாக்கழல்', 'தொடர்ந்த நான்மறை பின்செலல்' என்றவற்றாலும் வெளியிட்டார். இங்ஙனம் யோகிகட்கும் பிரமனாதியோர்க்கும் வேதங்கட்கும் எட்டாத முழுமுதற்கடவுள் வரம்பு கடந்தெழுந்த பெருங்கருணையால் பாண்டவ தூதனாய்ச் சென்றான் என்று கீழ்க் கிருட்டிணன் தூதுசருக்கத்தில் வரலாறுகூறிவந்தபொழுது அப்பிரானிடத்து இவ்வாசிரியர்க்கு உண்டான ஈடுபாடு அச்சருக்க முடிந்தபின்பும் ஆராது தலையெடுத்து நின்றதனால், அவற்றையேகுறித்து அடுத்த இச்சருக்கத்துக்குக் கடவுள்வாழ்த்துக் கூறினார். "பஞ்சபாண்டவர்க்காகி வாயுரை தூது சென்றியங்கு, மென்துணை" என்றார், திருமங்கையாழ்வாரும்; "பஞ்சவர்க்குத்தூதாக நடந்தவடி", "நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப், படர்ந்தாரண முழங்கப் பஞ்சவர்க்குத் தூது, நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே" எனச் சிலப்பதிகாரத்துக் கூறியவாறுங் காண்க. "பெரியவனை மாயவனைப் பேருலகமெல்லாம் விரி கமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந், திருவடியுங் கையும் கனிவாயுஞ் செய்ய, கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே" "கேசவனைக்காண்க விழி" என்றபடி கண்படைத்த பயன் எம்பெருமானது திவ்யசொரூபத்தைக் காணுதலேயாதலால், இங்ஙனம் கூறினார். கொடியவர்களையழித்து அடியவர்களை யளித்தருளுகிற ஆதிதேவன் விஷயமான காப்புக் கூறியதனால், எடுத்த கருமம இடையூறின்றி இனிது முடியு மென்பது கருத்து. "சூடுகின்ற துழாய் முடியோன் சுரருடனே முனிவர்களுஞ் சுருதி நான்குந், தேடுகின்ற பதஞ்சிவப்பத் திருநாடு பெறத் தூதுசெல்ல" எனக் கீழ்க் கிருட்டிணன தூதுசருக்கத்தில்வந்த அடிகளோடு இப்பாட்டை ஒப்பிடுக. பின் செல்லல் - அனுசரித்தல்; "உரலும் வேதமுந் தொடர" என்பர், மேல் ஏழாம் போர்ச் சருக்கத்தும். வேதம் எப்போதும் பகவானைப் பின் தொடர்வது என்பதுபற்றியன்றே, இப்பொழுதும் திருக்கோயில்களில் வேதபாராயணஞ் செய்பவர் எம்பெருமானது பின்புறத்தே செல்வது.

பஞ்சவர்க்காக ஏறச்செலத் தூதுநடந்த நாயகனென்க. கான் - காட்டிலும், அகம்- விராடனது வீட்டிலும் திரிந்து என, 'கானகம்' என்றதில் அஜ்ஞாதவாசத்தையும் அடக்கலாம். கான - காமியம், துவைதம் முதலியன. 'அன்பென்பது - தான் கருதப்பட்ட பொருளின்கண் தோன்றும் வேட்கை' என்பர் நச்சிரர். 'அன்புடன்' என்றவிடத்து, 'உடன்' என்னும் மூன்றனுருபு அடைமொழிப் பொருளது: அன்புடையராய்ப் பணிந்த என்க. பஞ்சவர் - ஐவர்; இங்கே பாண்டவர்களைக் குறித்ததனால், தொகைக்குறிப்பு. ஞானமாவது - பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையால் அறியும் மெய்யுணர்வு. கடந்த என்பதை

ஞானியர்க்கு அடைமொழி யாக்காமல் ஞானத்துக்கு அடைமொழி யாக்கின், உலகத்தாரது அறிவினெல்லையின் மேம்பட்ட உண்மை யுணர்வென்க. கடவுளர் - (இவ்வுலக சம்பந்தத்தைக்) கடத்தலை யுடையவர். 'ஞானியர் கடவுளர்' என்ற தொடரில் உயர்வுசிறப் போடு எண்ணுப்பொருள் தரும் உம்மை தொக்குநின்றது. கழலிணை, நான்மறை, என்றவற்றின்பின், இணைத்தென்றறிபொருளில் வரும் முற்றும்மைகள் செய்யுள் விகாரத்தால் தொக்கன. செம்மை யெனனும் பண்பினடி விகாரப்பட்டுச் சிவப்பு எனத் தொழிற்பெய ராயிற்று. கழலிணை சிவப்பேற - இடத்து நிகழ்பொருளின்தொழில் இடத்தின் மேல் ஏற்றிக் கூறப்பட்டது, உபசாரவழக்கு. நான்மறை- இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் எனபன. பந்நகதவஜன் என்னும் வேற்றுமைத்தொகை, வடநூல் முடிபு. பந்நகமென்னும் வடசொல்லுக்கு - கால்களால் நடவாதது [மார்பினால் ஊர்ந்து செல்வது] என்ருவது, வக்கிரகதியாய் வளைந்து செல்வதுஎன்ருவது பொருள் கொள்க. 'பந்நகதுவசன்' என்றது, அவன்கொடியே அவனது கொடுந்தன்மையையும், நாவிரண்டுடைமையையும், நன்றி யறிவின்மையையும், எப்போதும் வக்கிரகதியிற செல்லுந் தன்மையை யும் விளக்கும் என்றற்குப் போலும். பன்னகம் - அதன வடிவுக்கு ஆகுபெயர்; அடுத்த கவியில் 'முரசு' என்பதும் அது.

பக்தி மிகுதியால் எம்பெருமானது உருவெளிப்பாட்டை எங்கும் என்றும் காண்பே னென்பார், 'என்னயனம்விட் டகலாதே' என்ருர். 'கமலக்கண்ண னென்கண்ணினுள்ளான காண்ப னவன் கண்க ளாலே, அமலங்களாகவிழிக்கு மைம்புலனு மவன்மூர்த்தி' என்ற ஆழ்வாரருளிச்செயலின் பொருளை இங்கே அறிக.

ஆசீர்வாதம், நமஸ்காரம், வஸ்துநிர்த்தேசம் என்ற மூன்று வகை மங்களங்களுள் இது ஈற்றதன்பாற்படு மென்க. படர்ந்த கான் - (தாம்) சென்ற காடு. தொடர்ந்த நான்மறை - (சொற்கள் ஒன்ருேடொன்று) தொடரப்பெற்ற வேதம் எனப் பொருள் கொள் வாரும் உளர்.

இதுமுதற் பதின்மூன்றுகவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச் சீரும், ஆருஞ்சீர் மாங்காய்ச்சீரும், மற்றைநான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள்.

## 2.—தருமபுத்திரன் தனது நண்பரான அரசர்க்குச் செய்தி தெரிவித்தல்.

முகுந்தன்வாசகங் கேட்பதன்முன்னமே முரசுயர்த்தவன்முன்னி
மிகுந்தகோபமோ டிக்கணமுடிப்பன்யான்வெம்பகையினி யென்னுத்
தகுந்தராதிபர் தன்னுடனியைந்தவர் தமக்குவெஞ்சமர் மூளப்
புகுந்தவாறெலாந் தூதரிற்போக்கினுனேலையின் புறத்தம்மா.

(இ - ள்.) முகுந்தன் - கண்ணனது, வாசகம் - வார்த்தையை, கேட்பதன் முன்னமே - கேட்பதற்கு முன்பே [கேட்டவுடனே விரை

வில் என்றபடி],—முரசு உயர்த்தவன் - முரசக்கொடியை உயர எடுத்துள்ள தருமபுத்திரன், முன்னி - ஆலோசித்து, மிகுந்த கோபமோடு - மிக்க கோபத்துடனே, 'யான் - நான், இனி - இனிமேல், வெம் பகை - கொடிய பகைவர்களான துரியோதனாதியரை, இக்கணம் - இந்த க்ஷணத்திலேயே [மிகவிரைவில் என்றபடி], முடிப்பன் - அழிப்பேன்', என்று - என்று கூறி,—வெம் சமர் மூள புகுந்த ஆறு எலாம் - கொடியபோர் உண்டாகும்படி நேர்ந்த விதங்களையெல்லாம், ஓலையின் புறத்து - ஓலையில், (எழுதி), (அத்திருமுகங்களை), தன்னுடன் இயைந்தவர் தகும் தராதிபர் தமக்கு - தன்னுடன் மனமிணங்கினவரான தக்க அரசர்களுக்கு, தூதரின் போக்கினான் - தூதர்கள் மூலமாக அனுப்பினான்; (எ - று.)

இங்கே 'முகுந்தன் வாசகம்' என்ற விவரத்தைக் கீழ்ச் சருக்கத்தினிறுதியில் 264-ஆம் செய்யுளில் விளங்கக் காண்க.

கேட்பதன் முன்னமே தூதரிற்போக்கினான் எனக் காரியத்தை முன்னும் காரணத்தைப் பின்னும் நிகழ்ந்தனவாகச் சொல்லுதல் மிகையுயர்வுநவிற்சியணி: கேட்டவுடனே சிறிதுங் காலதாமதஞ் செய்யாமல் அரசர்க்குத் தூதனுப்பினானென்க.

அம்மா - ஈற்றசை; அம்ம என்னும் அசைச்சொல் நீண்டதென்பது, தொல்காப்பியனார் கொள்கை. இனி, துரியோதனனது அக்கிரமங்களைக் கேள்விப்பட்ட மாத்திரத்திலே மிக்க பொறுமைசாலியான தருமபுத்திரனுக்கும் பெருங்கோப முண்டாய்விட்டதென்ற அதிசயம் பற்றிக் கவி கூறின வியப்பிடைச்சொல்லெனினும் அமையும். உத்தியோக பருவத்தின் முதலில் இவ்வரசர்கள் "இந்தவந்தணனீயிசைத்தனவெலா மியல்புடனினிதாக, அந்த வந்தனேடுரைத்த பின்னவனினதவனி தந்திலனாகில், முந்தவந்தண் மாமுரசகேதன திருமுகம் வரவிடுகென்று, வந்தவந்த மன்னவர்களுந் தத்தமாநகரடைந்தனர்" ஆதலால், இவர்களுக்குக் கண்ணன் தூதுபோய் வந்தவுடன் போர் செய்ய முடிந்ததைத் தருமன் தெரிவித்தான்.

முகுந்தன் என்பதற்கு - முத்தியுலகவின்பத்தையும் இவ்வுலகவின்பத்தையும் (தன் அடியார்க்குத்) தருபவனென்று பொருள்; மு-முக்தி. கு - பூமி, த - கொடுப்பவன். துஷ்ட அசுரர்கள் பலரும் கெட்ட அரசர்கள் பலரும் ஒருங்கே கூடி வசிப்பதாலுண்டான பூமிபாரத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு அப்பூமிதேவியின் பிரார்த்தனையின்படி தேவர்கள் வேண்டுகோளால் திருமால் வசுதேவ குமாரனாய்க் கண்ணனாகத் திருவவதரித்தருளினான்; இது - திருமாலின் ஒன்பதாம் அவதாரம்.

முரசு - அதன் வடிவையெழுதிய கொடிக்கு இருமடியாகுபெயர். தனது வெற்றிக்கு அடையாளமாகவும் மங்களகரமாகவும் முரசத்தின் வடிவைத் தருமன் கொடியிற் கொண்டனன் போலும். (326)

### 3.—ஐந்துகவிகள் – பலதேசத்தரசர்கள் வந்து திரளுதலைக் கூறும்.

எட்டுத்திக்கினுமுள்ள மன்னவருடன் யாகசேனனும் வந்
தான், திட்டத்துய்மனுந்திட்டகேதுவும் விறற்சிகண்டியுமுறைவந்தார்,
ஒட்டிப்போர்பொருமுத்தமோசாவும் வேலுதாமனுமுடன்வந்தார்,
பட்டப்போதகந் தேர்பரியாளெனும் படையுடைப்பாஞ்சாலர்.

(இ - ள்.) (அதனைச் செய்தியறிந்தவுடனே),—பட்டம்-நெற்றிப் பட்டத்தைத்தரித்த, போதகம் - யானையும், தேர் - இரதமும், பரி - குதிரையும், ஆள் - காலாளும், எனும் - என்கிற, படை - (நால் வகைச்) சேனையையும், உடை - உடைய, பாஞ்சாலர் - பாஞ்சால தேசத் தரசர்களுள், யாகசேனனும் - துருபதராசனும், எட்டு திக்கினும் உள்ள மன்னவருடன் - எல்லாத் திக்குக்களிலுமுள்ள அரசர்களுடனே, வந்தான் - (உபப்பிலாவியத்துப் பாண்டவரிடம்) வந்தான்; திட்டத்துய்மனும் - திருஷ்டத்யும்நனும், திட்டகேதுவும்- திருஷ்டகேதுவும், விறல் சிகண்டியும் - வலிமையையுடைய சிகண் டியும், முறை வந்தார் - முறையே வந்தார்கள்; ஒட்டி - (முன்னமே) சபதஞ்செய்து, போர் பொரும் - (அங்ஙனமே) போர்செய்து முடிக்க வல்ல, உத்தமோசாவும் - உத்தமோஜஸ் என்பவனும், வேல் உதா மனும்-வேலையேந்திய யுதாமந்யுஎன்பவனும், உடன்வந்தார்-உடனே வந்தார்கள்; (எ - று.)

யாகசேனன் - திரௌபதியின் தந்தை. திருஷ்டத்யும்நன், சிகண்டி - யாகசேனனது புதல்வர். திருஷ்டத்யும்நனது மகன் திருஷ்டகேது வென ஸ்ரீ விஷ்ணுபுராணத்தால் விளங்கும். அங்கி வேச முனிவனிடத்தில் துரோணாசாரியருடன் வில்வித்தையைக் கற்றுவந்தபொழுது 'எனக்கு இராச்சியங் கிடைத்தபின்னர்ப் பாதி உனக்குப் பங்கிட்டுக் கொடுப்பேன்' என்று வாக்குத்தத்தஞ்செய் திருந்த பாஞ்சாலராசனாகிய துருபதன், பின்பு ஒருகாலத்தில் அத் துரோணன் தன்குழந்தைக்குப் பாலுக்காகப் பசுவேண்டுமென்று சென்றுகேட்டபொழுது, முகமறியாதவன்போல 'நீயார்?' என்று வினவிச் சில பரிகாச வார்த்தைகளைச் சொல்லிச் சபையிற் பங்கப் படுத்த, அப்பொழுது அவன் 'என்மாணாக்கனைக்கொண்டு உன்னை வென்று கட்டிக் கொணரச்செய்து உன் அரசையுங் கைக்கொள் வேன்' என்று சபதஞ்செய்துவந்து, பின் அங்ஙனமே அருச்சுன னைக்கொண்டு பங்கப்படுத்தி அந்தப்பிரதிஜ்ஞையைநிறைவேற்றி விட, அவ்யாகசேனன் துரோணன்மீது மிகக்கறுக்கொண்டு அவனைக் கொல்லும்பொருட்டு ஒரு புத்திரனும், அருச்சுனனது பலபராக்கி ரமங்களைக் கண்டு மகிழ்ந்து அவனுக்கு மணஞ் செய்து கொடுக்கும் பொருட்டு ஒரு புத்திரியும் உதித்தல் வேண்டுமென்று புத்திரகாம யாகஞ் செய்விக்க, அவ்வோமத்தீயினின்றும் திரௌபதியுடன் தோன்றின புத்திரனே திட்டத்துய்மனென அறிக. இவன் கௌரவ பாண்டவர்க்கு வில்லாசிரியனும் மிக்க ஆற்றலுடையவனுமான துரோணனைக் கொல்லும் வல்லமையுடையானாதலால், இவன் பெயரைமுதலில் எடுத்துக் கூறினர், 'விறற்சிகண்டி' எனச் சிகண்

டியை விசேஷித்துக் கூறினது, அவன் மகாபலபராக்கிரமசாலியான வீடுமனை விண்ணுலகேற்றும் ஆற்றலுடையவனாதலின்;காசிராசனது பெண்கள் மூவரைத் தன் தம்பியான விசித்திரவீரியனுக்கு மணம் புரிவிக்கும் பொருட்டுச் சுயம்வரத்தில் வீடுமன் வலியத் தேரேற்றிக் கொண்டுசெல்லுகையில், அரசர்கள் பலர்வந்து பொருதுதோல்வி யடைய, அவர்களுள் சிறிது போரில் முன்னிட்ட சாலுவனிடத்து அம்பை யென்பவள் மனத்தைச் செலுத்தி வீடுமனிடத்தினின்று நீங்கிச் சென்று சேர, அவன் 'பகைவன்கவர்ந்துபோன உன்னையான தொடேன்' என்று மணம் மறுத்துவிட்டதனால், அவள் பின்பு வீடுமனை மணஞ்செய்யும் பொருட்டுப் பலவாறுமுயன்றும் பயன் படாமையால்,வனஞ்சென்று தவஞ்செய்து அவ்வீடுமனைக் கொல்லும் பொருட்டுச் சிகண்டி யென்னும் அலிவடிவாகத் துருபதனிடத்துப் பிறந்தனள் என்பது வரலாறு.

மூன்றுமடியிற் குறித்தவர் இருவரும் - துருபதனுக்கு உறவின ரான பாஞ்சாலராசர். ஸம்சப்தகர்போலப் போர் தொடங்கு முன்னமே பலவகைச் சபதஞ்செய்து பின் அவ்வாறே நடத்திக் காட்டும் வீரனிவ னென்பார், 'ஒட்டிப்போர்பொரு முத்தமோசா' என்றார். வேல் - மற்றை ஆயுதங்களுக்கும் உபலக்ஷணம; காத்தற் றொழிலன்றி அழித்தற்றொழில் பூண்ட முக்கட்கடவுட்குச் சூலவேல் படையாதலாலும், அமரரை யோம்ப அசுரரை யழிக்கும் முருக மூர்த்திக்கு வேல் படையாதலாலும், சான்றோர் வேற்படையையே சிறப்பப் பெரும்பான்மை கூறுதல்பற்றி, இங்கே வேலைக்கூறி, மற்றைய படைகளை யெல்லாம் 'மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனையும் முட்டின்று முடித்தல்' என்னும் உத்தியாற் பெறவைத்தார். யுதாமந்யு - போரிற் கோபமுடையா னென்று பொருள். போதகம் - பத்து வருஷத்து யானைக்கன்று; "படைதனக்கி யானைவனப்பாகும்," "யானையுடைய படை காண்டல் முன்னினிதே" என நால்வகைச் சேனையுள்ளும் யானை சிறப்பித்துக் கூறப்படுதலால், மதத்தாற்கதஞ் சிறந்து தானும் போர்செய்யும் யானையை முதலில் வைத்துக் கூறினார். இது - தமிழர் வழக்கு: வடநூலார் 'ரதகஜதுரகபதாதி' என முறைப்படுத்திக் கூறுவர். பரி - (பாரங்களைப்) பரிப்பது [சுமப்பது] எனக் காரணப்பெயர். பாண்டவர்க்குப் பெண்கொடுத்த நெருங்கிய உறவு முறையாராத லால், பாஞ்சாலர் வருகையை முதலிற் கூறினார். (327)

4. விராடபூபனுஞ்சதானிகநிருபனும்விறற்சிவேதனுமாதி
வராககேதுவுமுத்தரகுமரனுமச்சநாட்டவர்வந்தார்
பராவுபேருடைச்சேரசெம்பியருடன்பாண்டியன்முதலோருங்
குராநறும்பொழிற்கேகயத்தலைவருங்குந்திபோசரும்வந்தார்.

(இ - ள்.) மச்சநாட்டவர் - மத்ஸ்யதேசத்தவராகிய, விராடபூப னும் - விராடமகாராசனும், சதானிகநிருபனும் - சதாநீக னென்னும் அரசனும், விறல் சிவேதனும் - வெற்றியையுடைய சுவேதனென்பவ னும், ஆதி வராக கேதுவும் - தலைமைபெற்ற வராககேது வென்பவனும், உத்தரகுமரனும்-உத்தரகுமாரனும், வந்தார்—; பராவு பேர்

உடை - (யாவராலும்) புகழப்படும் பெயரையுடைய, சேர செம்பியருடன்-சேரசோழ மன்னவருடனே, பாண்டியன் முதலோரும்-பாண்டியராசன் முதலானவர்களும், குரா நறுபொழில் - குரவ மலர்களின் பரிமளத்தையுடைய சோலைகளையுடைய, கேகயம் - கேகய நாட்டின், தலைவரும் - அரசர்களும், குந்திபோசரும் - குந்திபோச தேசத்து அரசர்களும், வந்தார்—; (எ - று.)

விராடபூபன், சதாநீகந்ருபன், ஆதிவராககேது, உத்தர குமாரன் - இருபெயரொட்டுப் பண்புத் தொகைகள். பூபன்-பூமியைக் காப்பவன். சதாநீகன் - நூறு [மிகப்பல] பெருஞ்சேனையை யுடையான்; சத அநீகம் அன் எனப் பிரியும். ந்ருபன் - மனிதர்களைக் காப்பவன். சதாநீகனும், வராககேதுவும் - விராடனுடைய உறவினர். சுவேதன் - விராடனது மூத்த குமாரன்: இளையவன் - உத்தரன். மேல் பாண்டவர்க்கு முதற்சேனாதிபதியாதற் கேற்ற சிறப்புத்தோன்ற, 'விறற்சிவேதன்' என விசேடித்தது. வராக கேது - பன்றியின்வடிவ மெழுதப்பெற்ற கொடியையுடையவன். அநீகம், குமாரன் என்பன - இங்குக் குறுகின. குமாரன் என்பதற்கு மன்மதனையும் குற்சித ரூபமுடையவனாக்கவல்ல கட்டழகுடையானென்று பொருள்; கு - குத்ஸிதம், மாரன் - மன்மதன். நீர்வள மிகுதியால் எங்கும் மீன்கள் மலிந்திருத்தல்பற்றி, மத்ஸ்யதேச மெனப் பெயர்போலும். தமிழ்நாட்டு மூவேந்த ராதலின், சேர சோழ பாண்டியரை 'பராவுபேருடை' எனச் சிறப்பித்துக் கூறினர். செம்பியன் சைப்யனென்னும் வடசொல்லின் சிதைவுபோலும்; சிபி சக்கரவர்த்தியின் மரபிற் பிறந்தவனென்று பொருள். ஒரு [சூரிய] குலத்தவராதலின், சோழனைச் செம்பியனென்பது, மேற பதினேழாம் போர்ச்சருக்கத்தில் "விறலுடைப்புலிக்கொடிவீரன் மெய்யெலாம், புறவினுக் கரிந்தநாட்போல மேல்விடுந், திறலுடை வாளியாற் சிவப்பித்தானரோ" எனச் சோழனிடத்துச் சிபியின் தன்மையை ஏற்றிக் கூறியவாறுங் காண்க. குரா - ஓர்மரம். குந்திபோசர் - பாண்டவர் தாயாகிய குந்தியின் சுவீகாரத் தந்தை மரபினர். (328)

5. அரக்கிதந்தருள் கடோற்கசக்காளையு மபிமனோடிராவானும், விரிக்கும் வெண்குடை விந்தனுஞ் சோமனும்வீரகீர்த்தியும் போரிற், செருக்குநெஞ்சுடைப் புண்டலன்செயசெனன் செருவிடைத்தெவ் வோடத், துரக்கும்வெம்பரித் துரௌபதரைவருஞ் சூழ்படையுடன் வந்தார்,

(இ - ள்.) அரக்கி - (இடிம்பியென்னும்) இராக்கதப்பெண், தந்து அருள் - பெற்றுவளர்த்த, கடோற்கசன் காளையும் - கடோத்கசனென்னும் வீரனும், அபிமனோடு - அபிமந்யுவும், இராவானும் - இராவானென்பவனும், விரிக்கும் வெள் குடை - விரித்துப்பிடிக்கும் வெண் கொற்றக்குடையையுடைய, விந்தனும்—, சோமனும்—, வீரகீர்த்தியும்—, போரில் - யுத்தத்தில், செருக்கு - மிகக்களிப்புக் கொள்ளும், நெஞ்சு உடை - மனத்தையுடைய, புண்டலன் - புண்டலனும், செயசெனன் - ஜெயசேனனும், (ஆகிய), செரு இடை தெவ் ஓட துரக்கும் வெம்பரி துரௌபதர் ஐவரும் - போரிலே பகைவர்கள் (முன் நிற்கமாட்டாமல்) தோற்றோடும்படி துரத்தும் உக்கிர வேக

முள்ள குதிரைகளையுடைய திரௌபதியின் மக்கள் ஐந்து பேரும், சூழ்படையுடன் வந்தார் - (தந்தம்மைச்) சூழ்ந்துள்ள சேனைகளுடனே வந்தார்கள்; (எ - று.)

கடோத்கச னென்னுங் குமாரன் தனது தாதையான வீமனையும் மற்றை அவனுடன்பிறந்தவரையும் விட்டுப் பிரிந்து செல்லுகையில் அன்போடு வணங்கி அவர்கள் தன்னை வேண்டியகாலத்து நினைக்கும் படியாகவும், அங்ஙனம் நினைத்த மாத்திரத்தில் தான் வந்து உதவுவதாகவும் வாக்குத்தத்தஞ்செய்து போய் அங்ஙனமே செய்து வந்தனன் என்பது - கீழ்ப்பருவங்களின் வரலாறு. அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை சென்றபொழுது, அவனுக்கு உலூபியென்னும் நாக கன்னிகையினிடம் பிறந்தவன் இராவானும், கண்ணனது தங்கையான சுபத்திரையினிடம் அர்ச்சுனனுக்குப் பிறந்தவன் அபிமந்யுவும் என அறிக. விந்தன் முதலிய ஐவரும் - பஞ்சபாண்டவர்க்கு முறையே திரௌபதியினிடம் பிறந்தவர்; உபபாண்டவரெனப்படுவர். விந்தனென்பது - பிரதிவிந்த்யனென்றும், சோமனென்பது - ஸுத சோமனென்றும் வடமொழியில் வழங்கும். அருச்சுனன் மகனுக்குச் சுருதகருமாவென்றும், நகுலன் மகனுக்குச் சதானீகனென்றும், சகதேவன் மகனுக்குச் சுருதசேனனென்றும் பெயர் வியாசபாரதத்திற் காண்கிறது; அருச்சுனன் மகனுக்குச் சுருதகீர்த்தி யென்ற பெயரும் உண்டு. பாண்டவர்களுள் மூத்தவனாய் அரசுக்கு உரிய தருமபுத்திரனது மகனாதலின் விந்தனை 'விரிக்கும் வெண்குடை' என விசேடித்தும், குந்தி பௌத்திரர் போலவே மாத்திரி பௌத்திரரும் பலபராக்கிரமங்களிற் சிறந்தவரென்பார் 'போரிற் செருக்கு நெஞ்சுடைப் புண்டலன் செயசெனன்' என்றுங் கூறினர். துரௌபதர் - த்ரௌபதேயர். 'செயவிறற் சேனனும் தெவ்வோட, என்றும் பாடம். (329)

6. சீனர்சாவகர்மத்திரர்மாளவர்தெலுங்கர்வெங்கலிங்கேசர்
சோனகாதிபர்கன்னடர்மாகதர்துலுக்கர்குச்சரரொட்டர்
ஆனவெம்படையாதியாய்நடப்பனவையிரண்டெண்பூமித்
தானைமன்னரும்வந்தனரிந்தமண்டலத்திலார்வாராதார்.

(இ - ள்.) சீனர் - சீனதேசத்தரசரும், சாவகர்—, மத்திரர்—, மாளவர்—, தெலுங்கர்—, (என்னும் இவ்வரசர்களும்), வெம் கலிங்க ஈசர் - (போரிற்) கொடிய கலிங்கதேசத்தரசரும், சோனக அதிபர் - சோனக தேசத்தரசரும், கன்னடர்-கர்ணடகதேசத்தரசரும், மாகதர் - மகததேசத் தரசரும், துலுக்கர்-துருஷ்க தேசத்தரசரும், குச்சரர்-கூர்ச்சரதேசத்தரசரும், ஒட்டர் - ஒட்ரதேசத்தரசரும், ஆதி ஆய் ஆன - முதலாக உள்ள, வெம் படை நடப்பன தானை - கொடிய ஆயுதங்களோடு செல்வனவான சேனைகளையுடைய, ஐயிரண்டு எண் பூமி மன்னர்உம் - ஐம்பத்தாறுதேசத்து அரசர்களும், வந்தனர்—; இந்த மண்டலத்தில ஆர் வாராதார்-இந்தப் பூமண்டலத்தில் வாராதவர் யாவர்? [எவருமில்லை, எல்லோரும் வந்தனர்]; (எ - று.)

தெலுங்கம் - த்ரிலிங்கதேசமெனப்படும். ஐயிரண்டு - ஐந்தும் இரண்டும்; ஏழு; ஐயிரண்டு எட்டு - ஏழாகிய எட்டு; ஐம்பத்தாறும்.

இனி ஐயிரண்டெண் என்ற தொடரில், முன்னது பண்புத்தொகையும் பின்னது உம்மைத்தொகையுமெனக் கொண்டு பதினெட்டுத் தேசமென்றும் பொருள் உரைக்கலாம். மண்டலமென்பதை - மண்தல மெனத் தென்மொழித் தொடர்மொழி யென்று கொள்க. (330)

7. பாங்கினல்வருமகுடவர்த்தனருடன் பட்டவர்த்தனருள்ளார், வாங்கும்வெஞ்சிலைமன்னவகுமரரின்மண்டலீகரினுள்ளார், தாங்குமாமொழிமந்திரிகளினிகற்றந்திரிகளினுள்ளார், ஓங்குநீள்கொடிப் பதாகினிதிரண்டவாறுன்னியாருரைக்கிற்பார்.

(இ - ள்.) பாங்கினல் வரு - (பாண்டவர்பக்கல்) உரிமையால் வந்த, மகுடவர்த்தனருடன்-கிரீடந்தரித்த அரசர்களோடு, பட்டவர்த்தனர் உள்ளார் - (கிரீடமில்லாமல்) பட்டம் மாத்திரம் அணியும் அரசர்களாக உள்ளவர்களும், வாங்கும் வெம் சிலை-வளைந்த கொடிய வில்லையுடைய, மன்னவர் குமரரின் - இராசகுமாரர்களுள்ளும், மண்டலீகரின் - சிற்றரசர்களுள்ளும், உள்ளார் - உள்ளவர்களும், தாங்கும் - (அரசர்களால்) ஏற்றுக்கொள்ளத்தக்க, மா மொழி - சிறப்பான சொற்களையுடைய, மந்திரிகளின்-மந்திரிகளுள்ளும், இகல் தந்திரிகளின் - பராக்கிரமமுள்ள சேனைத்தலைவருள்ளும், உள்ளார்- உள்ளவர்களும், (ஆகிய இவர்களுடைய), ஓங்கும் நீள் கொடி பதாகினி - உயரவெடுத்த நீண்ட துவசங்களையுடைய சேனைகள், திரண்ட ஆறு - (தம்மில்) ஒருங்குகூடிய விதத்தை, உன்னி-(இத்தன்மையதென்று) எண்ணி, உரைக்கிற்பார்-சொல்லவல்லவர், யார்- (இவ்வுலகத்தில்) யாவருளர்? [எவருமிலர் என்றபடி]; (எ - று.)

மனத்தால் எண்ணுதற்கும் வாயாற் சொல்லுதற்கும்கூடாதபடி அளவிறந்த சேனைகள் ஒருங்கே குவிந்தன வென்க. பாங்கினல் - அன்பினல் என்றபடி. மண்டலீகர் - நாற்பதுகிராமம் ஆள்பவர். ஒரு கோடி கிராமம் ஆள்பவன் மகுடவர்த்தன னென்றும், மகுடவர்த்தனர் நாலாயிரவரை வணக்கியாள்பவன் மண்டலீக னென்றும் கூறுவர் ஒருசாரார். "ஒருதலையாச், சொல்லலும் வல்ல தமைச்சு", "அறனறிந்தான்றமைந்த சொல்லான்", "தலைமகன் வெகுண்டபோதும், வெம்மையைத் தாங்கி நீதிவிடாது நின்றுரைக்கும் வீரர்" என்ற அமைச்சிலக்கணத்தின்படி அரசன் அங்கீகரிக்குமாறு சமயத்துக்கு ஏற்ற ஆலோசனைகளை உறுத்திக்கூற வல்லவ ரென்பார் "தாங்குமா மொழி மந்திரிகள்' என்றார், மந்திரம் - ஆலோசனை, அதனையுடையவன், மந்திரி. தந்திரி - சேனையையுடையான்; தந்திரம் - சேனை. 'இயல் தந்திரி' என்றும் பாடம். பதாகினி யென்னும் வடசொல்லுக்கு - கொடிகளையுடையதென்று பொருள். [பதாகா - கொடி]; இது காரணங்கருதாது பெயர் மாத்திரமாய் நிற்றலால், 'ஓங்குநீள்கொடி' என விசேடிக்கப்பட்டது. (331)

8.—தருமபுத்திரன் வந்த அரசரை எதிர்கொள்ளுதல்.

யானை தேர் பரி யாளெனுந் திறத்தினிலக்கணத் தெண்பட்ட, சேனையேழுமக்குரோணிக டிரண்டன திரைக்கடலேழென்னச்,

சோனைமாமுகிலேழுமொத்ததிர்ந்தன துந்துபிக்குலம்வந்த, தானை
மன்னரைத்தனித்தனிமுறைமையாற்றருமனுமெதிர்கொண்டான்.

(இ - ள்.) யானை தேர் பரி ஆள் எனும் திறத்தினால் - கஜ ரத துரக பதாதியென்னும் வகையினால், இலக்கணத்து எண்பட்ட - (அக்ஷௌஹிணி) இலக்கணத்தில் வைத்துக் கணக்கிடப்பட்ட, சேனை ஏழும் அக்குரோணிகள் - ஏழு அக்ஷௌஹிணி சேனைகளும், திரை கடல் ஏழு என்ன - அலைகளையுடைய ஏழுகடல்கள்போல, திரண்டன - ஒருங்குகூடின; துந்துபி குலம் - (அவற்றிலே அடிக்கப்படுகிற) ரணபேரிகையின் கூட்டங்கள், சோனை மா முகில் ஏழும் ஒத்து - இடைவிடாப்பெருமழைபொழியும் பெரியமேகங்கள் ஏழையும் போன்று, அதிர்ந்தன - ஒலித்தன; வந்த-(இவ்வாறு தனக்குப் படைத்துணையாக) வந்த, தானை மன்னரை - சேனைகளையுடைய அரசர்களை, தருமனும் - தருமபுத்திரனும், முறைமையால் - (அவரவர்க்குரிய) முறைப்படி, தனி தனி—, எதிர்கொண்டான் - எதிர்சென்று அழைத்துவந்து உபசரித்தான்; (எ - று.)

தருமத்தினின்றுந் தவறினவர்களுக்குத் தகுந்த தண்டனை செய்து தருமத்தைக்காத்தலால், எமனுக்குத் தருமனென்று பெயர்; 'தந்தையே மைந்தனாகப் பிறக்கிறான்' என்னும் நூல்வழக்குப்பற்றி, தருமபுத்திரனை 'தருமன்' என்றது. இலக்கணம் - லக்ஷணம். அக்குரோணி - அக்ஷௌஹிணீ. அக்குரோணி - யானை இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபது, தேர் இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபது, குதிரை அறுபத்தையாயிரத்து அறுநூற்றுப்பத்து, காலாள் - லட்சத்தொன்பதினாயிரத்து முந்நூற்றைம்பது; ஆக இரண்டு லட்சத்துப் பதினெண்ணாயிரத்து எழுநூறு கொண்டது. (இத்தொகை, வியாசபாரதத்தல் இரண்டாம் அத்தியாயத்திற் கண்டது.) கடலேழ் - உவர்நீர், கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர் என இவற்றின் மயமானவை. ஏழ் என மகரமெய்யீற்றுப்பெயரென்பது, ஆசிரியர் தொல்காப்பியனார் மதம்; ஏழு என முற்றியலுகர வீற்றுப்பெயரென்பர், நன்னூலார். முகிலேழ்-சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரிதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன. 'துந்துபிக் குல மார்ப்ப' என்றும் பாடம்.

## 9.— தருமன் தனக்கு அரசுரிமைகொடாமல் துரியோதனன் மறுத்ததை அரசர்கட்குக் கூறுதல்.

தான்வணங்குநர் தன்கழல்வணங்குநர் தங்களைத்தழீஇக்கொண்டு
தேன்வணங்குதார் மன்னவரிருந்தபின்சென்றவர்முகநோக்கி
யான்வணங்கி மாமாயனைத் தூதுவிட்டெனதுபாரெனக்கென்ன
வான்வணங்கினும் வணங்கலாமுடியினான் மறுத்தமர்புரிகென்றான்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (தருமபுத்திரன்), தான் வணங்குநர் தன் கழல் வணங்குநர் தங்களை - தனனால் வணங்கத்தக்கவரும் தனது பாதங்களை வணங்குபவரும் ஆகிய அவ்வவ்வரசர்களை, தழீஇக்கொண்டு - (அவரவர் தகுதிக்கு ஏற்ப) ஆதரித்து உபசரித்து, - தேன் வணங்கு

தார் மன்னவர் இருந்தபின் - வண்டுகள்மொய்க்கும் பூமாலையை யணிந்த அவ்வரசர்கள் (தக்க ஆசனங்களில்) வீற்றிருந்தபின்பு, சென்று - (அவரருகிற்) சென்று, அவர் முகம் நோக்கி - அவர்களது முகத்தைப் பார்த்து,—'யான்—, வணங்கி - பணிந்து, மா மாயனை தூது விட்டு - மிக்கமாயையுடைய கண்ணபிரானைத் தூதனுப்பி, எனது பார் எனக்கு என்ன - யான் முன் ஆண்டுவந்த இராச்சியம் (இப்பொழுது) எனக்கு(த் தரத்தக்கது) என்று கேட்க,—வான் வணங்கினும் வணங்கலா முடியினன் - தேவர்கள் (வந்து தன்னைப்) பணிந்தாலும் எதிர்பணியாத சிரத்தையுடைய துரியோதனன், மறுத்து - (சிறிதுங்கொடேனென்று என்வேண்டுகோளை) உபேட்சித்து, அமர் புரிக என்றான் - (வல்லவராயின்) போர்புரிவாராக என்று கூறிவிட்டான்; (எ - று.)

இப்பாட்டில் இரண்டாமடியில் 'நோக்கி' என்ற வினையெச்சம், அடுத்த கவியிறுதியில் 'என்றான்' என்ற முற்றொடுமுடியும். தேன் - வண்டின் ஓர் சாதி; அது - நல்லமணத்தே செல்வது. இனி, தேன் வணங்கு தார் - தேனொழுகும் மாலை யென்றுமாம். 'வணங்கு', என்பதற்குச் சந்தர்ப்பத்திற்கு ஏற்பப் பொருள்கொள்ளப்பட்டது. 'தார்' என்றதில், போர்வெற்றிக்குரிய பூமாலையும் அவரவர்க்குரிய அடையாளப்பூமாலையும் ஆக இரண்டும்அடங்கும். சென்றவர் என ஒரு சொல்லாக எடுத்து, வந்தவரெனக்கொள்ளலுமாம். வணங்கி என்றதற்கு - கண்ணனை நமஸ்கரித்து என்றாவது, கீழ்ப்படிந்து துரியோதனனோடு சாமவுபாயத்திற்பொருந்தி யென்றாவது கருத்துக்கொள்க. மாயையாவது - கூடாததையும் கூட்டுவிக்குந் திறம். அகடிதகடநா சாமர்த்தியம்: பிரபஞ்சகாரணமான பிரகிருதியுமாம்; ஆச்சரியகரமான குணங்களுஞ் செயலுமாகலாம். மாயவன் - மாயைபோற் கருநிறமுடையானெனினுமாம். வான் - அதிற்சஞ்சரிக்குந் தேவர்க்கு இடவாகுபெயர். துரியோதனனுக்கு 'வணங்கா முடிமன்னன்' என்று ஒரு பெயர். 'மன்னவன்' என்றும் பாடம். (333)

## 10.—இதுவும் அது.

**கேண்மையாலெனதரசுநீதருகெனக்கேட்கவுமதியாமல், ஆண்மையாலவன்மறுத்தமையெனக்குயிரனையநீரறிமின்கள், வாண்மையால்வரிவின்மையான்மேன்மையால்வலியுடைக்கலனுங்கள், தோண்மையாலமர்தொலைத்தடல்வாகையுஞ்சூடுவனினியென்றான்.**

(இ - ள்.) கேண்மையால் - சினேகதருமத்தால் [சமாதானவழியால் என்றபடி], எனது அரசு நீ தருக என - எனக்கு உரிய இராச்சியத்தை நீ கொடுப்பாயாக வென்று, கேட்கவும் - (யான் கண்ணனைக் கொண்டு வேண்டிக்) கேட்டிடவும், அவன் - அத்துரியோதனன், மதியாமல் - இலட்சியஞ் செய்யாமல், ஆண்மையால் - (தனது) பராக்கிரமத்தால், மறுத்தமை - (இராச்சியங் கொடுக்கமாட்டேனென்று) மறுத்துவிட்டதை, எனக்கு உயிர் அனைய நீர் - எனக்கு உயிரைப் போலச் சிறந்த ஆதாரமான நீங்கள், அறிமின்கள் - அறிந்திருங்கள்; வாண்மையால் - வாளின்தொழில் வன்மையாலும், வரி வின்மையால் - கட்டமைந்த வில்லின் தொழில்வன்மையாலும், மேண்மையால் -

பெருமையாலும், வலி உரைக்கலான் - (நான்) பராக்கிரமங் கூறிக்கொள்கிறேனில்லை; இனி - இனிமேல், உங்கள் தோண்மையால் - உங்களது புஜபலத்தால், அமர் தொலைத்து - போரில் (பகைவரை) ஒழித்து, அடல் வாகையும் சூடுவன் - அவ்வெற்றிக்கு அடையாள மான காட்டுவாகைப் பூமாலையையுந் தரிப்பேன், என்றான் - என்று (தருமன் அரசரை நோக்கிக்) கூறினான்; (எ - று.)

கேண்மை - (ஒருவர்க்கொருவர் யோகக்ஷேமசமாசாரங்களைக்) கேட்குந் தன்மை யென நண்புக்குக் காரணப்பெயர்: வினைப்பகுதியடியாகப் பிறந்த பண்புப்பெயர். ஆண்மை - ஆண்தன்மை: பௌருஷம்; அரசாளுந் தன்மையுமாம். உயிருவமையால் இன்றியமையாமை கூறி அவரைப் புகழ்ந்தபடி. வாண்மை, வின்மை என்றவற்றில், 'மை' விகுதி தன்மைப் பொருளை யுணர்த்தும். அடல் - (பகைவரைக்) கொல்லுதல். வாகை யென்னும் ஓர் மரத்தின் பெயர்-அதன் மலரினாலாகிய மாலைக்கு இருமடியாகுபெயர். வாகைப்பூமாலை பகைவரை வென்றோர் சூடுவதாதலை "வெட்சிநிரை கவர்தல்****மிக்கோர், செரு வென்றது வாகையாம்" என்றதனாலும் அறிக. (334)

## 11.—வந்த அரசர்கள் தருமனுக்குத் தைரியங்கூறுதல்.

வெங்கண்மாமுரசுயர்த்தவனிம்மொழிவிளம்பலும்விளக்கஞ்செய்
திங்களசூழ்தருதாரையின் கணமெனச் சேர்ந்தமன்னவரெல்லாம்
எங்களாவியுமெம்பெருஞ்சேனையும் யாவையுநினவென்றார்
தங்கள்வீரமுமானமுமரபுநல்வாய்மையுந்தவறில்லார்.

(இ - ள்.) வெம் - (பகைவர்க்குப்) பயங்கரமான, கண் - தன்மையையுடைய, மா முரசு - பெரிய முரசத்தின் வடிவத்தையெழுதின கொடியை, உயர்த்தவன் - உயர எடுத்தவனான யுதிட்டிரமகாராசன், இ மொழி விளம்பலும் - இந்த வார்த்தையைக் கூறினவுடனே,— தங்கள் வீரமும் மானமும் மரபும் நல் வாய்மையும் தவறு இல்லார் - தங்களது பராக்கிரமமும் மானமும் குலப்பெருமையும் சிறந்த சத்தியமும் (என்றும்) பிறழ்தலில்லாதவராகிய, விளக்கம் செய் திங்கள் சூழ்தரு தாரையின் கணம் என சேர்ந்த மன்னவர் எல்லாம் - பிரகாசத்தைச் செய்கிற பூர்ணசந்திரனைச் சூழ்ந்துள்ள நட்சத்திரங்களின் கூட்டம்போல(த் தருமனை)ச் சூழ்ந்துள்ள அவ்வரசர்கள் யாவரும்,—எங்கள் ஆவியும் எம் பெருசேனையும் யாவையும் நின என்றார் - 'எங்கள் உயிரும் எங்கள் பெரிய சேனைகளும் ஆகிய எல்லாப் பொருளும் உனக்கேஉரியனவாம்' என்று (தருமனுக்கு) உறுதி கூறினார்கள்; (எ - று.)

விளம்பலும் என்றார் என இயையும். சந்திரன் நட்சத்திரங்களுக்கு அதிபதியாதல்போல, இவ்வரசரெல்லாம் தருமனைத் தமக்குத் தலைவனாகக் கொண்டதனால் இங்கே இவ்வுவமை கூறினார். "யாமெய்யாக் கண்டவற்றுளில்லை யெனைத்தொன்றும், வாய்மையினல்ல பிற" என்பவாதலால் 'நல்வாய்மை' எனப்பட்டது. சொன்ன வார்த்தை தவறாமல் பராக்கிரமங் கொண்டு பகைவென்று மானங் காக்கவல்ல உயர்குடிப்பிறப்பினரென்பார் 'தங்கள் வீரமுமானமு

மரபு நல்வாய்மையுந்தவறில்லார்' என்றார். இனி, வெங்கண் என்பதில் கண் என்பதற்கு வாத்தியத்தில் அடிக்கப்படும் இட மென்றும், வாரினாற் கட்டப்படுகிற கண்களென்றும் பொருள் கொள்ளலாம்; "கடிப்பிடு கண் முரசம்" என்றார் நாலடியாரிலும். 'நினதென்றார்' என்ற பாடத்துக்குப் பன்மையொருமை மயக்கமாய், தனித்தனி நின்னுடையதென்க. எங்களாவி - ஒற்றுமைக்கிழமைப் பொருளில்வந்த ஆறாம்வேற்றுமைத்தொகை. மானமாவது - எப்பொழுதுந் தம் நிலையினின்று தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வு வந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். மரபு-அதன் சிறப்புக்கு ஆகுபெயர். (335)

## 12.—தருமன் சுவேதனைச் சேனாபதியாக்கலும், இராவான் வீரம் பேசுதலும்.

சுற்றுமன்னவர்சொற்றசொற்களிற்பகைதொலைத்தனன் போலா கிச், செற்றுவார்கழற்சிவேதனைத் தன்பெருஞ்சேனையின் பதியாக்கி, மற்றைநாண்முரசறைந்தமர்குறித்தலு மரவமின்மகன்றெவ்வர்,கொற்ற வெம்படையனைத்துமோரம்பினாற் கொல்வனோர் தினத்தென்றான்.

(இ - ள்.) (தருமபுத்திரன்), சுற்று மன்னவர் சொற்ற சொற்களின் - (தன்னைவந்து) சூழ்ந்த அரசர்கள் கீழ்ச்சொன்ன வார்த்தை களால், பகை தொலைத்தனன் போல் ஆகி - பகைவர்களை ஒழித்த வன் போலக் கவலை யற்றவனாய், செற்று வார் கழல் சிவேதனை - நெருங்கிய நீண்ட வீரக்கழலையுடைய சுவேதனென்னும் (விராடன் மூத்த) மகனை, தன் பெரு சேனையின் பதி ஆக்கி - தனது பெரிய சேனைக்குத் தலைவனாக நியமித்து, அற்றைநாள் - அந்நாளிலே, முரசு அறைந்து - பேரிகை முழக்கி, அமர் குறித்தலும் - போர் நிகழ விருப் பதை வெளிப்படுத்தினவளவில், (அப்பொழுது),— அரவம் மின் மகன் - (உலூபியென்னும்) நாககன்னிகையினது குமாரனான இரா வான், 'தெவ்வர் கொற்றம் வெம்படை அனைத்தும் - பகைவர்களது வெற்றியையுடைய கொடிய சேனைகளையெல்லாம், ஓர் தினத்து - ஒரு நாளிலே, ஓர் அம்பினால் - ஒரு பாணத்தாலே, கொல்வன் - (யான்) கொன்றிடுவேன்,' என்றான்-என்று (வீரவாதம்)கூறினான்; (எ - று.)

சுவேதன் பாண்டவசேனாபதியாயிருத்தற்கு ஏற்ற திறமை யுடையவனாதலைக் கீழ் வெளிப்பாட்டுச்சருக்கத்தில் "சிவன்றன்னை நோக்கிச் சிவேதன் தவஞ்செய்த வாறும், அவன்றனருளாற் பல வாயுதம் பெற்றவாறும், இவன் தன் பகை செற்றதும் யாவு மியம்பி யுள்ளங், கவன்றன்புறுமல் விராடன்றன் கவற்சி தீர்த்தான்" என்ற தனாலுங் காண்க. தீர்த்த யாத்திரையாகப் புறப்பட்ட அருச்சுனன் கங்காநதியில் நீராடுகையில், அங்கு நீர்விளையாடவந்த நாககன்னிகை களுள் உலூபி யென்பவள் அருச்சுனனைக்கண்டு காமுற்று அவனைப் பிலத்துவார வழியாய்த் தன்னுலகத்துக்கு அழைத்துச்சென்று அவனை மணஞ்செய்து கொண்டு இராவானென்னும் புத்திரனைப் பெற்றாள். இவன், தந்தையாகிய அருச்சுனனினும் பலமடங்கு பல பராக்கிரமங்களிற் சிறந்தவனாதலின் இங்ஙனங் கூறினான். கழல் -

வீரர்கள் தமது வீரத்துக்கு ஓர் அறிகுறியாகக் காலில் அணிவதோர் ஆபரணம்; "வீரத்தின் வீக்கிய, கழலேயாடவர் கான்மிசை யணி வடம்," என்பதனாலும் அறிக. மின் - மின்னல்போல மெல்லியளாய் விளங்கும் பெண்ணுக்கு உவமையாகுபெயர். மின்னுவது, மின் எனக் காரணக்குறி. முரசறைந்து என்பதற்கு, தருமன் - ஏவுதற்கருத்தா; முரசறைவித்து என்க. (336)

## 13.—கவிக்கூற்று.

பாண்டுவின்றிருமைந்தர்களைவரும்பார்த்திவருடன்கூடி
யீண்டிருந்தனரிவ்வுழிச்செருக்குறித்தெழிலிமேனியனோடு ந்
தூண்டுவெம்பரித்தேர்த்துரியோதனன்றூதுபோய்ப்பரந்தாமன்
மீண்டுவந்தபின்னவ்வுழிப்புரிந்தனவிளம்புகின்றனமன்றே.

(இ - ள்.) பாண்டுவின் திரு மைந்தர்கள் ஐவரும் - பாண்டு மகாராசனது சிறந்த குமாரர்களான (தருமன் முதலியோர்) ஐந்து பேரும், பார்த்திவருடன் கூடி - மற்றையரசர்களுடனே சேர்ந்து, செரு குறித்து - போர்செய்ய விருப்பதை வெளிப்படுத்தி, எழிலி மேனியனோடும் - மேகம்போலக் கரிய திருமேனியையுடைய கண்ண பிரானுடனே, இ உழி - இவ்விடத்தில் [உபப்பிலாவியத்தில்] ஈண்டு இருந்தனர் - இவ்வாறு இருந்தார்கள்; (இது நிற்க), அ உழி - அவ் விடத்தில் [அஸ்திநாபுரியில்], தூண்டும் வெம்பரி தேர் துரியோத னன் - செலுத்தப்படுங் கொடியகுதிரைகள் பூட்டுந் தேரையுடைய துரியோதனராசன், பரந்தாமன் தூது போய் மீண்டு வந்த பின் - கண்ணபிரான் தூதுசென்று திரும்பிவந்த பின்பு, புரிந்தன-செய்த காரியங்களை, விளம்புகின்றனம் - (இனிச்) சொல்லத் தொடங்கு கின்றோம்; (எ - று.)

அரசாட்சிச்செல்வம் இவர்களை நணுக இருத்தல்பற்றியும், 'திரு மைந்தர்கள்' என்றார் போலும். மைந்து - வலிமை, இளமை, அழகு; அதனையுடையவர் - மைந்தர். எழிலி - எழுதலையுடைய தென மேகத்துக்கு ஏதுப்பெயர். தேர் - மற்றை அங்கங்களுக்கும் உபலட்சணம். பரந்தாமன்-(எல்லாவுலகத்திலும்)மேலான இடத்தை [பரமபதத்தை]யுடையவன்; சிறந்த சோதிவடிவானவ னென்றும் பொருள் கொள்ளலாம். தாமம் - இடமும், ஒளியுமாம். துரியோ தனன் என்பதற்கு-(பகைவர்க்குக்) கொடிய போரையுடையா னென்று பொருள்; யோதநம்-யுத்தம். (337)

வேறு.

## 14. —தனக்குப் போர்த்துணையாகும்படி துரியோதனன் எல்லாவரசர்க்கும் செய்தி தெரிவித்தல்.

முந்தரவுயர்த்தோனேலைமுடியுடையரசர்காண்க
வெந்திறலவரோடும்வெஞ்சமர்விளைந்ததம்மா
தந்தமகிளைஞரோடுஞ்சாதுரங்கத்தினோடும்
வந்தவர்தமக்கேவாழ்வுமுழுதுமென்றெழுதிவிட்டான்.

(இ-ள்.) 'முந்து-முன்பக்கத்திலே, அரவு உயர்த்தோன்-பாம்புக் கொடியை உயர எடுத்துள்ள துரியோதனனது, ஓலை - திருமுகத்தை, முடி உடை அரசர் - கிரீடத்தையுடையவராய் அரசாளும் இராசாக்கள், காண்க - காண்பாராக;—வெம் திறல் ஐவரோடும் - கொடிய வலிமையையுடைய பஞ்சபாண்டவருடனே, (நமக்கு), வெம் சமர் விளைந்தது - கொடிய யுத்தஞ் செய்ய நேர்ந்தது; (ஆதலால்), தம் தம கிளைஞரோடும் - தங்கள் தங்களுடைய சுற்றத்தாரோடும், சாதுரங்கத்தினோடும் - சதுரங்கசேனையோடும், வந்தவர் தமக்கே - (நமக்குத் துணையாக) வந்த அரசர்களுக்கே, வாழ்வு முழுதும்-எல்லா வாழ்க்கைகளும் (உண்டு) [பிறர்க்கில்லை],' என்று எழுதி—, விட்டான் - (அப்பத்திரிகைகளைத் தூதர்கள் மூலமாக எல்லா அரசர்களுக்கும்) அனுப்பினான்; (எ - று.)

இங்ஙனம் எழுதியதனால், துணை வேண்டும் பொழுதும் வணங்குதலில்லாது மிடுக்குடன் நிற்கிற துரியோதனனது செருக்கு விளங்கும். முந்து-இடப்பொருளுணர நின்ற இடைச்சொல்: இனி, வினைத்தொகையாகக் கொண்டு, சிறந்த எனினுமாம். பிறருடைய உதவி தனக்கு அவசியம் வேண்டுவதென்றற்கு, 'வெந்திறலைவர்' என்றான். அம்மா - வியப்பிடைச்சொல்; எல்லா வலிமைகளையு முடையராய் அரசாட்சிசெய்கிற நம்மோடு அரசிழந்த பாண்டவர் படைதிரட்டிப் போர்செய்யவரலாயிற்றே என்ற அதிசயம் பற்றியது. தாம்தாம் என்ற அடுக்கு முதல் குறுகி, வருமொழி பன்மையாயிருக்கையில் வருதற்குரிய அ என்னும் ஆறனுருபை ஏற்றது. சாதுரங்கம் - யானை முதலிய நான்கு அங்கங்கள்; சதுரங்கமென்பதன் விகாரம். "முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே" என்ற தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரத்தால், முழுது என்பது - எஞ்சாமைப் பொருளுணர்த்துவதோர் உரிச்சொல். முரணுடையரசர் என்றும், தந்த மாக்கிளைகள் என்றும் பாடம்.

இதுமுதல் மேல் களப்பலியூட்டு சருக்கம் முடிகிறவரையில் இருபத்து நான்கு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ் சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள்; இவற்றில் மூன்று ஆறுஞ் சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (338)

## 15.—இதுமுதல் ஏழுகவிகள் – பலதேசத்தரசர்கள் வந்து திரளுதலைக் கூறும்.

மித்திரரானமன்னர்விறலுடைத்துணைவரோடும்
புத்திரரோடுந்தத்தம்போர்புரிசேனையோடுஞ்
சத்திரநிழல்விடாததன்மையராகிச்சூழ
மத்திரபதியும்வென்றிமருகருக்காகவந்தான்.

இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்.

இவற்றால், சல்லியன் துரியோதனனுக்கு வஞ்சனைவழியால் துணைவனாய்விட்ட செய்தியைக் கூறுகிறார்.

(இ - ள்.) மித்திரர் ஆன மன்னர் - (தனது) நண்பர்களான அரசர்கள், தத்தம் - தங்கள் தங்களுடைய, விறல்உடை துணைவரோடும் - வலிமையையுடைய உடன்பிறந்தவர்களுடனும், புத்திரரோடும் - பிள்ளைகளுடனும், போர் புரி சேனையோடும் - போர்செய்ய வல்ல சேனைகளுடனும், சத்திரம் நிழல் விடாத தன்மையர் ஆகி - குடைநிழலை விட்டுநீங்காத தன்மையுடையவர்களாய், சூழ - (தங்களைச்) சூழ்ந்துவர, மத்திர பதியும் - மத்திரதேசத்தரசனான சல்லியனும், வென்றி மருகருக்கு ஆக - வெற்றியையுடைய வல்ல (தனது) மருமக்களான பாண்டவர்களுக்கு உதவியாகும் பொருட்டு,வந்தான்- (தனது ஊரிலிருந்து உபப்பிலாவியத்துக்கு)வருகிறவனானான்;(எ-று.)

மித்திரரான மன்னரோடும் துணைவரோடும் புத்திரரோடும் அவரவர் சேனையோடும் அவரவர் சத்திரநிழல் விடாத தன்மையராய்த் தன்னைச்சூழ மத்திரபதியும் வென்றி மருகருக்காக வந்தானெனப் பதவுரை கூறினும் பொருந்தும். சல்லியன் பாண்டு மகாராசனது இரண்டாவது மனைவியாகிய மாத்திரிக்கு உடன்பிறந்தவனாதலால், நகுலசகதேவர்க்கு மாமனாவன். மருகர் - சகோதரி மக்கள். மருகருக்கு வென்றியாக வந்தான் என அநுவயித்து-தன் மருமக்களுக்கு வெற்றியுண்டாகக் கருதி வந்தான் எனினுமமையும். இவன் - நகுலசகதேவரிடத்திற்போலவே தருமபுத்திரன் முதலிய மூன்று பாண்டவரிடத்தும் மிகுந்த அன்புடையவனாதலால், 'மருகர்' எனப் பொதுப்படக்கூறினர். துணைவர் - சகாயமாகவுள்ளவருமாம்; புத்திர ரென்பதற்கு - (தமது தாய்தந்தையரைப்)புத் என்னும் நரகத்தினின்றும் (நீக்கிக்) காப்பவரென்று பொருள; புத் பிள்ளையில்லாதவர் அடைவதோர் நரகம். (339)

16. இடைப்படுநெறியில்வைகுமிவனதுவரவுகேட்டுத்
தொடைப்படுதும்பைமாலைச்சுயோதனன்சூழ்ச்சியாக
மடைப்படுவிதியிற்செய்தவிருந்தினன்மருண்டவற்கே
படைப்படுசேனையோடும்படைத்துணையாயினானே.

(இ - ள்.) இடை படு நெறியில் - (மத்திரதேசத்துக்கும் உபப்பிலாவியத்துக்கும்) நடுவிலுள்ளவழியில், வைகும் - வந்து தங்கியிருக்கிற, இவனது - இச்சல்லியனுடைய, வரவு - வருதலை, கேட்டு - கேள்விப்பட்டு, தொடைபடு தும்பை மாலை சுயோதனன் - தொடுத்தல் பொருந்தின தும்பைப்பூமாலையைச் சூடிய துரியோதனன், சூழ்ச்சி ஆக - வஞ்சனையாக, மடைபடு விதியின் செய்த - சமைத்தறதொழிலுக்குப் பொருந்தின முறைமைப்படி செய்வித்த, விருந்தினால் - விருந்துணவினால், மருண்டு - பிரமித்து, படைபடு சேனையோடும் அவற்கே படை துணை ஆயினான் - ஆயுதங்களோடு பொருந்தின (தன்) சேனைகளுடனே (சல்லியன்) அத்துரியோதனனுக்கே போர்த்துணைவனானான்; (எ - று.)

சல்லியனென்ற இவன் பாண்டவர்க்குப் போர்த்துணைசெய்யும் பொருட்டுத் தன் நாட்டிலிருந்து வரும்வழியில், துரியோதனன் தருமபுத்திரன செய்ததென்று தோன்றும்படி ஆங்காங்குத் தண்ணீர்ப் பந்தல் முதலியன வைத்து எல்லாப்பொருளுங் குறைவற அமைத்து

வஞ்சனையாக விருந்து செய்விக்க, சல்லியன் அதை ஆராயாது உண்டு, அங்ஙனந்தன்னை உபசரித்தவர்க்குத் துணைசெய்யத் தான் கடமைப்பட்டிருப்பதாக வாக்களித்த பின்னர், அது துரியோதனன் செய்ததென்று தெரிந்து கலுழ்ந்தும், வாக்குத்தத்தஞ் செய்துவிட்டதுபற்றி, துரியோதனன் வேண்டுகோளின்படி அவனுக்கே துணையாயினன்: இவ்வரலாற்றைக் கீழ் வெளிப்பாட்டுச்சருக்கத்தில் கூறியிருத்தலுங் காண்க. கீழ்க் கூறிநின்ற வரலாற்றையே, இங்கு இருதிறத்தும் படைத்துணையாயினவர் இவரிவரெனப் பகுத்துக் காட்டும் பொருட்டு மீண்டும் கூறினமையின். இதுகூறியதுகூறலாகாது, அநுவாதமுமாம்; ஒருகாற் கூறியதை மீண்டுங் காரணமின்றி எடுத்துக் கூறுதலே கூறியதுகூறலென்னுங் குற்றமென்றும், அங்ஙனம் ஒருகாற் கூறியதையே மீண்டும் ஒரு காரணம்பற்றி எடுத்துக்கூறுதல் அநுவாதமென்னுங்குணமாமென்றும் வேறுபாடு அறிக. இப்பாடலின் முதலடியால், இடைநெறியில் வைகுகையில் சல்லியனது வருகையைத் துரியோதனன் கேள்விப்பட்டானென்க.

தும்பைமாலை, போருக்கு உரியது. தும்பைமாலைச் சுயோதனன் என்றது, அவன் யுத்தத்திற்குச் சித்தனாயிருந்ததை விளக்கும். ஸுயோதனன் என்னும் பெயர்க்கு நல்ல [வெற்றியைத்தருகிற] போரையுடையவனென்று பொருள்; ஸு-நன்மை, யோதநம்-யுத்தம். சூழ்ச்சி - தந்திரம். விருந்து - புதுமை; இங்கு இருமடியாகுபெயராய், புதியராய் வந்தவர்க்குச்செய்யும் உபசாரத்தைக் குறித்தது. செய்தலென்னும் வினைக்கு, சுயோதனன் - ஏவுதற்கருத்தா. மடைப்படு விதி - பாகசாஸ்திர விதி. (340)

17. சல்லியன்றனுமாயச்சகுனியுந்தறுகண்வெம்போர்
வல்லியமனையவென்றிமாகதபதியுங்கொற்ற
வில்லியல்கடகத்திண்டோள்விந்தரன்விந்தனென்று
சொல்லியநிருபர்தானையாறொடுங்கடலிற்சூழ்ந்தார்.

(இ - ள்.) சல்லியனும் - (கீழ்க்கூறிய) சல்லியனும், மாயம் - வஞ்சனையையுடைய, சகுனியும்—, தறுகண் வெம் போர்-அஞ்சாமையோடு செய்யத்தக்க கொடியயுத்தத்தில், வல்லியம் அனைய-புலியையொத்த [பராக்கிரமத்தையுடைய], வென்றி மாகதபதியும் - வெற்றியையுடைய மகததேசத்தார்க்குத் தலைவனான அரசனும், கொற்றம் - வெற்றியைத்தரத்தக்க, வில் - விற்றொழில் வன்மை, இயல்-பொருந்தின, கடகம் திண் தோள் - கடகமென்னும் அணியையணிந்த வலிய தோள்களையுடைய, விந்தரன் விந்தன் என்று சொல்லிய நிருபர் - விந்தரனென்றும் விந்தனென்றும் பேர் சொல்லப்பட்ட அரசர்களும், தானை ஆறொடும் - அறுவகைச்சேனையுடனே, கடலின் சூழ்ந்தார் - சமுத்திரம்போலத் (துரியோதனனை வந்து) சூழ்ந்தார்கள்;

அளவிறந்த பரப்புக்கும், ஆரவாரத்துக்கும், அணியணியாக வருதற்கும் சேனைக்குக் கடல் உவமை. அறுவகைச்சேனை - மூலப்

படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்றூர் பரிமேலழகர், தேர், யானை, குதிரை, வில்வீரர், வாள்வீரர், வேல்வீரர் எனினுமமையும்: "வேற்றானை வாட்டானை விற்றானை மேலோர், தேர்த்தானை பரித்தானை களிற்றுத் தானை யென, ஆற்றல் சான்ற வறுவகைத்தானை" என்பது திவாகரம் இனி, தானை யாரொடு என்பதற்கு - சேனைகளாகிய நதிகளோடு என்று உரைத்தல் சிறவாமை காண்க. சல்லியன் - (பகைவர்க்கு) அம்புநுனிபோல் (வருத்தஞ்செய்) பவன்; சல்யம் - அம்புமுனை. தான் - அசை. சகுனி - காந்தாரதேசத்தரசன்; திருதராட்டிரனது மனைவியான காந்தாரியின் உடன்பிறந்தவன். ஆதலால், துரியோதனுதியர்க்கு மாமன். இவன் வஞ்சகச்சூதில் வல்லவனுதலால் 'மாயச் சகுனி' என்றூர். கடகம்-ஓர் வகைக் கைவளை. விந்தன் அனுவிந்தன் என இருவர் அவந்திதேசத்தரசர்கள் என்பது வியாசபாரதம். (341)

18. கலிங்கர்கோன்சோமதத்தன்கௌசிகன்காம்பிலீசன்
தெலுங்கர்கோன்போசனுதிகேகயன்றிகத்தபூபன்
வலங்கொள்வேற்கவுடராசன்மாளவன்வளவன்சேரன்
துலங்குநீரோகனீகனெனும்பலவேந்தர்தொக்கார்.

(இ - ள்.) கலிங்கர்கோன் சோமதத்தன் - கலிங்கநாட்டார்க்கு அரசனுன சோமதத்தனென்பவனும், கௌசிகன் காம்பிலி ஈசன் - காம்பிலிதேசத்தரசனுன கௌசிகனென்பவனும், தெலுங்கர்கோன் - தெலுங்கதேசத்தார்க்கரசனும், போசன்-போசதேசத்தரசனும், ஆதி கேகயன் - முதன்மையான கேகயதேசத்தரசனும், திகத்த பூபன் - திரிகர்த்ததேசத்தரசனும், வலம் கொள்வேல் - வெற்றியைக் கொள்ளும் வேலாயுதத்தை யேந்திய, கவுடராசன்-கௌடதேசத்தரசனும், மாளவன் - மாளவதேசத்தரசனும், வளவன் - சோழனும், சேரன் - சேரனும், துலங்குநீர் ஓகனீகன் - விளங்குகின்ற குணங்களையுடைய ஓகநீகனும், எனும் - என்கிற, பல வேந்தர் - பல அரசர்கள், தொக்கார் - வந்துகூடினூர்கள்; (எ - று.)

கீழ்நான்கு ஆறுங்கவிகளிற் கூறிய தேயங்களுள் சிலவற்றையே மீண்டும் இங்குக் கூறியதனுல், அந்தந்ததேசத்து அரசகுலத்தாருள் சிற்சிலர் பாண்டவர் பக்கத்தும் சிற்சிலர் துரியோதனுதியர்பக்கத்தும் வந்து கூடினரென்க. கௌசிகன் - குசிக குலத்தான்; தத்திதாந்த நாமம். நீர்வளநிலவளங்களிற் சிறந்த நாட்டையுடைமையின், சோழனுக்கு வளவனென்று பெயர்; வளவன் - எல்லாவளங்களையு முடையான். 'இலங்குநீ ரோதைவேலையெனும் பல வேந்தர்' என்றும் பாடம். (342)

19. பங்களங்குகுரஞ்சீனர்பப்பரங்கொப்பம்வங்கஞ்
சிங்களந்துளுவமங்கமாரியந்திகத்தஞ்சேதி
கொங்கணங்கடாரங்கொங்கங்கூபகமிரட்டமொட்டம்
எங்கணுமுள்ளவேந்தரியாவருமீண்டிமொய்த்தார்.

(இ - ள்.) பங்களம் குகுரம் சீனம் பப்பரம் கொப்பம் வங்கம் சிங்களம் துளுவம் அங்கம் ஆரியம் திகத்தம் சேதி கொங்கணம் கடாரம் கொங்கம் கூபகம் இரட்டம் ஒட்டம்—, (என்கிற இத் தேசங்கள் முதலாக), எங்கணும் - எல்லாவிடங்களிலும், உள்ள—, வேந்தர் யாவரும் - அரசர்களெல்லோரும், ஈண்டி மொய்த்தார் - கூடி நெருங்கினார்கள்; (எ - று.)

பங்களம் - பங்காள மென வழங்கும். வேந்தரியாவர் - தன்னொழி மெய்ம்முன் யகரம் வர இகரந்தோன்றிற்று. (343)

20. அண்ணலந்துரகத்தாமாவாதியாங்குமரராலும்
எண்ணிருபத்துநூறும்யாதவகுமரராலும்
வண்ணவேற்பூரிகௌரிமாமுதற்குமரராலும்
எண்ணருஞ்சேனைவெள்ளமெங்கணும்பரந்தமாதோ.

(இ - ள்.) அண்ணல் - பெருமையையுடைய, அம் - அழகிய, துரகத்தாமா ஆதி ஆம் - அசுவத்தாமன் முதலான, குமரராலும் - இளவீரர்களாலும், எண் இரு பத்து நூறு ஆம்-பதினாறுயிர மென்னுந் தொகையுள்ளவரான, யாதவ குமரராலும் - யதுகுலத்து இள வீரர்களாலும், வண்ணம் வேல் - அழகிய வேலாயுதத்தையுடைய, பூரி - பூரிச்ரவசு என்பவனும், கௌரிமா - கௌரிமா வென்பவனும், முதல் - முதலான, குமரராலும் - இளவீரர்களாலும், (ஆகிய) எண் அரு சேனை வெள்ளம் - கணக்கிடமுடியாத [அளவிறந்த] சேனை களின் கூட்டம், எங்கணும் பரந்த - எல்லாவிடங்களிலும் பரவின; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

எண்ணிரு பத்து நூறு - பண்புத்தொகைப் பன்மொழித் தொடர்; எண்ணிரண்டு - பதினாறு: பத்துநூறு - ஆயிரம் எண்ணிரண்டாகிய பத்து நூறென்க. யாதவர் - யதுவின் குலத்தவர்; தத்திதாந்தநாமம்; யது - சந்திரவமிசத்து ஓரரசன். எண்ணிருபத்து நூறும் யாதவகுமார ரென்றது, கண்ணனுக்குப் பதினாறுயிரம் கோபஸ்திரீகளிடம் பிறந்தவர்களான நாராயணகோபா லர் முதலியோரை; கீழ்த் துரியோதனன் கண்ணனைப் படைத்துணை யழைக்கப் போனபொழுது அவனால் துரியோதனனுக்குத் துணை யாகக் கொடுக்கப் பட்டனர் இவரென அறிக. எண் அரு - (மனத் தால்) நினைத்துப் பார்ப்பதற்கும் முடியாத எனினுமாம். வெள்ளம்- ஓர்பெருந்தொகை; இனி, சேனை வெள்ளம்-சேனைகளாகிய பிரவாகங்க ளென்றுமாம். (344)

21. தம்பியரனைவருந்துச்சாதனன்முதலாவுள்ளோர்
வெம்பரிதடந்தேர்வேழம்வேல்சிலைவடிவாள்வல்லோர்
அம்பரத்தளவுமுந்நீரம்பரமெழுந்ததென்ன
வும்பருமிம்பராருமுரகரும்வெருவவந்தார்.

(இ - ள்.) வெம் பரி - வேகமான குதிரைகளைச் செலுத்துந் தொழிலிலும், தட தேர் - பெரிய தேர்களை நடத்துந் தொழிலிலும்,

வேழம் - யானைகளை யோட்டுந் தொழிலிலும், வேல் - வேற்றொழிலிலும், சிலை - விற்றொழிலிலும், வடி வாள் - கூர்மையான வாளின் தொழிலிலும், வல்லோர்-வல்லவர்களாகிய, துச்சாதனன் முதல் ஆம் உள்ளோர் - துச்சாதனன் முதலாக உள்ளவரான, தம்பியர் அனைவரும் - (துரியோதனனது) தம்பிமார்களெல்லோரும்,—முந் நீர் அம்பரம் - மூன்று நீர்மையையுடைய கடல், அம்பரத்து அளவும் எழுந்தது என்ன - ஆகாயத்தளவும் பொங்கியெழுந்தாற்போல,— உம்பரும் இம்பராரும் உரகரும் வெருவ - மேலுலகத்துள்ள தேவரும் இவ்வுலகத்திலுள்ள மனிதரும் கீழுலகத்துள்ள நாகரும் (ஆக மூவுலகத்தாரும்) அஞ்சும்படி, வந்தார்—; (எ - று.)

தம்பியர், தொண்ணூற்றொன்பதின்மர். துச்சாதனன் என்ற சொல்லுக்கு - கொடிய கட்டளையுடையானென்று பொருள்; சாஸநம்- ஆஜ்ஞை. வெம்பரி தடந்தேர் வேழம் வேல் சிலை வடிவாள் வில்லோர் என்ற இது, அவரது அறுவகைச்சேனையாரையு மாகலாம். வேல் - வெல்லுதற்குரிய கருவி யென்பதுபற்றிய காரணக்குறி போலும். வடிவாள் - வடிக்கப்பட்ட வாள்; வடித்தல் - உலைநெருப்பில் வைத்துக் காய்ச்சி யடித்துக் கூராக்குதல். முந்நீர் - மூன்றாகிய தன்மையை யுடையதெனப பண்புத்தொகையன்மொழிக் காரணப் பெயர். மூன்று தன்மைகள் - பூமியைப் படைத்தல் காத்தல் அழித்தல் என்பன; நீரினின்று நிலம் பிறந்ததென வேத மோதுதலால் படைத்தலும், நீரின்றி உலகம் பிழையாதாதலால் காத்தலும், இறுதியில் நீரினால் மூடப்பட்டு உலகம் அழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்களும் கடலுக்கு உரியனவாயின. இனி, ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூவகை நீரையுடையதென்பாரு முளர்; ஆற்றுநீர் மழைநீராதலாலும், அவ்விரண்டுமில்லாதவிடத்து ஊற்றுநீரும் இல்லையாமாதலாலும், அது பொருந்தாது. ஆதியில் கடவுள் நீரையே படைத்தாரென்றும் புராணம் கூறுதலால் முந்நீர் முதிய நீரென்றும் பொருள்கொண்டு, முதுமையென்னும் பண்புப்பெயர் விகாரப்பட்டதென்பாரு முளர். இனி, முன்னீர் என்று நகரத்தைமாற்றிப் பாடங் கொள்ளின் பழமையான நீரென்று பொருள்படும். அம்பரம் என்பது கடல் ஆகாசம் என்னும் இவ்விருபொருளு முடையதாதலை "அம்பரங் கடலுமாடையு மாகாயமும்" என்ற பிங்கலந்தையாலும் "அம்பரங் கடல் விண் துசாம்" என்ற நிகண்டினாலுங் காண்க. உம்ப ரென்னும் மேலிடத்தின் பெயர், அதிலுள்ள தேவர்க்கு இடவாகுபெயர். உம்பர் இம்பர் என்பவற்றில் உகர இகரச் சுட்டுக்கள் முறையே மேலுள்ள பொருளையுஞ் சமீபத்திலுள்ள பொருளையுங் குறித்தன. உரகராவார்- படமும் வாலுமுடையராய் மனிதவடிவமுந் தெய்வப் பிறப்புமானதொரு சர்ப்ப சாதியார். (345)

## 22.—துரியோதனன் சேனையின் சிறப்பு.

வீடுமன்கிருபன்கன்னன்விற்கையாசிரியன்வையம்
பாடுசீர்விகத்தசேனன்பகதத்தன்முதலாவுள்ளோர்

ஆடல்வெம்பரிதேர்யானையணிகினித்தலைவர்செம்பொற்
கோடுயர்குன்றஞ்சூழ்ந்தகுலகிரியேழுமொத்தார்.

(இ - ள்.) வீடுமன் - பீஷ்மனும், கிருபன் - கிருபாசாரியனும், கன்னன் - கர்ணனும், வில் கை ஆசிரியன் - விற்றொழிலில் வல்ல கையையுடைய துரோணாசாரியனும், வையம் பாடு சீர் - நிலவுலகத்தவரால் (கொண்டாடிப்) பாடப்படுகிற சிறப்பையுடைய, விகத்தசேனன்- விகத்தசேனனும், பகதத்தன் - பகதத்தனும், முதல் ஆ - முதலாக, உள்ளோர்-உள்ளவர்களான, ஆடல் வெம் பரி தேர் யானை அனீகினி தலைவர் - ஆட்டத்தையுடைய வேகமான குதிரைகளையும் தேர்களையும் யானைகளையுமுடைய சேனைகட்குத் தலைவரானவர்கள், செம் பொன் கோடு உயர் குன்றம் சூழ்ந்த குல கிரி ஏழும் ஒத்தார்-சிவந்த பொன்மயமான சிகரங்களுயர்ந்த மேரு மலையைச் சுற்றிலுமுள்ள ஏழு குலபர்வதங்களையும் போன்றார்கள் ; (எ - று.)

வீடுமன் முதலிய சேனைத்தலைவர்கள் துரியோதனனைச் சூழ்ந்தது, மலைகளுட் சிறந்த மகாமேருவைக் குலபருவதங்கள் சூழ்தலைப் போன்ற தென்க. புகழ் தான், உரையும் பாட்டும் என இருவகைப் படும்; அவற்றுள் பாடப்படும் புகழைக் கூறுவார், 'வையம் பாடுசீர்' என்றார். "புலவர் பாடும் புகழ்" என்றார் புறநானூற்றிலும். பகதத்தன் - பிராக்சோதிஷபுரத் தரசனும் திருமாலுக்குப் பூமிதேவியினிடம் பிறந்தவனும் கண்ணனாற் கொல்லப்பட்டவனுமாகிய நரகாசுரனது மகன். ஆடல் - வெற்றியுமாம். குலகிரி ஏழு - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன. குலகிரியென்பதில், குலம் என்பதற்குச் சிறந்த தென்று பொருள். நாணற்காட்டிற் பிறந்திருந்த முனிமக்களை வேட்டைக்கு வந்த சந்தனு மகாராசன் பார்த்துக் கிருபையினால் எடுத்துச்சென்று வளர்த்ததனாற் கிருபனென்றும், கிருபி யென்றும் பெயருண்டாயின வென்பது விஷ்ணு புராணம். (346)

## 23.—இதுவும் அது.

நதியெனைப்பலவும்வந்துசிந்துவினண்ணுமாபோல்
எதிரறப்பொருதுவெல்லுமிராசமண்டலங்களெல்லாஞ்
சதமகற்குவமைசாலுந்தரணிபன்றன்னைச்சூழ்ந்து
பதினொரக்குரோணிசேனைபார்மிசைப்பரந்தவன்றே.

(இ - ள்.) எதிர் அற - பகை யொழிய, பொருது - போர்செய்து, வெல்லும் - சயிக்குந்தன்மையுள்ள, இராச மண்டலங்கள் எல்லாம் - அரசர் கூட்டங்கள் யாவும், நதி எனை பலவும் வந்து சிந்துவில் நண்ணும் ஆ போல் - மிகப்பலவான ஆறுகளெல்லாம் வந்து கடலிற் சேரும் விதம்போல, சதமகற்கு உவமை சாலும் தரணிபன் தன்னை சூழ்ந்து - இந்திரனுக்கு உபமானமாகச் சிறந்த துரியோதன மகாராசனை வந்து சூழ்ந்ததனால், பதினொரு அக்குரோணி சேனை பார்மிசை பரந்த - பதினொரு அக்ஷௌஹிணி சைநியம் பூமியின்மேற் பரவின ;

(எ - று.)—அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்: அப்பொழுதே யென்றுங் கொள்ளலாம்.

சதமகற்குவமைசாலும் என்பதற்கு - இந்திரனினுஞ் சிறந்தவென்று பொருள்: உபமேயத்தினும் உபமானஞ் சிறந்திருக்கவேண்டுமென்பது, அலங்கார நூலார் கொள்கை. எனை - எத்தனையென்பதன் மரூஉ. சதமகனென்னும் சொல்லுக்கு-பூமியைக் காப்பவனென்றும் பொருள். இவ்வுலகத்தில் நூறு அசுவமேதயாகங்களைச் செய்தவன் மறுமையில் தேவேந்திர பதவி பெறுகின்றனனென்பது, நூற்கொள்கை. தாணி - (எல்லாப் பொருள்களையுந்) தரிப்பது. சூழ்ந்து - சூழ; எச்சத்திரிபு. 'நதியினம்', 'எதிருற' என்றும் பாடம். (347)

## 24.—துரியோதனன் வீடுமனைச் சேனாதிபதியாக்குதல்.

பரசுடையிராமன்பாதபங்கயஞ்சென்னியேந்தி
வரிசிலைவேதங்கற்றுமற்றவன்றனையும்வென்ற
குரிசிலைக்கங்கைதந்தகுருகுலக்கோமான்றன்னை
அரசன்வெஞ் சேனைக்கெல்லாமதிபதியாக்கினானே.

(இ - ள்.) பரசு உடை இராமன் - கோடாலிப்படையையுடைய பார்க்கவ ராமனது, பாத பங்கயம் - திருவடித்தாமரைமலர்களை, சென்னி ஏந்தி - (தனது) முடியின்மேற் கொண்டு, வரி சிலை வேதம் கற்று - கட்டமைந்த வில்வித்தையை (அவனிடத்து)க் கற்று, மற்று - பின்பு, அவன் தனையும் வென்ற-அப்பரசுராமனையே சயித்த, குரிசிலை - பெருமையிற் சிறந்தவனும், கங்கை தந்த - கங்காநதி பெற்ற, குரு குலம் கோமான் தன்னை - குருவமிசத்துக்குத் தலைவனுமான வீடுமனை, அரசன் - துரியோதனராசன், வெம் சேனைக்கு எல்லாம் அதிபதி ஆக்கினான்-உக்கிரமான சேனைகளெல்லாவற்றிற்குந் தலைவனாக்கினான்; (எ - று.)

உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையாற் கொழுத்துத் திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்திரிய வம்சங்கள் பலவற்றைப் பற்றற நாசஞ்செய்யும் பொருட்டு, நாராயணமூர்த்தி, ஜமதக்கி முனிவரது மனைவியான ரேணுகையினிடம் ராமனாய்த்திருவவதரித்து, பரசு என்னுங் கோடாலிப் படையையே ஆயுதமாகக் கொண்டு, தமது தந்தையின் ஓமதேனுவைக் கவர்ந்து அவரைக் கொன்றிட்டது காரணமாகக் கார்த்தவீரியார்ச்சுனனையும் அவனதுகுமாரர்களையுங் கொன்று அழித்து அதனாலேயே க்ஷத்திரிய வம்சம் முழுவதன்மேலுங் கோபாவேசங்கொண்டு, உலகத்திலுள்ள அரசர் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டார். இவர், திருமாலின் ஆறுவது திருவவதாரம்: (ஏழு சிரஞ்சீவிகளுள் ஒருவர்; மற்றையோர் - அசுவத்தாமா, பலி, வியாசன், அநுமான், விபீஷணன், கிருபன் என இவர்.) இவரிடம் வீடுமன் வில்வித்தை கற்றுத் தேர்ந்ததை "பூந்துழாய் மாலைப் போர்மழுப் படையோன் பொன்னடி பொலிவுற வணங்கி, யேந்துசீர் சிலையும் பலகலை மறையு

மேனைய படைகளும் பயின்ருன்" எனக் கீழ்க் குருகுலச்சருக்கத் திலுங்காண்க. வீடுமனல் மணம் மறுக்கப்பட்ட அம்பை முடிவில் அவனது குருவான பரசுராமனைச் சரணமடைய, அப்பிரான் தன்ன ருளால் விரைந்து வந்து வீடுமனை அவளை மணஞ்செய்யும்படி வற் புறுத்த, விரதவுறுதியையுடைய வீடுமன் அதனை மறுக்கவே, அது காரணமாக அவன் கோபங்கொண்டு அறைகூவிப் பெரும்போர் செய்ய, அப்போரில் வீடுமன் பரசுராமனை வென்றிட்டன னென்பது வரலாறு; இதனையுங் கீழ்க் குருகுலச் சருக்கத்திற் காணலாம். பரசு ராமனிடம் ஆவேசித்திருந்த திருமாலின் சக்தி அத்திருமாலின் அமிசாவதாரமான ரகுராமனுற் கவர்ந்துகொள்ளப்பட்டு நீங்கினதாத லின் அவன் வீடுமனிடந் தோல்வியடைந்தன னென உண்மை யுணர்க.

திருவடிக்குத் தாமரை யுவமை - செம்மை மேன்மை அழகுகளுக் கென்க. பாதத்தைப் பங்கயமென்றதற் கேற்ப, 'சென்னியேந்தி' என்ருர். பின்னே 'சென்னியேந்தி' என உருவகத்துக்கு ஏற்றவினை வந்ததனுல், இங்கே 'பாதபங்கயம்' என்பதை, பங்கயம்போன்ற பாத மென, முன் பின்னுகத் தொக்க உவமைத் தொகையாகக் கொள்ள வேண்டுவ தில்லை. பாதபங்கயஞ் சென்னியேந்தி யென்றது, அவ னுடைய திருவடிகளிலே தனது முடிபடும்படி சாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிட்டு என்றபடி. சிலைவேதமாவது - வில் முதலிய ஆயுதங்களிற் பயிலும் வகைகளையும், சத்துருவை வெல்லுதற்குரிய மந்திரம் முதலிய பிரயோகங்களையும், அறிவிக்கிற ஆயுதசாஸ்திரம். 'அவன் தனையும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு; அது மனிதர் தேவர் முதலாக யாவரையும் திக்கு விஜயஞ்செய்து வென்ற இரா வணனை எளிதிற் சிறையிலிட்ட கார்த்தவீரியார்ச்சுனன் முதலாக நிலவுலகத்து அரசர் பலரையும் வேரறுத்த வெற்றியை விளக்கும். குரு - சந்திர வமிசத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன்; இவனுல் இக் குலம் குருகுல மென்றும், இக்குலத்தவர் கௌரவரென்றும், இந்நாடு குருநா டென்றும் பெயர் பெறுதல் காண்க. வேதம் என்பதற்கு - அறிவிப்பதென்று அவயவப்பொருள்; வித் என்னும் வினைப்பகுதி யினின்று பிறந்தது. 'அரசர்வேஞ்சேனை' என்ற பாடத்துக்கு, துரி யோதன னெனத் தோன்ரு எழுவாய் வருவிக்க. (348)

படையெழுச்சிச் சருக்கம் முற்றிற்று.

---

ஆறாவது

# முகூர்த்தங் கேள்விச் சருக்கம்.

[துரியோதனன் தனக்கு வெற்றியுண்டாகுமாறு போர்க்களத்துக்கு உரியதெய்வத்துக்குப் பலிசெலுத்துவதற்கு] நல்லதொரு வேளையைக் குறித்துத் தரும்படி (பாண்டவருள் இளையவனான சகதேவனைக்) கேட்ட செய்தியைக் கூறும் பாகம். முகூர்த்தம் - பொழுதென்று பொருள்; இரண்டு நாழிகை [நாற்பத்தெட்டு நிமிஷங்] கொண்ட காலத்துக்கு முகூர்த்தமென்று பெயர். கேள்வி - கேட்டல்; தொழிற்பெயர்; வி. விகுதி.

## 1 —கடவுள் வணக்கம்.

கயம்படுமனத்தனயகண்ணிலாவரசன்மைந்தன்
வயம்படநினைந்துகங்குல்வகுத்ததோர்சூழ்ச்சிதன்னாற்
பயம்படுமல்லரோடுபாதலமடியநீண்ட
சயம்படுகமலத்தாளென்றலைமிசையகல்கிலாவே.

(இ - ள்.) கயம்படு மனத்தன் ஆய - கீழ்மை பொருந்தின மனத்தையுடையவனான, கண் இலா அரசன் மைந்தன் - பிறவிக்குருடனான திருதராட்டிர மகாராசனது குமாரனான துரியோதனன், வயம் பட நினைந்து - (தனக்கு) வெற்றியுண்டாகுமாறு ஆலோசித்து, கங்குல் வகுத்தது - இராத்திரி காலத்திலே அமைத்து வைத்ததான, ஓர் சூழ்ச்சிதன்னால் - ஒரு தந்திரத்தினால், பயம்பு அடு மல்லரோடு பாதலம் மடிய நீண்ட - பெருங்குழியிலே பொருந்தின மல்லர்களுடனே பாதாளலோகத்தவரும் அழியும்படி நெடிதாக வளர்ந்த, சயம் படு கமலம் தாள் - வெற்றி பொருந்திய செந்தாமரை மலர் போன்ற (ஸ்ரீ கண்ணபிரானது) திருவடிகள், என் தலைமிசை அகல்கிலா - எனது சிரத்தின்மேல் (எப்போதும்) நீங்கமாட்டா; (எ - று.) —ஏ - தேற்றம்; ஈற்றசையுமாம்.

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், தாளை வணங்காத் தலை" என்றபடி, எம்பெருமான் திருவடிகளை வணங்குபவரே தலைபடைத்த பயன் பெறுபவராதலால், இவ்வாறு கூறினர். தாளென் தலைமிசை யகல்கிலா - எப்பொழுதுந் திருவடிகள் அடியேனது முடியின்மீதுபடும்படி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிப்பேன் என்றதாம். விசித்திரவீரியன் மனைவியருள் ஒருத்தியான அம்பிகை கணவனை யிழந்தபின் சந்ததி விருத்தியின் பொருட்டு மாமியார் கட்டளைப்படி மைத்துனனான வியாசமா முனிவனோடு சேருகையில் கூச்சத்தாற் கண் விழியாதிருந்ததனால், அவளிடம் திருதராட்டிரன் பிறவிக் குருடனாகப் பிறந்தான். 'கயம்படுமனத்தனாய' என்ற அடைமொழி - கண்ணிலா வரசனுக்கும், அவன் மைந்தனுக்கும் இயையும். 'கண்ணிலாவரசன் மைந்தன்' என்ற சொற்போக்கு-தந்தை ஊனக்கண் குருடன், மைந்தன் ஞானக்கண் குருடன் என்ற

இழிவைத் தொனிப்பிக்கும். 'கயமையாவது - நற்குணங்கள் யாவுமிலராய இழோரது தன்மை,' என்றார், பரிமேலழகர். இனி, கய படு எனப் பிரித்து, பெருமை யொழிந்த என்றாவது, மென்மை நீங்கின என்றாவது பொருள் கொள்ளினும் அமையும்; "தடவுங் கயவு நளியும் பெருமை", "கயவென் கிளவி மென்மையுஞ் செய்யும்" என்பன-தொல்காப்பியம். பயம்படு - பயம்+படு; பயனற்ற என்றும், அச்சமொழிந்த என்றும், அச்சமுற்ற என்றும், அச்சந்தருகிற என்றும் உரைப்பினும் அமையும். வயம் பட - (கண்ணன்) தன் வசப்பட வென்றலுமாம். மல்லர் - ஆயுதமில்லாமலே கைகால் முதலிய உறுப்புக்களைக் கொண்டு போர்புரியும் மல்லுத் தொழிலில் வல்லவர். (349)

## 2.—இதுவும் அடுத்தகவியும் - வீடுமன் துரியோதனனை நோக்கிக் களப்பலிக்கு நிர்ணயம் செய்தல்.

அளப்பிலாச்சேனைநாதனடிபணிந்தவனிவேந்தன்
களப்பலிக்குரியார்யாவர்கடவநாள்யாவதென்னத்
தளப்பிலாமுகூர்த்தம்வல்லோன்சாதேவனல்லதில்லை
யுளப்பொலிவுடையாயின்றேயுற்றவற்கேண்மினென்றான்.

(இ - ள்.) அவனி வேந்தன் - பூமியையாளும் அரசனான துரியோதனன், (பின்பு), அளப்பு இலா சேனை நாதன் அடி பணிந்து - அளவிடுதல் கூடாத (தனது) சேனைகளுக்கெல்லாந் தலைவனான வீடுமனது பாதங்களை வணங்கி, 'களப்பலிக்கு உரியார் யாவர்-போர்க்களத்தில் (போர்தொடங்குதற்குமுன் நம்மால்) பலிகொடுக்கப் படுதற்குத் தகுந்தவர் எவர்? கடவ நாள் யாவது-அதற்கு ஏற்றநாள் எது?' என்ன-என்றுகேட்க,—(அவ்வீடுமன்), 'தளப்பு இலா முகூர்த்தம் வல்லோன் - (பயன்) தவறுத லில்லாத நல்முகூர்த்தத்தை அமைக்கவல்லவன், சாதேவன் அல்லது இல்லை - சகதேவனேயன்றி வேறொருவரு மில்லை,' (ஆதலால், உளம் பொலிவு உடையாய் - மனவெழுச்சியையுடையவனே! இன்றே உற்று - இப்பொழுதே (அவனிடம்) போய், அவன் கேண்மின் - அவனை (நீங்கள்) கேளுங்கள்', என்றான்-என்று கூறினான்; (எ - று.)

சிறந்ததொரு முகூர்த்தத்திற் சிறந்த ஒருவீரனைப் போர்க்களத்திற்குரிய தேவதைக்கு முன்னர்ப் பலிகொடுப்பவர், தவறாமல் வெற்றி பெறுவர் என்றல் மரபு. 'நாள் செய்வது நல்லோருஞ் செய்யார்' என்றபடி சிறந்த நேரத்தில் தொடங்கின காரியம் தவறாது பயன்தருதலால், 'தளப்பிலா முகூர்த்தம் என்றது. தளம்பல் - நிலைகலங்குதல். உளப்பொலிவு உடையாய் - மனவெழுச்சி கெடாதவனே! என்றுமாம். அவன் தங்கள் பக்கத்துக்காக நல்ல நாள் அமைத்தற்குமுன்னமே சென்று கேட்டல் வேண்டுமென்பார், 'இன்றே' என்றான்; ஏகாரம் - தேற்றவகையால் விரைவு குறிக்கும். அவற் கேண்மின் - உயர்திணையில் ஐயுருபு தொக்கது; இரண்டாம் வேற்றுமைச் சிறப்புவிதியால் உயர்திணைப்பெயரீறு திரிந்தது. 'கேண்மின்'என ஏவற்பன்மையாற் கூறினது. துச்சாதனன் கர்ணன்

சகுனி முதலிய இனத்தவரை உளப்படுத்தி யென்க; இதற்கு நீயாவது உன் இனத்தவராவது சென்று கேட்க வென்று கருத்து; இது - ஒருமைப் பன்மை மயக்கத்தின்பாற் படும். (350)

3. ஒன்றநம்படைகளெல்லாமொருபகற்பொழுதிற்கொல்வான்
நின்றனனிராவானென்பானீயவன்றன்னைவேண்டிற்
கொன்றெனைப்பலிகொடென்றுகூறுமக்குமரற்கொன்றால்
வென்றுனக்கரசும்வாழ்வுமெய்தலாம்விரைவினென்றான்.

(இ - ள்.) '(எதிர்ப்பக்கத்தில்), இராவான் என்பான் - இராவானென்பவன், நம் படைகள் எல்லாம் ஒன்ற ஒரு பகல் பொழுதில் கொல்வான் - நமது சேனைக ளெல்லாவற்றையும் ஒருசேர ஒருதினத்துப் பகற்பொழுதினுள்ளே கொல்ல, நின்றனன் - (உறுதிகூறி) நின்றுள்ளான்; அவன் தன்னை நீ வேண்டின் - அந்தச்சுத்த வீரனை நீ (போய்ப்) பிரார்த்தித்தால், 'எனை கொன்று பலிகொடு' என்று கூறும் - (அவன் சம்மதித்து) என்னைக் கொன்று பலிகொடுப்பாய் என்று (உன்னை நோக்கிச்) சொல்வான்; அக்குமரன் கொன்றால் - அந்த இளவீரனைக் கொன்று பலிகொடுத்துவிட்டால், விரைவின் வென்று அரசும் வாழ்வும் எய்தல் உனக்கு ஆம் - துரிதத்தில் (பாண்டவரைச்) சயித்து அரசாட்சியையும் நல்வாழ்க்கையையும் அடைதல் உனக்குக் கைகூடும்,' என்றான்-என்றும் [துரியோதனனை நோக்கிக்] கூறினான் (வீடுமன்); (எ - று.)

"அரவமின்மகன் தெவ்வர், கொற்ற வெம்படை யனைத்துமோரம்பினாற் கொல்வனோர் தினத் தென்றான்" எனக் கீழ்ச்சருக்கத்து வந்தமையுங் காண்க. என்பானெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது: "இல்வாழ்வா னென்பான்" என்ற திருக்குறளிற் போல: இது செய்வினை செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த வழுவமைதி யென்றும், இதில் அகரச்சாரியையும் படுவிகுதியுந் தொக்குநின்றனவென்றுங் கூறுவர். "ஊரெனப்படுவது உறையூர்" என்ற விடத்துப்போல, இங்கே என்பா னென்பது - என்று சிறப்பித்துக் கூறப்படுவானென உயர்வு தோன்ற நிற்கு மென்க. 'குமரற்கொன்றால்' என்பதை, கீழ்க்கவியில் 'அவற்கேண்மின்' என்றதுபோலக் கொள்க. (351)

4.—சகதேவன் களப்பலிக்கு முகூர்த்தம் நிச்சயித்தல்.

என்றலுமவனுமாங்கோரியந்திரவெகினமூர்ந்து
சென்றனனவனுங்கேட்டுச்சிலையில்வெங்கதிரைத்திங்கள்
ஒன்றியபகலிராவிற்களப்பலியூட்டினல்லால்
வென்றிடலரிதென்றிட்டான்கிளைஞரைவேறிடாதான்.

(இ - ள்.) என்றலும் - என்று (வீடுமன்) சொன்னவுடனே, அவனும் - அத்துரியோதனனும், ஓர் இயந்திரம் எகினம் ஊர்ந்து -

ஒரு ஹம்ஸயந்திரத்தின்மேல் ஏறி, ஆங்கு சென்றனன் - அச்சகதேவனிடம் போனான்; கிளைஞரை வேறு இடாதான்-(தனது) சுற்றத்தாரைப் பேதமாகக் கொள்ளாதவனாகிய, அவனும் - அச்சகதேவனும், கேட்டு - (துரியோதனன் வந்த காரியத்தை) விசாரித்து, (உடனே), 'சிலையில் - தநுர் [மார்கழி] மாசத்தில், வெம் கதிரை திங்கள் ஒன்றிய பகல் - சூரியனைச் சந்திரன் கூடிய நாளில் [அமாவாசையில்], இராவில் - இராத்திரியில், களம் பலி ஊட்டின் அல்லால் - போர்க்களத்துக்குரிய பலியைக் கொடுத்தாலல்லாமல், வென்றிடல் அரிது - (பகையைச்) சயித்திடுதல் அரியதாம்,' என்றிட்டான் - என்று உண்மை கூறினான்; (எ - று.)

தனது தாயாதிகளான துரியோதனாதியரை அபேதமாக நினைக்குந் தூயநெஞ்சுடையவனாதலால் இங்ஙனம் உள்ளபடி கூறினானென்பார், 'என்றிட்டான் கிளைஞரை வேறிடாதான்' என்றார். இயந்திரவெகினம் - அன்னப்பறவையின் வடிவமைத்துச் செய்யப்பட்ட யந்திர வாகனம். சிலை-வில்வடிவமானதோர் இராசி; அதிற் சூரியன் பிரவேசிக்கும் மாதம் அதனாற் பெயர்பெறும். வெங் கதிர்-உஷ்ணமான கிரணங்களை யுடையது; பண்புத்தொகையன்மொழி யென்றுவது அடையடுத்த சினையாகுபெய ரென்றுவது இதற்கு இலக்கணங் கூறுக. சந்திரன் தனது பதினாறுகலைகளுள் இரண்டு கலைமாத்திரம் மிகுந்தவனாய்ச் சூரியகிரணங்களில் மறைகிற தினமே அமாவாசையாதலால், 'வெங்கதிரைத் திங்க ளொன்றிய பகல்' என்றார். பலி யூட்டுதல் - ஒருவனைக்கொய்து பலியாகத் தேவதைக்கு நைவேத்தியஞ் செய்தல்; பலி - தேவர்க்கு இடும் உணவு. கீழே "இன்றே யுற்றவற் கேண்மின்" என்று வீடுமன் கூறியதற்கு ஏற்ப, விரைந்து செல்லவேண்டி, இயந்திரவெகினமூர்ந்து சென்றனனென்க. 'இந்திர விமானமூர்ந்து' என்றும் பாடம்; துரியோதனன் அன்றிரவிலேயே நள்ளிருளில் எவருமறியாமல் உபப்பிலாவியம் புக்குச் சகதேவனைக் கண்டு நன்முகூர்த்தங் கேட்டு மீளவேண்டித் தேவசில்பியான விசுவகருமாவைத் தியானித்து வரவழைத்துப் பிரார்த்தித்து ஆகாசத்திலேயோடவல்லதொரு மாயத்தேரைப் பெற்றுச் சென்றான் என்று பெருந்தேவனார் பாரதத்து உரைநடை. (352)

## 5.—இராவான் தன்னைப் பலியிட உடன்படுதல்.

ஐவரிலிளையோன்றன்பான்முகூர்த்தங்கேட்டவர்சேயான
பைவருமுடியோன்றன்பாற்சேறலும்பணிந்துதாதை
உய்வருவரங்கேட்டென்னையூட்டுகபலிநீயென்றான்
எய்வருசிலையினானும்பெற்றனனென்றுமீண்டான்.

(இ - ள்.) (இவ்வாறு துரியோதனன்), ஐவரில் இளையோன் தன்பால் முகூர்த்தம் கேட்டு - பஞ்சபாண்டவர்களுள் இளையவனான சகதேவனிடம் (களப்பலியூட்டுதற்கேற்ற) நல்முகூர்த்தத்தை விசாரித்தறிந்துகொண்டு, அவர் சேய் ஆன பை வரு முடியோன் தன்

பால் சேறலும் - அப்பாண்டவர்களுள் ஒருவனது [அருச்சுனனது] குமாரனை படம்பொருந்தின தலையையுடைய இராவானிடத்திற் போனவளவிலே, (அவன்), பணிந்து - வணங்கி, தாதை - (தனக்குத்) தந்தைமுறையான துரியோதனன் (கூறின), உய்வரு வரம்-(அவன்) பிழைத்தற்குக் காரணமான வரத்தை, கேட்டு - (இன்னதெனக்) கேட்டறிந்து, (மறுக்காமல் அவ்வேண்டுகோளுக்கு உடன்பட்டு), 'என்னை நீ பலி ஊட்டுக' என்றான் - என்னை நீ (கொன்று) பலி கொடுத்திடுவாயாக என்று கூறினான்; (கூறினவுடனே), எய்வரு சிலையினானும் - (அம்புகளை) எய்து வருகிற வில்லையுடைய துரியோதனனும், பெற்றனன் என்று மீண்டான் - (இனி யான் எல்லா வாழ்க்கையையும்) பெற்றவனானேனென்று (மகிழ்ச்சியோடு தன் ஊர்க்குத்) திரும்பிவந்தான்; (எ - று.)

பெரியவன் வார்த்தையை மறுத்தற்கு அஞ்சி அரிய இதற்கு உடன்பட்டனன் என்பார் 'தாதை யுய்வருவரங் கேட்டு' என்றார். தாதை உய்வு அருவரம் - தன் தந்தையான அருச்சுனன் பிழைத்தல் கூடாத வரம் எனினும் ஒக்கும். வரம் - வேண்டுவன கொள்ளுதல். துரியோதனன் அற்றை நாளிரவிலேயே இராவானிடஞ் சென்று "இவ்வளவும் யார்பாலுஞ் சென்றேன் றிரந்தறியே, னெவ்வளவும் வந்தறியே னென்மகனீ—செவ்வி,வருந்தருவாயாகென்று" வாழ்த்தி வேண்ட, அதுகேட்ட இராவான் ' நீ வேண்டும் வரம் வேண்டுக, தவறாது தருவேன்' என்ன, இவன் 'உன்னைப் பலி கொடுக்க வேண்டும்' என்ன, அங்ஙனமே அவன் அவ்வேண்டுகோளை மறாது 'எங்களில் உங்களைப்போல மறுத்து இரண்டு உரைப்பார் இல்லை கண்டாய்' என்று கூறி உடன்பட்டனன் என்பர் பாரதவெண் பாவில். செம்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதி நீண்டு முன் நின்ற மகரமெய் யகரமாகத்திரிந்து, 'சேய்' என நிற்கும்; இது - முதலில் செம்மை நிறத்தையுடைய முருகக்கடவுளுக்குப் பண்பாகு பெயராய், பின்பு (குமாரனென்னும் வடமொழிபோல) அச் சுப்பிர மணிய மூர்த்திபோலப் பல பராக்கிரமங்களிற் சிறந்த இளவீரனுக்கு உவமையாகுபெயராக வழங்குதலால், இருமடியாகுபெயர்; இனி, 'செய்யவன்' என்பது சேய் என விகாரப்பட்டது' என்பாரு முளர். நாககன்னிகை குமாரனாதலால், 'பைவருமுடியோன்' எனப்பட்டான்; இனி 'பை' என்பதைப் பசுமை யென்னும் பண்புப்பெயர்த்திரி பெனக்கொண்டு, (சிறந்த பொன்மயமான தனால்) பசுமையாய் வருகிற கிரீடத்தையுடையவனென்று உரைத்தலுமொன்று. (353)

முகூர்த்தங்கேள்விச்சருக்கம் முற்றிற்று.

---

ஏழாவது

# களப்பலியூட்டு சருக்கம்.

பாண்டவர் தாம் வெற்றிபெறுதற்பொருட்டுப் போர்க்களத்துக்குரிய தேவதைக்குப் பலிகொடுக்கும் பாகம். 'களப்பலியூட்டுச் சருக்கம்' என்ற பாடத்துக்கு - களப்பலி ஊட்டுதலைக் கூறும் பாகமென்க.

## 1.—கடவுள் வணக்கம்.

குன்றெடுத்தாயர்மாதர்குரவைகொண்டொருவிளாவிற்
கன்றெடுத்தெறிந்துவெய்யகாளியற்கிருதாணல்கி
யன்றெடுத்திறுத்தவில்லேயனையவில்விழவுகாண்பான்
சென்றெடுத்திறுத்துநின்றசெங்கண்மாலெங்கள்கோவே.

(இ - ள்.) குன்று எடுத்து - (கோவர்த்தன) கிரியை (க் குடையாக) எடுத்துப் பிடித்து, ஆயர் மாதர் குரவை கொண்டு - இடைப்பெண்களோடு குரவைக் கூத்தாடி, ஒருவிளாவில் கன்று எடுத்து எறிந்து - ஒருவிளாமரத்தின்மேற் கன்றை யெடுத்து வீசி, வெய்ய காளியற்கு இரு தாள் நல்கி - கொடிய காளியனென்னும் நாகத்துக்கு (த் தனது) இரண்டு திருவடிகளையுங் கொடுத்து, அன்று எடுத்து இறுத்த வில்லே அனைய வில் விழவு காண்பான் சென்று - அக்காலத்தில் [முன்னொரு காலத்தில், ஸ்ரீராமாவதாரத்தில் என்றபடி] எடுத்து ஒடித்த சிவதனுசையே போன்ற [சிறந்த] வில்லின் திருவிழாவைப் பார்க்கும்பொருட்டுப் போய், எடுத்து இறுத்து நின்ற - (அங்கிருந்தவில்லை)எடுத்து ஒடித்து நின்ற, செம் கண் மால் - சிவந்த திருக்கண்களையுடைய திருமாலின் திருவவதாரமூர்த்தியான கண்ணபிரான், எங்கள் கோ - எங்கள் தலைவனுவன்; (எ - று.)—ஏ - தேற்றம்.

திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லோருங் கூடி மழையின் பொருட்டாக இந்திரனை ஆராதித்தற்கென்று சமைத்த சோற்றைக் கண்ணபிரான் அவனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தன மலைக்கு இடச் சொல்லித் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அமுது செய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை யேவிக் கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையருக்கும் இடைச்சியருக்கும் தீங்கு தரும்படி கல் மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தனமென்னும் மலையையெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களையும் இடையூறு சிறிதுமின்றிக் காத்தருளின னென்பதும்;—கண்ணன் கோப ஸ்திரீகளுடனே ராஸக்கிரீடை செய்கையில், தான் விரைவாய்ப்பாயும் லாகவ சமத்காரத்தினாலே, தன்னை விட்டு நீங்க மனமில்லாமல் தன் கையையே தனித்தனி பிடித்திருக்கக் கருதிய அவ்வாயர்மகளிர் யாவர்க்கும்

பக்கத்திலிருந்தவன் போலக் காணப்பட்டது மாத்திரமேயன்றி, ஏககாலத்தில் பலவடிவங்கொண்டு அவர்களிடையிடையே நின்று ஒவ்வொருத்தியது இவ்விருகைகளிலும் தன்கைகளிரண்டும் பொருந்த ஆடியருளின னென்பதும்;—கம்ஸனாலேவப்பட்ட கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன்கீழ் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணி வந்து நிற்க, அதனை யறிந்து கிருஷ்ணபகவான், அவ்வாறே தன்னை முட்டிக் கொல்லும் பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு வந்து தான் மேய்க்கும் கன்றுகளோடு கலந்திருந்த வத்ஸாசுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின்மே லெறிய, இருவரும் இறந்து தமது அசுர வடிவத்துடனே விழுந்திட்டன ரென்பதும்;—யமுநாநதியில் ஓர் மடுவிலிருந்து கொண்டு அந்நதி முழுவதையும் தன் விஷாக்கினியினாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானயோக்கிய மாகாதபடி செய்துவந்த காளியனென்னுந் துஷ்டநாகத்தைக் கிருஷ்ணபகவான் தண்டிக்க வேண்டுமென்று திருவுள்ளம் பற்றி, அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்ப மரத்தின் மேலேறி அம்மடுவிற் குதித்துக் கொடிய அந்நாகத்தின் படங்களின் மேலேறி இரு காலாலுந் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்கி,பின்பு,மங்கலிய பிக்ஷையிடவேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி உயிரோடு கடலிற் சென்று வாழுமாறு அந்தக் காளியனை விட்டருளின னென்பதும்;—ஸ்ரீராமலக்ஷ்மணர் விசுவாமித்திர மகாமுனிவனது வேள்வியை முடித்த பின்னர் அம்முனிவனுடனே மிதிலா பட்டணத்துக்குச் சென்று அங்குச் சனகமகாராசனாற் கந்யாசுல்கமாக வைக்கப்பட்டிருந்ததும், அறுபதினாயிரம் வீரர் அரிதின் எடுத்து வரற்பாலதுமாகிய சிவதனுசை ஸ்ரீராமமூர்த்தி எடுத்து வளைத்து நாணேற்ற முயலுகையில், அது முறிபட, பின் சீதாபிராட்டியைத் திருமணம் புரிந்தன னென்பதும்;—கம்ஸன் கிருஷ்ண பலராமர்களைக் கொல்ல நிச்சயித்துத் தநுர்யாக மகோத்ஸவ மென்று ஒரு வியாஜம்வைத்து அவர்களை வரவழைக்க, அங்ஙனமே கண்ணபிரான் நம்பி மூத்தபிரானுடனே கோகுலத்தினின்று மதுரைக்கு வந்து வில்லின் சாலையி லெழுந்தருளி, அங்குக் காவலாளராற் காட்டப்பட்ட வில்லை யெடுத்து வளைத்து நாணேற்றுகையில், அவ்வில் ஒடிந்ததென்பதும்;— இதிற குறித்த கதைகள்.

ஆயர்-பசுக்களையுடையவ ரென இடையர்க்குக் காரணப்பெயர். 'மாதர் காதல்' என்ற தொல்காப்பியச் சூத்திரத்தின்படி விருப்பத்தையுணர்த்தும் மாதர் என்னும் உரிச்சொல் - விரும்பப்படுகிற அழகுள்ள பெண்களுக்கு ஆகுபெயர். குரவையாவது - கைகோத்தாடும் கூத்து: "குரவைக் கூத்தே கைகோத்தாடல்" என்பது திவாகரம்; பலபேர் வட்டமாய் நின்று சித்திரமான தாள லயைகளுடன் மெதுவாகவும் உன்னதமாகவுங் கூத்தாடுதல் இதன் இலக்கணமாம். 'குரவை யென்பது காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கை பிணைந்து ஆடுவது; "குரவை யென்பது கூறுங்காலைச், செய்தோர்

செய்த காமமும் விறலும், எய்தக் கூறுமியல்பிற் றென்ப" எனவும், "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோத்து, அந்நிலை கொட்பநின் ருடலாகும்" எனவுஞ் சொன்னு ராதலின்' என்பது, சிலப்பதிகாரத்து அடியார்க்கு நல்லாருரை. கன்று - பசுவின் இளமைப் பெயர்; "யானையுங் குதிரையுங் கழுதை யுங் கடமையு மானோடைந்துங் கன்றெனற்குரிய" என்பது, தொல் காப்பியத்து மரபியல். அடியார்களை அருளுடன் நோக்கி நோக்கிக் கண்கள் சிவந்திட்டனபோலு மென்பார், 'செங்கண்மால்' என்றார். மால் - பெருமை; அல்லது மாயை; அல்லது, அடியவர்களிடத்து மிகுந்த விருப்பம்; அதனையுடையவனுக்குப் பண்பாகுபெயர். தாமொ ருவன் கடவுளையறிந்து அன்புகூர்ந்து வணங்கி அப்பயனைத் தான் மாத்திரமே யடைதலினும் சிருஷ்டி தொடங்கித் தன் கோத்திரத்தா ரையுந் தன்னொடு கூட்டி வணங்கி அவர்க்கும் அப்பயனை அடைவித் தலே சிறந்ததெனக் கருதி, அவர்களை உளப்படுத்திய தன்மைப்பன் மையால் 'எங்கள்கோ' என்றார். ஈற்றேகாரத்தைப் பிரிநிலையாக்கி மால் என்பதனோடு கூட்டின், "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்ற படி தேவதாந்தரங்களைத் தமக்குநாயகனாகக் கொள்ளாதவர் இவ் வாசிரியரென விளங்கும். (354)

## 2.—கண்ணன் சதுர்த்தசியை அமாவாசையாக மாற்றுதல்.

கொடுத்தனன்பலிக்குத்தன்னைக்குமரனென்றறிந்துகுன்ற
மெடுத்தவன்றிதிபன்னான்கினிடையுவாவின் றுகென்று
தொடுத்தநூன்முனிவரோடுஞ்சொல்லினன்சுடர்கடம்மி
லடுத்ததிங்கென்னையென்னவன்றதுவாயதன்றே.

(இ-ள்.) 'குமரன்-(அருச்சுனனது) குமாரனை இராவான், தன்னை பலிக்கு கொடுத்தனன் - தன்னைப் பலியிடும்படி (துரியோதனனுக் குக்)கொடுத்திட்டான்,' என்று—, குன்றம் எடுத்தவன் - கண்ணன், அறிந்து—,—திதி பன்னான்கின் இடை - (அமாவாசைக்கு முந்தின தினமான) சதுர்த்தசி திதியினன்றைக்கே, இன்று உவா ஆக என்று-இன்றையதினம் அமாவாசையாகக்கடவதென்று, தொடுத்த நூல் முனிவரோடும் சொல்லினன் - (ஒன்றோடொன்று சொற்கள்) தொடரப்பெற்ற சாஸ்திரங்களை வல்ல முனிவர்களுடனே கூறியருளி னான்; (சொன்னவளவிலே), சுடர்கள் தம்மில் இங்கு அடுத்தது என்னை என்ன-சூரிய சந்திரர் தங்களுக்குள் இப்பொழுது சேர்ந்தது என்ன வென்று ஆராய்ச்சிசெய்ய, அன்று அது ஆயது - அப் பொழுது அமாவாசையாயிற்று; (எ-று.)—அன்றே - ஈற்றசை.

துரியோதனனுக்குச் சகதேவன் நாள்வைத்துக் கொடுத்ததை யும் அவனுக்கு இராவான் களப்பலிக்கு உடன்பட்டதையும் கண்ண பிரான் அறிந்து, அந்நாளை மாற்றவும், இராவானைத் தமக்காக்கிக் கொள்ளவும் கருதி, முந்தினநாளாகிய சதுர்த்தசி யன்றைக்கே அமா வாசையை வரும்படி தமது திவ்யசக்தியால் செய்து, முனிவர்கள் முதலிய பலரை நோக்கி இன்றைக்கே அமாவாசையென்று கூற, யாவருங் கண்ணன் கட்டளைப்படியே அதனைக் கொண்டாடினர்;

அப்பொழுது சூரியசந்திரர் பார்த்து, 'இதென்ன காரணம்?' என்று தமக்குள் ஆலோசித்துக் கண்ணபிரானை ஒருங்கே வந்தடைந்து 'இன்றைக்கு எப்படி அமாவாசை?' என்று வினவ, அவ் வெம்பெருமான் 'அமாவாசை யென்பது, நீங்களிரண்டுபேருங் கூடுந் தினமன்றோ? நீவிர் இருவரும் இப்பொழுது கூடிவந்த இத்தினத்தை அமாவாசையென்று சொல்லத் தடையென்ன?' என்று விடைகூற, அவர்கள் உவந்துசென்றன ரென்க.

பன்னான்கு - பதினான்கு என்பதன் மரூஉ. உவா - பதினைந்தாந் திதி. இங்கு இடத்திற்கு ஏற்ப அமாவாசை யாயிற்று. பஞ்சைக் கொண்டு நூல் நூற்கப்படுதல்போல சொற்களைக்கொண்டு அமைக்கப்படுதலாலும், மரம் முதலியவற்றின் கோணலைப் போக்கும் ஏற்று நூல்போல மனிதர்களது மனத்தின் கோணலைப் போக்குதலாலும், நூல் என்றது உவமவாகுபெயராம்; "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச், செஞ்சொற்புலவனே சேயிழையா—எஞ்சாத கையேவா யாகக் கதிரே மதியாக, மையிலா நூன் முடியுமாறு", "உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப், புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின், கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர், மனக் கோட்டந்தீர்க்குநூன் மாண்பு" என்றார், நன்னூலார்; 'இனி நூலென்றசொற்குப் பொருளுரைக்கப்படும்; — நூல்போறலின் நூலென்ப; பாவைபோல்வாளைப் பாவையென்றதுபோல. நூல்போற லென்பது-நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவல்மகடூஉத் தனது செயற்கைநலந் தோன்ற ஓரிழைப்படுத்தலாம், உலகத்து நூல்நூற்ற லென்பது; அவ்வாறே சுகிர்ந்துபரந்த சொற்பாவை களாற் பெரும்புலவன் தனது உணர்வுமாட்சியின் பிண்டம் படலம் ஒத்துச் சூத்திரமென்னும் யாப்பு நடைபடக் கோத்தலாயிற்று, நூல்செய்தலாவது: அவ்வகைநூற்கப்படுதலின், நூலெனப்பட்டது. இனி, ஒருசாரார், நூல்போலச் செப்பஞ் செய்தலின் நூலென்ப. இனி, தந்திரமென்னும் வடமொழிப்பொருளை நூலென வழங்குதல் தமிழ்வழக்கெனக் கொள்க. இது, 'நூலென்றசொற்குப் பொருள்' என்ற இறையனாரகப்பொருளுரைநடையையும் இங்கே அறிக. தொடுத்த நூல் முனிவர் என்பதற்கு - தரித்தமுப்புரிநூலையுடைய முனிவரென்றும் பொருள்கொள்ளலாம்; "நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங்காலை யந்தணர்க்குரிய" என்றார், ஆசிரியர் தொல் காப்பியனார். முநி - (கடவுளைத்) தியானஞ்செய்பவனென்றும், (முக்காலத்து) ஞானமுடையவனென்றும் பொருள்; இனி, (எல்லாப் பற்றுக்களையும்) முனிந்தவன் [வெறுத்துவிட்டவன்] ஆதலால், முனியென்று காரணப்பொருள் கூறி இது தென்மொழியென்று சாதிப்பர் ஒரு சாரார். சுடர் - ஒளி; அதனையுடைய சூரியசந்திரர்க்கு ஆகுபெயர்.

"நீதியர நின்ற பதினாலா நாள் தன்னை, யாதி யமாவாசை யாக்கலாஞ்—சோதிமதி, யாதித்தனோடே யமர்ந்திருக்கும் வேதியராற், சாதித்துக் கொள்வதுகாண் சார்வு" என்று திருவுள்ளம்பற்றி, கண்ணபிரான் பன்னீராயிரம் பிராமணர்க்கு மகாதானங்கற்பித்து

அவர்களைவரவழைத்து 'சதுர்த்தசியை அமாவாசையாக்கித் தர வேண்டும் என்றும், "தேவராவாருந் திசைபால ராவாரு, மூவராய் நிற்கின்ற மூர்த்தியுமாய்—யாவருந்தான் கொந்தலருஞ் சோலைக் குரு நாட்டுப் பூசுரர்கள், அந்தணரால்லன்றோ வவர்' என 'பிராமணருச் சரித்த மந்திரமன்றோ, தெய்வம்; உங்கள்பணி மறுக்குந் தன்மை யுடையார் யாவருமுண்டோ?' என்றும் உரைக்கக் கேட்டுஅந்தண ளர் அந்த ஸ்ரீவாசுதேவன்பணியைமறுது தலைமேற்கொண்டு ஒருங்கு கூடி அநேக மந்திரங்களை உத்கோஷித்து அமாவாசைக்குரிய சடங் குகளுடனே சூரிய சந்திரரைத்துதிக்குமளவிலே, அந்தச்சந்திராதித் தர்களுந் தம்மிற்கூடி 'இது என் கொலோ?' என்னுமளவில், சதுர்த் தசியும் அமாவாசையாயிற்று அப்பொழுது, எனப் பெருந்தேவனார் பாரதத்துக் கூறியுள்ளதனால், அதற்கு ஏற்பவே இப்பாட்டுக்குப் பொருள் கூறுதலும் பொருத்தமுடைத்தென அறிக. (355)

### 3.—கண்ணன் முதலில் தன்னைப் பலியிடும்படி தருமனுக்குக் கூறுதல்.

ஆயபின்றருமற்குற்றவாறெலாம்விளம்பியின்று
நீயவன்றனக்குமுன்னேகளங்கொளநேரினல்லாற்
போயவன்றன்னைவேறலரிதெனப்புகன்றுசெங்கண்
மாயவனென்னைவல்லேவன்பலியூட்டுகென்றான்.

(இ - ள்.) ஆய பின் - (இவ்வாறு) ஆனபின்பு [திதி மாறின பின்னர் என்றபடி], செம் கண் மாயவன் - சிவந்த திருக்கண்களையும் மாயையுமுடைய கண்ணபிரான், உற்ற ஆறு எலாம்-நடந்த செய் கைகளையெல்லாம், தருமற்கு விளம்பி-யுதிட்டிரனுக்குக் கூறி, 'நீ—, இன்று - இன்றைக்கு, அவன் தனக்கு முன்னே-அத்துரியோதனன் பலியூட்டுதற்கு முன்பே, களம் கொள - களப்பலிகொடுக்க, நேரின் அல்லால் - உடன்பட்டாலல்லாமல், போய் அவன் தன்னை வேறல் அரிது - (போரிற்) சென்று அத்துரியோதனனை வெல்லுதல் (உனக்குக்) கூடாதாம்,' என புகன்று-என்று கூறி, 'என்னை வல்லே வல் பலி ஊட்டுக' என்றான் - என்னை விரைவிலே வலிய பலியாகக் கொடுக்கக் கடவாய்' என்றுங் கூறினான்; (எ - று.)

துரியோதனன் நமக்குமுன்னே பலிகொடுத்துவிட்டால், சயம் அவனதேயாய்விடும்; ஆதலின் 'உத்தமவிலக்கணமுடையவனைப் பலிகொடுக்க வேண்டும்' என்னும் முறைமைப்படி எல்லாவிலக் கணமும் அமைந்துள்ள என்னையே இப்பொழுது துரிதமாகப் பலி கொடுத்திடுங்க ளென்று கபடமாகக் கூறியருளினான். உற்றவாறு எலாம் - சகதேவன் நாள்வைத்ததும், இராவான் துரியோதன னுக்குக் களப்பலிக்கு உடன்பட்டதும் முதலியன. களம் - களப் பலிக்கு ஆகுபெயர். கபடமாகக் கூறினது தோன்ற, மாயவன் என்றார். வல் - விரைவுகுறிக்கும் இடைச்சொல். ஏ - சாரியை: ஐகாரச் சாரியை பெற்று, 'வல்லே' என்றும் வரும். (356)

## 4 —பாண்டவர் அதுகேட்டு வருந்துதல்.

தருமனுந்தம்பிமாருஞ்சாற்றியமாற்றங்கேட்டே
யுருமெறிபுயங்கம்போலவுள்ளழிந்துள்ளாய்நின்ற
கருமுகில்வண்ணன்பாதகமலத்தில்வீழ்ந்துவாழ்வும்
பொருமுனைவயமும்வேண்டோம்பொன்றுதலமையுமென்றார்.

(இ - ள்.) (அப்பொழுது), தருமனும்—, தம்பிமாரும்-(அவனது) தம்பியாகிய வீமன்முதலிய நால்வரும், சாற்றிய மாற்றம் கேட்டே-(கண்ணன்) கூறிய அவ்வார்த்தையைக் கேட்டமாத்திரத்திலே, உரும் எறி புயங்கம் போல - இடிவிழப்பெற்ற பாம்புபோல, உள் அழிந்து-மனமழிந்து, உள் ஆய் நின்ற கருமுகில் வண்ணன் பாத கமலத்தில் வீழ்ந்து - எல்லாப் பொருள்களுள்ளும் வியாபித்து மறைந்து நின்ற காளமேகம்போலும் கரிய நிறத்தையுடைய அக் கண்ணபிரானது திருவடித்தாமரைமலர்களிலேவிழுந்துநமஸ்கரித்து. '(இனி நாங்கள்), வாழ்வும் பொரு முனை வயமும் வேண்டேம்-செல்வ வாழ்க்கையையும் போர்க்களத்து வெற்றியையும் விரும்பமாட்டோம்; பொன்றுதல் அமையும் - (நாங்கள்) இறத்தலே தகுதி', என்றார் - என்று கூறினார்கள்; (எ - று.)

உன்னைக்கொன்று பலிகொடுத்தபின் அதனால்வரும் வாழ்வும் வெற்றியும் எங்களுக்கு வேண்டா வென்றார். இங்ஙனங்கூறினது, கண்ணனை அவர்கள் தம் உயிராகப் பாவித்திருந்த மிக்க அன்புடைமையா லென்க. புயங்கம்-புஜங்கமென்பதன் திரிபு; இதற்கு-(கால்களில்லாமையால்) மார்பினால் ஊர்ந்து செல்வதென்றும், வக்கிரகதியாய்ச் செல்வதென்றும் பொருள்; புஜம் - வக்கிரம்: புஜமென்னுந் தோளின் பெயர், மார்புக்கு இலக்கணையாம். இடியோசை கேட்டமாத்திரத்திற் பாம்புகள் அஞ்சி யொடுங்கியழியும் என்பது, நூற்றுணிபு; "விரிசிற நாகம் விடருளதேனும், உருமின்கடுஞ் சினஞ் சேணின்று முட்கும்" என நாலடியாரிலும் காண்க. உள் - உள்ளிடம்; அகத்துறுப்பான மனத்துக்கு இடவாகுபெயர். சரீரத்திலுள்ள சீவான்மா இன்றியமையாததாய் மறைந்துநின்று அதனைக் கொண்டு தொழில்களையெல்லாம் நடத்துதல்போல, சர்வாந்தரியாமியாய்ப் பரமாத்மா எல்லாப் பொருள்களினுள்ளும் மறைந்து நின்று தொழில் நடத்துதலால், 'உள்ளாய் நின்ற' என விசேடித்தது; "எள்ளு மெண்ணெயும்போல், நீங்கா துலகத் துயிர்க்குயிராகி" எனத் திருவரங்கத்து மாலையிலும், "திடவிசும் பெரிவளி நீர் நிலமிவைமிசைப், படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும், உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" எனத் திருவாய்மொழியிலும் வருதல் காண்க. இனி, வண்ணம் என்பதற்கு - குணமென்று பொருள் கொண்டால், தண்மையும் கைம்மாறு கருதாது கருணைமழை பொழிதலுமாகிய இக்குணங்களிற் கருமுகிலையொப்பவன் கண்ணனென்க. பாதகமலம் - முன்பின்னாகத் தொக்குவந்த உவமைத்தொகை; வடநூல் முடிபு; பாதமாகிய கமலமென உருவகமாக்கி யுரைத்தற்கு இங்கே இயைபின்று.

(357)

## 5.—இராவான் தன்னைக் களப்பலியிடும்படி உடன்படுதல்.

அப்பொழுதரவமைந்தனரவுயர்த்தவற்குநேர்ந்தேன்
இப்பொழுதுமக்குநேர்ந்தேனெனைப்பலியிடுமினென்ன
மைப்புயல்வண்ணனின்னையல்லதுமண்ணிலென்னை
யொப்பவரில்லைநம்மிலொருவரேவேண்டுமென்றான்.

(இ - ள்.) (அப்பொழுது), அரவம் மைந்தன் - நாககன்னிகை குமாரனான இராவான், 'அரவு உயர்த்தவற்கு அப்பொழுது நேர்ந்தேன் - பாம்புக் கொடியை உயர எடுத்துள்ள துரியோதனனுக்கு (அவன் என்னை வேண்டிக்கொண்ட) அச்சமயத்தில் (பலிக்கு) உடன்பட்டேன்; உமக்கு இப்பொழுது நேர்ந்தேன் - உங்களுக்கு இப்பொழுது (பலிக்கு) உடன்படுகிறேன்; (ஆதலால்), எனை பலி இடுமின் - என்னைப் பலியிடுங்கள்,' என்ன - என்றுகூற,—(அதுகேட்டு), மை புயல் வண்ணன் - கரிய மேகம்போலுந் திருமேனி நிறமுடைய கண்ணன், 'நின்னை அல்லது மண்ணில் என்னை ஒப்பவர் இல்லை - உன்னைத்தவிர உலகத்தில் என்னை யொக்குந் தன்மையார் வேறு எவரும் இல்லை; (ஆதலின்), நம்மில் ஒருவரே வேண்டும் - (ஒத்த உத்தமவிலக்கணமுடைய) நம்மிருவருள் ஒருவரே பலியாகவேண்டும்,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

அமாவாசையில் தான் பலியாவதாக முன்பு துரியோதனனுக்கு வாக்களித்தபடி அமாவாசை வந்தும் பலிகொடுத்தற்குத் துரியோதனன் வரக் காணாமையால், இராவான் இப்பொழுது பாண்டவர்க்குப் பலிக்கு உடன்பட்டான். மைப்புயல் - உம்மைத்தொகையாய், மைப் புயல் வண்ணன் - அஞ்சனமும் மேகமும் போலும் வர்ணமுடையவனென்றுங் கொள்ளலாம். வேண்டும் - ஒருவகை வியங்கோள்: இது, நச்சினார்க்கினியர் கருத்து; இதற்கு - வெவ்வேறு பலவகையாகப் பிற ஆசிரியர் இலக்கணங் கூறுவாராயினும், வியங்கோளென்றலே தகுதியுடையதெனத் தோன்றுகிறது. (358)

## 6.—இராவான் கண்ணனிடம் தான் சிலநாள் வரையில் உயிரோடிருக்கும்படி வரம் வேண்டுதல்.

அடியனேனிருக்கநீயேயரும்பலிக்கிசைவாய்போரின்
மடியநேரலரைக்கொன்றுவாழ்விவர்க்களிக்கநின்றாய்
கடியநேர்பலிதந்தாலுங்காயமர்சிலநாட்கண்டு
முடியநேரலர்வெம்போரின்முடிவெனக்கருளுகென்றான்.

(இ - ள்.) (அதற்கு இராவான்), 'போரில் - யுத்தத்திலே, மடிய - அழியும்படி, நேரலரை - பகைவர்களை, கொன்று—, இவர்க்கு - இப்பாண்டவர்க்கு, வாழ்வு அளிக்க நின்றாய் - செல்வ வாழ்க்கையைக் கொடுத்தருள நின்றவனே! அடியனேன் இருக்க - அடியேனை (பலிசெலுத்தத்தக்கவனாக) இருக்கையில், நீயே அரு பலிக்கு இசைவாய் - நீயோ அரிய பலி செலுத்தப்படுதற்கு உடன்படுவாய்? [நீ பலியா

தற்கு இசையவேண்டுவது இல்லை]; (ஆனால்), நேர் பலி கடிய தந்தாலும் - ஏற்ற பலியாக (என்னை) விரைவிற்கொடுத்திட்டாலும், காய் அமர் சில நாள் கண்டு - உக்கிரமான போரைச் சில தினங்களில் (அடியேன்) பார்த்து, நேரலர் முடிய - (பல) பகைவர்கள் அழிய, (அதன்பின்), வெம்போரில் முடிவு எனக்கு அருளுக-கொடியபோரில் இறந்தொழியும் வரத்தை எனக்குத் தந்தருளுவாயாக,' என்றான் - என்று பிரார்த்தித்தான்; (எ - று.)

இராவான் பலவடிவங்கொண்டு போர்செய்து வென்று முடிவில் பகாசுரனது தம்பியான அலம்புசனென்பவனால் இறந்தானென்பர், மேல் எட்டாம் போர்ச்சருக்கத்தில். அடியனேன் - உனக்கு அடியவனாகிய யான்; அடிமையென்னும் பண்பினடியாய் பிறந்த தன்மையொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். நீயே என்ற ஏகாரம்- வினாவகையால், நீ பலிக்கு இசையத்தக்கவனல்லனென்ற எதிர் மறைப் பொருளைக்குறிக்கும். 'நீயேன்' என்ற பாடமுங் கொள்ளலாம். நேரலர் - தம்மொடு இணங்காதவர். காயமர் - (பகைவரைக்) காயும் அமரென வினைத்தொகை; காய்தல் - சிறியொழித்தல். இரட்டுற மொழிதலால், கண்டு என்பதற்கு - செய்து என்றும் பொருள். (359)

7.—இராவான் போர்க்களத்திற் சென்று காளியினெதிரில் தானே தனது உறுப்புக்களை அறுத்துப் பலியிடுதல்.

அவ்வரமவற்குநல்கியத்தினத்தவ்விராவிற்
றெவ்வரையொளித்துத்தங்கள்சென்மதேயத்திற்சென்றார்
மெய்வருகாளிமுன்னர்மெய்யுறுப்பனைத்தும்வீரன்
கொய்வருநிலையிற்கொய்துகொடுத்தனனென்பமன்னோ.

(இ - ள்.) (கண்ணபிரான்), அ வரம்-அந்த வரத்தை, அவற்கு- அவ்விராவானுக்கு, நல்கி - கொடுத்தருளியபின்பு, (பாண்டவர்கள்), அ தினத்து - அந்த மாறுபட்ட அமாவாசை நாளில், அ இராவில்- அந்த இராத்திரியிலே, தெவ்வரை ஒளித்து - பகைவர்களான துரியோதனாதியர்களுக்குத் தெரியாதபடி, தங்கள் சென்மதேயத்தில் சென்றார் - தங்களது பிறப்பிடமான குருநாட்டிற் போய்ச் சேர்ந்தார்கள்; (அந்தநாளிரவிலேயே), வீரன் - சுத்த வீரனான இராவான், மெய் வரு காளி முன்னர் - (போர்க்களத்துக்கு உரிய தெய்வமான) உண்மை பொருந்தின காளியினெதிரில், மெய் உறுப்பு அனைத்தும் - (தனது) உடம்பின் அவயவங்களையெல்லாம், கொய் வரு நிலையின் கொய்து - அறுக்கவேண்டிய முறைமைப்படி (தானே வாளால்) அறுத்து, கொடுத்தனன் - பலிகொடுத்தான்; (எ - று.) என்ப - அசை; மன், ஓ - ஈற்றசைகள்.

கொய்வு அரு நிலையின் எனப் பிரித்து-(பிறர்க்கு) அறுத்தற்கு அருமையான முறையின் என்றுங் கொள்ளலாம்; மிகக் கொடிதாக என்று கருத்து. வீரனாதலின் இங்ஙனங் கொய்தனனென்பார்,

'வீரன் கொய்து கொடுத்தனன்' என்றார். நல்கி - நல்கவென்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு; செய்தெனெச்சம் வேறு கருத்தாவின் வினையைக்கொண்டு முடிதற்கு ஏலாதாதலால், இங்குப் பாண்டவர் வினையாகிய சென்றார் என்பதைக் கொண்டு முடியும். காளி - துர்க்கை: பார்வதியின் அம்சமான பெண்தெய்வம். காளியென்னுஞ் சொல்லுக்குக் கருநிறமுடையவளென்று பொருள்; காளம்-கருமை. தெவ்வரை ஒளித்து - தெவ்வர்க்கு ஒளித்து என உருபுமயக்கமாகக் கொள்க. மெய் வரு - வடிவம் பொருந்தி விளங்குகிற என்றுமாம். இவ்வடைமொழியை வீரனுக்குக் கூட்டி, சத்தியந்தவறாத இராவானெனினும் அமையும். நிலையில்லாமையாற் பொய்யாகிய உடம்பை மெய்யென்பது - மங்கலவழக்கு. என்ப என்னும் அசையைச் சீவகசிந்தாமணியுரையில் "கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங், கிளந்தவற்றியலானுணர்ந்தனர் கொளலே" என்னுந் தொல்காப்பியப்புறனடைச்சூத்திரத்தாற் கொள்க என்பர் நச்சினார்க்கினியர். (360)

## 8.—பாண்டவர் மற்றும் சிலபலிகளிட்டு வரம் வேண்டி வருதல்.

ஆண்டகைகன்னிமுன்னரவயவமனைத்துமீந்து
காண்டகமலர்ந்ததீபமெனமுகங்கவினநின்றான்
பாண்டவர்யாமளத்தின்படிபகடாதியாக
வேண்டியபலிகளீந்துவென்றியும்வேண்டிமீண்டார்.

(இ - ள்.) ஆண் தகை - ஆண்மைக்குணத்தை யுடைய இராவான், கன்னி முன்னர் - காளியின் முன்னிலையில், அவயவம் அனைத்தும் ஈந்து - உறுப்புக்களையெல்லாம் அறுத்துப் பலிகொடுத்து, காண் தக மலர்ந்த தீபம் என முகம் கவின - (யாவரும்) காணத்தகுமாறு (அழகியதாய்) விளங்குகிற விளக்குப்போலத் தன் முகம் ஒளிபெற்று விளங்க, நின்றான்-(சிறிதுந் துயரமின்றி மகிழ்ந்து) நின்றான்; (அதன்பின்), பாண்டவர்-பாண்டுகுமாரர் ஐவரும், யாமளத்தின்படி-யாமளநூல் முறைமைப்படி, பகடு ஆதி ஆக - யானை முதலாக, வேண்டிய பலிகள் ஈந்து - இன்றியமையாத பலிகளைக் கொடுத்து, வென்றியும் வேண்டி - (தமது) சயத்தையும் பிரார்த்தித்து. மீண்டார் - திரும்பினார்கள்; (எ - று.)

கீழ்க்கவிகளின் பின்னிரண்டடிகளிற் கூறிய கருத்தையே இக்கவியின் முன்னிரண்டடிகளில் மீண்டும் எடுத்து அநுவதித்துக்கூறியது, அப்பொழுது அவன் சிறிதும் வருந்தாது முகமலர்ந்திருந்த சிறப்பை விளக்கவேண்டியாதலின், கூறியது கூறலாகாது. 'நீபமென' என்ற பாடத்துக்கு—காண்டகம் - காட்டிலே, மலர்ந்த - பூத்த, நீபம் என - கடப்பமரம் போல வென்க; அதன் மலர்கள் மிக்க செந்நிறமாய் எங்கும் விளங்குதல் போல, இவனுடம்பு முழுவதும் இரத்தப்பெருக்காற் சிவந்து நிற்க வென்றவாறு. யாமளையென்று காளிக்குப் பெயராதலால், யாமளமென்பது - அவளுக்குப் பலி கொடுத்தல் முதலியவற்றைக் கூறும் நூலைக் குறிக்கும்: அது

அதர்வண வேதத்தின் ஒரு பகுதிபோலும். "அருத நடிப்பன அலகைகள் பாடுவ யாமள வாரணமே" என்பர் மேற்பதினெரும் போர்ச் சருக்கத்தும். ஆண்டகை - பண்புத்தொகையன்மொழி. கன்னி-கந்யா என்பதன் திரிபு; இளமகளென்று பொருள். பகடு - யானை எருமை பசு இவற்றின் ஆண்பாற்பெயர். ஈங்கு, எருமைக் கடா என்னலுமாம். 'ஈர்ந்து' என்றும் பாடம். (361)

களப்பலியூட்டு சருக்கம் முற்றிற்று.

---

எட்டாவது

## அணிவகுப்புச் சருக்கம்.

பாண்டவருந் துரியோதனனதியருந் தத்தஞ்சேனைகளைப்பகுத்து ஒழுங்குபடுத்திப் போருக்குச் சித்தஞ்செய்யுஞ் செய்தியைக் கூறும் பாகம். அணி - வரிசை. வகுப்பு - வகுத்தல். தொழிற்பெயர்: பு - விகுதி. இச்சருக்கத்தில், முதற்பதினைறு கவிகள்-பாண்டவர் அணி வகுத்தலையும், பின்பதினெட்டுக் கவிகள் துரியோதனனதியர் அணி வகுத்தலையும் கூறும்.

இந்தச் சருக்கத்திற் கடவுள் வாழ்த்துச் செய்யுள் காணப்பட வில்லை; மாநஸிகமாத்திரமாகக் கடவுள்வணக்கம் நிகழ்ந்துவிட்ட தென்றுவது, கடவுள் வாழ்த்தாக நூலாசிரியராற் பாடப்பட்ட தொரு செய்யுள் பிறகாலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாது விடப் பட்டு ஒழிந்த தென்றுவது, இச்சருக்கத்து முதற்செய்யுளில் போரு க்குச் செல்லவேண்டும் வகையைக் கண்ணன் சுவேதனுக்குக் கூறினு னென்பதுவே வஸ்துநிர்த்தேசரூபமான மங்களமாக ஆசிரியரால் கருதப்பட்ட தென்றுவது கொள்க.

வேறு.

### 1.—கண்ணன் படையெடுத்துச் செல்லும்படி சுவேதனுக்குக் கட்டளையிடுதல்.

மற்றைநாள்வசுதேவன்மாமகன்மண்டலீகருமன்னருஞ்
செற்றுநீடவைபுக்கிருந்தசிவேதனேடிவைசெப்பினன்
இற்றைநாளதிரதர்மகாரதர்சமரதாதியரெவரொடுங்
கொற்றவஞ்சிமிலைச்சியேகுககுருநிலத்திடையென்னவே.

(இ - ள்.) மற்றை நாள் - மறுநாள் உதயத்திலே, வசுதேவன் மாமகன்-வசுதேவனது சிறந்த குமாரனான கண்ணபிரான், மண்டலீ கரும் மன்னரும் செற்றும் நீடு அவை புக்கு - மண்டலாதிபதிகளான அரசர்களும் (மற்றும் பல வகையான) அரசர்களும் நெருங்கியுள்ள பெரிய பாண்டவ சபையிற்சென்று, இருந்த சிவேதனோடு - (அங்கு வந்து) வீற்றிருந்த (பாண்டவ சேனாதிபதியான) சுவேதனுடனே,

'இற்றை நாள் - இன்றையதினம், அதிரதர் மகாரதர் சமரதஆதியர் எவரொடும் - அதிரதர் மகாரதர் சமரதர் முதலியோரான எல்லாரோடும், கொற்றம் வஞ்சி மிலைச்சி - வெற்றியைக் கொடுப்பதான வஞ்சி மாலையைச் சூடி, குரு நிலத்திடை ஏகுக - குருக்ஷேத்திரத்திற் (போருக்குப் புறப்பட்டுச்) செல்வாயாக,' என்ன- என்று, இவை செப்பினன் - இவ்வார்த்தைகளைக் கூறியனுப்பினன்; (எ - று.)

வசுதேவன் கண்ணனைப் பெற்ற தந்தை; தேவகியின் கணவன். 'ஆதியர்' என்றது, அர்த்தரதரை. அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர் எனத் தேர்வீரர் நால்வகைப்படுவர். அதிரதர் - முழுத் தேரரசர்; அவராவார் - தாம் ஒரு தேரில் ஏறி நின்று தம் தேர் குதிரை சாரதிகளுக்கு அழிவுவராமற் காத்துப் பலவாயிரந் தேர்வீரரோடு எதிர்த்து வேறு துணையில்லாமலே போர் செய்து வெல்லும் வல்லமையுடையார். அவரிற் சிறிது தாழ்ந்தவர் - மகாரதர் இவர் பதினோராயிரந் தேர்வீரரோடு பொருபவர். சமரதர்-ஒரு தேர் வீரனொடு தாமும் ஒருவராய் எதிர்க்க வல்லவர். அர்த்தரதர்-அவ்வாறு எதிர்க்குமளவில் தம் தேர் முதலியவற்றை இழந்து போம்படியானவர்; இவர் இருவர் சேர்ந்தால் ஒரு சமரதனுக்கு ஒப்பாவர். வஞ்சிப் பூ மாலை - பகைவர் மேற் பொரச் செல்வோர் அணிவதற்கு உரியது. 'இருந்து' என்றும் பாடம்.

இது முதற் பதினாறுகவிகள் - பெரும்பாலும் முதல் மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (362)

2.—இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: பாண்டவர் சேனைவீரரைச் சுவேதன் வகுத்தமையைக் கூறும்.

அதிரதாதிபர்தானும்வீமனும்விசயனுந்திறலபிமனுஞ்
சிதைவிலாதசிகண்டிசாத்தகிதிட்டத்துய்மன்விராடர்கோன்
மதுரமாமொழிதருமனோடிவர்மாரதாதிபர்சமரதப்
பதிகளானவர்யாகசேனனுதாமனுத்தமபானுவே.

(இ - ள்.) தானும் - சுவேதனும், வீமனும் - வீமசேனனும், விசயனும்-அர்ச்சுனனும், திறல் அபிமனும் - போர் வல்லமையுடைய அபிமந்யுவும், (என்னும் இவர்), அதிரத அதிபர் - அதிரதத்தலைவர்களாகவும், சிதைவு இலாத-(போரில்) வலியழிதலில்லாத, சிகண்டி—, சாத்தகி—, திட்ட துய்மன்—,விராடர்கோன்-விராடராசன், மதுரம் ஆ மொழி தருமனோடு - இனிமையாகப் பேசுகிற யுதிட்டிரனுடன், இவர் - இவர்கள், மாரத அதிபர் - மகாரதத் தலைவர்களாகவும், யாகசேனன்-துருபதராஜன், உதாமன் - யுதாமந்யு, உத்தமபானு - உத்தமௌசா, (என்னும் இவர்), சமரதர் பதிகள் ஆனவர்-சமரதத் தலைவர்களாகவும்; (எ - று.) மேற்கவியிலுள்ள 'ஆக' என்பது, ஈண்டும் ஆங்காங்கு எடுத்துக் கூட்டத்தக்கது.

வீமன் - பீமன்; பகைவர்க்குப் பயங்கரனானவனென்று பொருள். விசயன், பற்குனன், பார்த்தன், கிரீடி, சுவேதவாகனன், பீபற்சு, கிருஷ்ணன், சவ்வியசாசி, தனஞ்சயன், பாகசாஸநி, நரன், ஜிஷ்ணு

என்பன - அருச்சுனனது மறு பெயர்களாம்; "பார்த்த னருச்சுனன் கரியோன் விசயன் பாகசாதனி சவ்வியசாசி பற்குனன் பா, ரேத்து தனஞ்சயன் கிரீடி சுவேத வாகனென்று நாமம் படைத்த பிரான்" எனக் கீழ்த் தீர்த்தயாத்திரைச் சருக்கத்துக் கூறியதைக் காண்க. விசயன் - விசேஷமான வெற்றியை யுடையவன்; இராசசூய யாகத்திற்காக வடக்கிற் சென்று பல அரசர்களைச் சயித்ததனாலும், காண்டவதகன காலத்துத் தேவர்களை வென்றதனாலும், பாசுபதம் பெறுங்காலத்துப் பரமசிவனை யெதிர்த்து விற்கழுந்தால் முடியிலடித்ததனாலும், பின்பு தேவர்க்குப் பகைவராகிய நிவாதகவசர் காலகேயர்களை வதைத்ததனாலும், இவை முதலிய வெற்றிகளால் இவனுக்கு இப் பெயர் அமைந்தது. இனி, விசயன் - தன்னைச் சயிப்பார் எவருமில்லாதவனென்றுமாம்; "பயிற்றிய படையால் வாகுவலியினாற் பாரிலென்னைச், செயித்தவரிலாத பண்பால் விசயனா நாமஞ் செய்தார்" என்றார் நல்லாப்பிள்ளை பாரதத்தும். முன்னைய பொருளில், வி - விசேஷமும், பின்னைய பொருளில் வி - எதிர்மறையுங் குறிப்பனவாம். இருபொருளிலும், சயம் - வெற்றி. மற்றைய பெயர்களின் பொருட்காரணம் அவ்வப்பெயர் வருமிடத்துக் கூறப்படும். பிராயத்திலிளையனாயினும் போரில் இளையானென்பார், 'திறலபிமன்' என்றார். யதுகுலத்தரசர்களுள் வசுதேவனுக்கு உடன்பிறந்த முறையாகிற சத்யகனது குமாரனான சாத்யகி, பிராயத்தில் கண்ணனினும் இளையவனாதலால், கண்ணனுக்குத் தம்பி முறையாவன். சாத்தகி - ஸாத்யகி யென்னும் தத்திதாந்தநாமம் திரிந்தது; இவன் - இலக்குமணன் இராமனிடத்திற்போலக் கண்ணனிடம் மிகுந்த அன்புகொண்டு அவனது கருத்துக்குச் சிறிதும் மாறுபடாது நடப்பவன்; அன்றியும், இவன் அருச்சுனனிடம் வில்வித்தையைக் கற்றறிந்த மாணாக்கனாதலால், ஆசிரியனாகிய அருச்சுனனிடத்தும் மற்றைப் பாண்டவரிடத்தும் அன்பு கொண்டு ஒழுகுபவன். விராடர்கோன் - விராடதேசத்திலுள்ளார்க்குத் தலைவன். மொழிதருமன் - வினைத்தொகை. மதுரம் ஆம் மொழி யென்றாவது, மதுரம் மா மொழியென்றாவது பிரித்து, இனிமையான சிறந்த சொற்களையுடைய எனப் பொருள்கொள்ளின், இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன்தொக்க தொகையாதலால், மொழித்தருமனென வலி மிக்கே வருமென்க. உத்தமோஜா- உத்தம ஓஜஸ் எனப் பிரிந்து, மேலான ஒளியையுடையானெனப் பொருள்படும்; அப்பெயரின் பொருள்பற்றி, உத்தமபானு என்றார்; பானு - ஒளி. சிகண்டி முதலியனவும், யாகசேனன் முதலியனவும் - எண்ணும்மை தொக்கதனால் பெயர்ச்செவ்வெண். (363)

3. நண்ணுமர்த்ரதர்க்குநாயகர்நகுலனுஞ்சகதேவனும், எண்ணும்வெற்றிபெறுங்கடோற்கசனென்னும்வீரனுமாகவே, மண்ணகத்தணியணிகளாகமகீபர்தம்மைவகுத்துளான், விண்ணகத்தணிவிபுதர்சேனையில்வேளொடொத்தவன்வீரனே.

(இ - ள்.) நகுலனும்—, சகதேவனும்—, எண்ணும் வெற்றி பெறும் - (யாவராலும்) நன்குமதித்துக் கருதப்படுகிற சயத்தை

அடையவல்ல, கடோற்கசன் என்னும் வீரனும்—, நண்ணும் அர்த்தரதர்க்கு நாயகர் ஆக-பொருந்தின அர்த்தரதத் தலைவர்களாகவும், மண் அகத்து மகீபர் தம்மை - நிலவுலகத்து அரசர்களையெல்லாம், அணி அணிகள் ஆக வகுத்துளான்-இனமினமாகப் பிரித்திட்டான்; (யாவனெனில்), விண் அகத்து அணி விபுதர் சேனையில் வேளொடு ஒத்தனன் வீரன் - சுவர்க்கலோகத்திற்குப் பொருந்தின தேவர்களுடைய சேனையில் தலைவனாகவுள்ள சுப்பிரமணியக் கடவுளோடு ஒத்த பலபராக்கிரமசாலியான சுவேதராசன்; (எ - று.)

எண்ணும் வெற்றி பெறும் - தான் மனத்தில் நினைக்குஞ் சயத்தை நினைத்தவாறே பெறத்தக்க என்றுமாம். விபுதர் - விசேஷ புத்தியுடையோர்: தேவர்க்குப் 'புலவர்' என்றதொரு தமிழ்ப்பெயருங் காண்க. மஹீ - பூமி; பெரியது. வேள் என்னும் பகுதிக்கு - விரும்புதலென்று பொருளாதலால், யாவராலும் விரும்பப்படுங் கட்டழகுடைய மன்மதனுக்கும், முருகனுக்கும், வேள் என்பது - காரணபெயர். இங்கே காமவேளை விலக்குதற்கு, 'விபுதர் சேனையில் வேள்' என்றார். தேவாமிசமான பாண்டவரது சேனைக்குத் தலைவனாதலால் சுவேதனுக்குத் தேவசேனாதிபதியை உவமை கூறினார். (364)

### 4.—பாண்டவரும் கண்ணனும் போர்க்குச் சித்தஞ் செய்ய, பலராமன் தீர்த்தயாத்திரை செல்லத் தொடங்குதல்.

நெருங்குவெம்படைகண்டுவந்தபினைம்புலன்களுநெஞ்சமும்
ஒருங்குசென்றெனமன்னரைவருமாலும்வெஞ்சமமுன்னவே
மருங்குநின்றவிராமனும்பின்மதித்தபோர்முடிவளவும்யான்
பொருங்கடும்புனனதிகளாடுவனென்றுநண்பொடுபோயினான்.

(இ - ள்.) நெருங்கு வெம் படை கண்டு - (இங்ஙனம் அணிவகுக்கப்பட்டு) நெருங்கின உக்கிரமான சேனையைப் பார்த்து, உவந்தபின் - மகிழ்ந்த பின்பு, ஐம்புலன்களும் நெஞ்சமும் ஒருங்கு சென்று என - பஞ்ச இந்திரியங்களும் மனமும் ஒருமித்துப் போனாற்போல, மன்னர் ஐவரும் மாலும் - பஞ்சபாண்டவர்களுங் கண்ணனும், (ஒருமித்து), வெம் சமம் உன்ன - கொடிய போரைக் குறித்து நிற்க,—மருங்கு நின்ற இராமனும் - பக்கத்திலேயிருந்த பலராமபிரானும், பின்-பின்பு, 'மதித்த போர் முடிவு அளவும் - (நீங்கள்) நினைத்த யுத்தம்முடிகிற வரையிலும், யான்—, பொரும் கடு புனல் நதிகள் ஆடுவன் - (அலை) மோதும் விரைவான புண்ணிய தீர்த்தத்தையுடைய ஆறுகளிலே (சென்று) நீராடுவேன்,' என்று - என்று சொல்லி, நண்பொடு போயினான் - (யாவரிடத்துஞ்) சினேகமாகவே போயருளினான்; (எ - று.)

"களியிரு முந்நீ ருடுத்தமா நிலமு நானிலம் பொறுத்தவாளரவு, நெளியமா கடலந் தானைவந் தீண்ட நெய்ம்முகங் கமழும்வேலைவர்க், களையுறையரவ முயர்த்தவ னொடுபோ ரடுத்திட நடுநிலை யமைந்த, வளைமருள் மேனி யொருகுழை யொருவன் வண்புனலாட்டின்மே லெழுந்தான்" என்றார், ஸ்ரீபாகவதத்தும். பலராமன் - கண்ணனுக்குத் தமையன்: திருமாலின் எட்டாம் அவதாரம்; இவனிடத்து ஆதி

சேஷனது அம்சமுங் கலந்திருந்தது. வசுதேவனுடைய பத்தினிகளுள் தேவகியின் கருப்பத்தில் ஆறுமாசமும், ரோகிணியின் கருப்பத்தில் ஆறுமாசமும் இருந்து பிறந்தவன், இவன். இவனிடந் துரியோதனன் கதாயுதப்பயிற்சியை விசேஷமாகக் கற்றுக் கொண்டதுபற்றி, இவனுக்குத் துரியோதனனிடம் பக்ஷபாதமுண்டு: தனது தங்கையான சுபத்திரையைத் துரியோதனனுக்குந் தனது மகளான வற்சலையைத் துரியோதனனது மகனான லக்ஷணகுமாரனுக்கும் மணஞ்செய்விக்கக் கருதியிருந்த எண்ணம் நிறைவேறாதபடி, கிருஷ்ணன் சுபத்திரையை அருச்சுனனுக்கும் வற்சலையை அருச்சுன குமாரனை அபிமந்யுவுக்குந் தந்திரமாக மணஞ் செய்துவைத்தும், இவனுக்குப் பழைய அபிமானந் துரியோதனனிடத்தில் நீங்காதிருந்தது; அங்ஙனமிருந்தும் பாண்டவசகாயனான கண்ணனுக்கு மாறாகத் தான் எதிர்ப்பக்கத்திலிருந்து போர்செய்தல் தகாதென்றும் துரியோதனனழிதலைத் தான் அருகிலிருந்து கண்ணுற்பார்க்க மனமில்லாமலும் புறப்பட்டுத் தீர்த்தயாத்திரை போய்விட்டனன் இவனென்க. "உலகின்னதெனல் பொய்ம்மையல வங்கவ ரடங்கவுயிர் நீங்குவது திண்ணமினியான், பன்னரவகேதனன் விளிந்திடுத லென்விழி படாதகல்வ னீர்படியவே" என்றார் நல்லாப்பிள்ளை பாரதத்தில்.

"நயனங்கள் முதலான வைம்புலனு மனமும்போ னகரிவெய்திப், பயன்விஞ்சு தொழிலினராய்ப் பாண்டவரும் திருமாலும் பயிலும் வேலை" எனக் கீழ் இராசசூயச்சருக்கத்திலும் பஞ்சபாண்டவர்க்குப் பஞ்சேந்திரியங்களும், கண்ணனுக்கு மனமும் உவமை கூறப்பட்டவாறு காண்க. பஞ்ச இந்திரியங்களைக்கொண்டு தொழில் நடத்துவது மனமேயாதல்போல, பஞ்சபாண்டவர்களைக்கொண்டு தொழில்நடத்துபவன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியே யாதலால், இவ்வுவமை ஏற்கும். ஐம்புலன்கள் ஐவர்க்கும், நெஞ்சம் மாலுக்கும் உவமையாக முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். ஐம்பொறிகள் - மெய் வாய் கண் மூக்கு செவி என்பன: அவற்றின் புலன்கள் - முறையே ஸ்பர்சம் ரஸம் ரூபம் கந்தம் சப்தம் என்பன; ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை எனப்படும். ஒருங்கு - இடைச்சொல். 'முன்ன' எனப் பிரித்து உரைத்தல் மோனைத் தொடைக்குப் பொருந்தாதாம். 'பின் மதித்த போர்' என எடுத்து, தனக்குப்பின் பிறந்த [தம்பியான] கண்ணன் நடத்தக்கருதின போரென்று உரைப்பாருமுளர்; அவ்வுரைக்கு, பின் - காலவாகுபெயராம். கடும்புனல் என்பதில், கடுமை யென்னும் பண்புப்பெயர் விகாரப்பட்டதென்றாவது, கடியென்னும் உரிச்சொல் ஈறுதிரிந்ததென்றாவது கொள்க. இங்கே 'நதிகள்' என்றது, மற்றைப் புண்ணிய தீர்த்தங்களுக்கும் உபலக்ஷணம். நண்பொடு - பக்ஷபாதமில்லாமல் நடுவுநிலைமையாகவே யென்றபடி. ()

### 5.—பலராமனும் விதுரனும் பலதேயங்களில் தீர்த்தயாத்திரைக்குச் செல்லுதல்.

போனவெம்பலபத்திரன்பொருபூசலிற்புகுதேனெனு
மானவெஞ்சிலைமுன்னிறுத்தவிதுரனோடுமகிழ்ந்துபோய்க்
கானகங்களில்வரையில்வாழ்முனிகணம்விரைந்தெதிர்கொள்ளவே
தானமெங்கணுமாடுவானிருநாலுதிக்கினுநண்ணினான்.

(இ - ள்.) போன - (இவ்வாறு) புறப்பட்டுச்சென்ற, வெம் - (பகைவர்க்குக்) கொடிய, பலபத்திரன் - பலராமன், பொரு பூசலில் புகுதேன் எனு மானம் வெம் சிலை முன் இறுத்த விதுரனோடு - 'எதிர்க்கிற யுத்தத்தில் (எவர்பக்கத்துஞ்) சேர்ந்து போர் செய்யமாட்டேன்' என்று (தன்போலவே) கூறிப் பெருமையையுடைய கொடிய வில்லை முன்னமே முறித்துப்போகட்ட விதுரனுடனே, மகிழ்ந்து போய் - மனமுவந்து சென்று, கான் அகங்களில் வரையில் வாழ் முனி கணம் விரைந்து எதிர்கொள்ள - காட்டினிடங்களிலும் மலைகளிலும் வசிக்கிற முனிவர்கூட்டம் (ஆங்காங்கு) விரைந்து வந்து (தம்மை) எதிர்கொண்டு உபசரிக்க, எங்கணும் நானம் ஆடுவான் - எல்லாவிடங்களிலும் [புண்ணிய தீர்த்தங்களிலெல்லாம்] ஸ்நானஞ் செய்யும்பொருட்டு, இரு நாலு திக்கினும் நண்ணினன் - எட்டுத் திக்குகளிலுஞ் சேர்ந்தான்; (எ - று.)

பலபத்திரன் என்பதற்கு - வலிமையாற் சிறந்தவனென்று பொருள்; பத்ரன் - சிரேஷ்டன். கீழ்க் கிருட்டிணன்தூதுசருக்கத்தில் கூறியபடி, "வில்லிரண்டினு மியர்ந்த வில்"லாதலால், 'மான வெஞ்சிலை' எனப்பட்டது. கானகங்களில் வரையில் வாழ்முனிகணம் விரைந்து எதிர்கொள்ள-"மலர்தலையுலகமேத்து மாதவக் கிழவரெல்லாம், இலை விரி சாலை நின்று மெழுந்தன ரெதிர்கொண்டாரால்" எனப்பாகவதத்துக் கூறுமாறுங் காண்க. வரையென்னுங் கணுவின் பெயர், அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயராய், அது பின் அம் மூங்கில் விளையும் மலைக்குத் தானியாகுபெயராதலால், இருமடியாகுபெயர். (366)

6.—இதுமுதல் நான்குகவிகளால், பாண்டவர்பக்கத்தில் அணிவகுக்கப்பட்டு நின்ற சதுரங்கசேனைகளை முறையே வருணிக்கிறார்: அவற்றுள், இது – யானை வருணனை.

இடிபடப்படவருமுகிற்குலமெனநிரைக்கடலெனநெடுங்
கடிபடப்படவதிர்பணைக்குலமெனவதிர்ப்பனகறைகள்போ
லடிபடப்படவுரகர்பைத்தலையணிமணிக்கணமடையவும்
பொடிபடப்படவுடனடப்பனபுகர்முகக்கரிநிகரமே.

(இ - ள்.) புகர் முகம் - செம்புள்ளிகளையுடைய முகத்தையுடைய, கரி - யானைகளின், நிகரம் - கூட்டம்,—இடி பட பட வரும் முகில் குலம் என - இடிகள் மிகுதியாகஉண்டாக (நீருண்டு மழை பெய்ய) வருகிற காளமேகங்களின் கூட்டம் போலவும், நிரை கடல் என - வரிசையாகப் பொங்கிவருகிற கடல்கள் போலவும், நெடு கடி பட பட அதிர் பணை குலம் என - மிக்க ஓசை மேன்மேல் உண்டாக முழங்குகிற வாத்தியங்களின் கூட்டம் போலவும், அதிர்ப்பன-பிளிறுவன; கறைகள்போல் அடி பட பட - உரல்கள்போன்ற (தமது) கால்கள் (அடியெடுத்துவைக்குந்தோறும்) மேன்மேற்படுதலால், உரகர் பை தலை அணி மணி கணம் அடையவும் பொடி பட பட - (கீழுலகத்திலுள்ள) நாகரது படத்தையுடைய தலையிற் பொருந்தி

யுள்ள மாணிக்கங்களின் கூட்டமெல்லாம் மிகப் பொடியாகும்படி, உடன் நடப்பன - விரைந்து செல்வன; (எ - று.)

முன்னிரண்டடி - உவமையணி. படப்பட - அடுக்குகள், மிகுதிப் பொருளன. கடி - பலபொருளுணர்த்தும் உரிச்சொல்; "கடியென் கிளவி காப்பே கூர்மை, விரையே விளக்க மச்சஞ் சிறப்பே, விரைவே மிகுதி புதுமையார்த்தல், வரைவே மன்றல் கரிப்பின்றும்" என்பது நன்னூல். நெடுங்கடி - மிக்க தூரத்துஞ் சென்றொலிக்கும் ஓசை. இனி, கடியென்பதைக் கடிப்பு என்பதன் விகார மெனக்கொண்டு, பெரிய குறுந்தடி யெனினும் அமையும். உரல் - யானைக்காலுக்கு, வடிவாலும் வலிமையாலும் உவமம்: "உரற்கால் யானை" என்றார் முன்னோரும். இனி கறைகள்போல் நடப்பன என இயைத்து, கறுத்த இருட்டொகுதிபோல நடப்பன வென்று உரைப்பாரு முளர். பின்னிரண்டடிகளில் யானைகள் அடிவைக்கும் வன்மை யால் கீழுள்ள நாகர்களது தலைமணிகள் பொடியாகுமென்றது-தொடர்புயர்வுநவிற்சியணி. உடன் நடப்பன - ஒன்றோடொன்று தொடர்ச்சியாக நடப்பன எனவுமாம். யானைகளுக்கு முகத்திற் செம் புள்ளிகளிருத்தல், உத்தமவிலக்கணம்: "தியுமிழ் சிறுகணுஞ் செம் புகருமுடைத்தாய்" எனப் பிங்கலந்தையிலுங் காண்க. "மதம்பொழி யாழியினளவும் புகரா லழகெய்தி," "செம்புகர்பட்டின்தொழிலிற் பயில்கிற்பது" என்பர் மேற் பதின்மூன்றாம்போர்ச் சருக்கத்தும். கரி - கரத்தையுடையது; கரம் - கை: இங்கே துதிக்கை: இதற்குக் கருநிறத் தையுடையதெனப் பொருள் கூறலாகாது. மேகமுங் கடலும் யானைக்கு ஒலியினாலேயன்றி, கரியபெரிய வடிவத்தாலும், மதநீர் வெள்ளத்தாலும் உவமையாம்.

இதுமுதல் 15-ஆம் பாடல் வரையிலுள்ள செய்யுள்கள், தன தனத்தன தனதனத்தன தனதனத்தன தனதன என்ற சந்தக் குழிப்பைக் கொண்டிருத்தலால் சந்தவிருத்தமெனற்கு ஏற்பன. (367)

## 7.—இது தேர் வருணனை.

உருண்மணித்திகிரியின்முனைப்படிலுயர்பொருப்பையுமுரகர்வா
ழிருநிலத்திடைபுதைபடப்பட்டெதிர்நடப்பனவிவுளியின்
குரதுகட்கொடுகலகமிட்டணிகொடிநிரைத்துகில்கொடுபொலந்
தருநிலத்தவர்விழிதுடைப்பனசரதமிப்படியிரதமே.

(இ - ள்.) இரதம் - தேர்கள்,—உருள் மணி திகிரியின் முனை படில் - உருண்டு செல்லும் அழகிய சக்கரங்களின் நுனிபட்டால், உயர் பொருப்பையும் - உயர்ந்த மலைகளையும், உரகர் வாழ் இரு நிலத்திடை - நாகர்கள் வாழும் பெரிய பாதாளலோகத்திலே, புதை படபட - நன்றாகப் புதைந்தழுந்தும்படி, எதிர்நடப்பன - எதிரே செல்லுந் தன்மையன; இவுளியின் - (தம்மிற் கட்டிய) குதிரைகளி னுடைய, குரம் துகள் கொடு - காற்குளம்புகளால் எழுப்பப்பட்ட தூளிகளால், கலகம் இட்டு - (மேலுள்ளதேவர்களோடு) போரைச் செய்து, அணி கொடி நிரை துகில் கொடு - (தம்மீது கட்டியுள்ள)

அழகிய துவசங்களுடைய வரிசைகளின் சீலைகளால், பொலம் தரு நிலத்தவர் விழி துடைப்பன - பொன்மயமான கற்பக விருட்சங்களை யுடைய சுவர்க்கலோகத்திலுள்ள அத்தேவர்களது கண்களைத் துடைப்பன; இப்படி சரதம் - இவ்வாறு செய்தல் உண்மை யாம்; (எ - று.)

பிறர்க்கு வருத்தமுண்டாகும்படி முன்னே கலகம் விளைத்துப் பின்பு அவரைக் கண்துடைத்துச் சமாதானப்படுத்துபவரது தன்மை தேரினிடத்து ஏற்றிக் கூறப்பட்டதனால், பின்னிரண்டடி - தற்குறிப் பேற்றவணி. "அன்னபோலெனு மவைமுதலாகிய, சொன்னிலை விளக்குந் தோற்றமுடைத்தே" என்றபடி அன்ன, போல, நினைக்கின் றேன், நிச்சயம், உண்மை, துணிவு முதலிய சொற்களைப் புணர்த்து விளக்குதல் இவ்வணிக்கு ஓரிலக்கண மாதலுமுள்ளதாதலால், 'இப் படிசரதம்' என்றார். தேர்க்குதிரை காற்புழுதிகள் வானத்து எழுந்து சென்று தேவர்களது இமையாக் கண்களிற் பதிந்து அவர்களது கண்களை வருத்து மென்பார், 'குரதுகட்கொடு கலகமிட்டு' என்றும் அங்ஙனந் துகள்பட்டு வருந்துங் கண்களைத் தேர்க்கொடிச்சீலைகள் துடைத்து அவ்வருத்த மொழிக்குமென்பார், 'அணிகொடிநிரைத் துகில் கொடு பொலந்தரு நிலத்தவர் விழி துடைப்பன' என்றுங் கூறினர். முன்னிரண்டடி - உயர்வுநவிற்சி. மணித் திகிரி யென்ப தற்கு - இரத்தினங்கள் பதிக்கப்பட்ட சக்கரமென்றும், திகிரியின் முனைபடில் என்பதற்கு - சக்கரங்களின் எதிரிற் பட்டாலென்றும் பொருள் கொள்ளலாம். பெரிய மலைகளையும் பாதாளத்தில் அழுத்த வல்லன என்றது - தேரின் வலிமிகுதியையும், இவுளியின்குரதுகட் கொடு கலகமிட்டு என்றது - குதிரைகளின் வலிமையையும், அணி கொடி நிரைத்துகில் கொடு பொலந்தரு நிலத்தவர் விழிதுடைப்பன என்றது - தேர்களின் உயர்ச்சியையுங் குறிப்பிக்கும்.

பொன் + தரு = பொலந்தரு: இது - "பொன்னென் கிளவியீறு கெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ், செய்யுண் மருங்கிற் றொடரிய லான" என்னுந் தொல்காப்பிய விதியாற் புணர்ந் தது. இதனை நன்னூலின்படி பொலம் தரு - எனப்பிரித்து மகர வீற்று விதியாற் புணர்க்க: பிற்காலத்து நிகண்டு திவாகரங்களில் பொலமென்றே ஒரு பெயர் கூறியவாறுங் காண்க. பொன்னுலக மாகிய தேவலோகத்திலுள்ள பொருள்களெல்லாம் பொன்மய மாத லால், பொலந்தரு எனப்பட்டது. இனி 'பொலம்' என்பதை நில மென்பதனோடு கூட்டலுமாம். சந்தானம், மந்தாரம், பாரிசாதம், கல்பகம், அரிசந்தன மெனத் தேவதரு ஐந்தாம்: இவை தன்னிடம் வந்து வேண்டுவார் வேண்டும்பொருளை வேண்டியவாறே விளைப் பன. பொலந்தரு - (வேண்டிய) செல்வத்தை விளைக்குந் தருவு மாம். பொலன் - பொருள். (368)

## 8.—இது - குதிரை வருணனை.

பலவகைப்படுகவனமெய்க்கதிபவனமொப்பனபரவைசூழ்
உலகனைத்தையும்வெளியிலுய்த்தவினுரகருக்குமொருதவியா

யிலகுசக்கரசிகரிசுற்றடி யெனவளைப்பனவெழுபெயர்க்
குலமுகிற்றலைகிழியவைப்பனகுரவிதத்தனபுரவியே.

(இ - ள்.) புரவி - குதிரைகள்,—பல வகைப் படு கவனம் - அநேக வகைப்பட்ட நடைகளையுடைய, மெய் கதி - இலக்கணந்தவறாத விரைந்த நடையாலே, பவனம் ஒப்பன - காற்றை ஒத்திருப்பன; பரவை சூழ் உலகு அனைத்தையும் - கடல் சூழ்ந்த பூலோகம் முழுவதையும், வெளியில் உய்த்தலின் - (தம்கால்களால் எழுப்பப்படும் துகள்கள் மூலமாக) ஆகாயத்தில் செலுத்துதலால், உரகருக்கும் ஓர் உதவி ஆய் - (கீழிருந்து நிலத்தைத் தாங்கும்) நாகர்களுக்கும் (தலைப்பாரத்தைக் குறைத்து) ஒப்பற்ற உதவியாகி, இலகு சக்கர சிகரி - (உலகத்தைச் சூழ்ந்து) விளங்குகின்ற சக்கரவாளகிரியை, சுற்று அடி என - (தாம் வட்டமாக ஓடுதற்கு அளவாக அமைத்த) சுற்றெல்லை யென்னும்படி, வளைப்பன - மண்டலகதியாய்ச் சுற்றி வருவன, எழு பெயர் குலமுகில் தலை கிழிய வைப்பன - ஏழுபெயர்களையுடைய சிறந்த மேகங்களின் தலை கிழியும்படி (அவற்றின்மேல்) வைப்பனவான, குரம் விதத்தன - காற்குளம்புகளின் வகையை யுடையன; (எ - று.)

பலவகைப்படு கவனம் - ஐவகைநடை; அவை - "விக்கிதம் வற்கிதம் வெல்லுமுபகண்டம், மத்திமஞ் சாரியோடைந்து" என்பன. இவற்றுள், நிச்சலமாக அதிவேகமும் அதிமந்தமு மாகாமல் சமமான கதி - விக்கிதம்; அதனினும் அதிகமாய்ச் சதுரமான கதி - வற்கிதம்; தானகதியுடன் வட்ட மிட்ட கதி - வெல்லுமுபகண்டம்; வேகத்தினால் முன்னங்கால்களைத் தூக்கி வரும் நடை - மத்திமம்; அவ்வளவு வேகமாகவுஞ் சமமாகவும் போகுகை - சாரி. இவை பஞ்சகதி யெனவும், பஞ்சதாரை யென வும் படும்: இனி, மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, ருஷபகதி எனவுமாம். இனி இவற்றோடு பஞ்ஜளி, முரளி, சுடாலம், வலனம் என்னும் நான்கும் கூட்டி நவகதி கூறுதலுமுண்டு. ஒரு தவியாய் - சிறிது உதவியாய் என்றுமாம். பூமியைச் சூழ்ந்துள்ள கடலைச் சுற்றிலும் கோட்டை மதில்போல் வளைந்துள்ளதொரு பெரு மலைக்குச் சக்கரவாள மென்றுபெயர். சக்கரம்போல வட்டவடிவாக வுள்ளமையால், சக்கரவாள மெனப்படும். சர்ப்பராசனை ஆதி சேஷனும் அவற்குத் துணையாக அஷ்டமகாநாகங்களும் கீழுலகத்தி லிருந்து தம் தலைகளால் பூமியைப் பரிக்கின்றன வென்பது நூன் மரபு. குலம் முகில் தலை - கூட்டமான மேகங்களினிடம் என்றுமாம். குரவிதம் என்றது, இங்கே முன்னிரண்டு கால்களை. இப்பாட்டில் தற்குறிப்பேற்றவணியும், தொடர்புயர்வுநவிற்சியணியும் விரவி வந் தன. சக்கரவாளகிரி உட்பக்கம் சூரிய கிரணங்களால் விளங்கியும் வெளிப்பக்கம் அவற்றால் விளங்காமலும் 'லோகாலோகம்' எனப் பெயர் பெறுந்தன்மை தோன்ற, 'இலகு சக்கரசிகரி' என்றார். 'சக்கர சிகரி சுற்றடியென வளைப்பன' என்பதற்கு-கடல் சூழ்ந்த பூமி முழுவ தையும் மிகவிரைவிற் சூழ்ந்துவரவல்லன வென்பது தேர்ந்தகருத்து 'புவனதலமுற்றுமுடன் வளையவொ ரிமைப்பொழுதில் வருவன

என்பர் மேல் இருபத்து மூன்றும் பாட்டிலும். மெய்க்கதி - உடம்பி னுற் செல்லுங் கதி யென்பாருமுளர். 'ஒத்தெழு பரவைசூழ்' என்றும் பாடம். (369)

## 9.—இது - காலாள் வருணனை.

புருவவிற்குனிவெழவுயிர்ப்பொடுபுகையெழத்துகிர்புரையும்வாய்
மருவுமுத்திளநிலவெழத்தனிமனநெருப்பெழவளர்தடக்
கரதலத்தயில்வெயிலெழப்புனைகலன்வனப்பெழமிளிருநீள்
நிரையிமைப்பெறுவிழிசிவப்பெழநிருதரொத்தனர்விருதரே.

(இ - ள்.) விருதர் - காலாள் வீரர்கள்,—புருவம் வில் குனிவு எழ - (தத்தம்) புருவங்களாகிய விற்களின் வளைவு தோன்றவும், உயிர்ப்பொடு புகை எழ - (தமது) சுவாசத்தோடு புகை கிளம்பவும், துகிர் புரையும் வாய் மருவும் முத்து இள நிலவு எழ - பவழத்தை யொத்த [மிகச்சிவந்த] (தமது) வாயிற் பொருந்திய முத்துப்போன்ற பற்களில் இளஞ்சந்திரகாந்திபோன்ற ஒளி (வீரநகை செய்யுங் காலத்து) வெளித்தோன்றவும், தனி மனம் நெருப்பு எழ - ஒப்பில்லாத (தமது) மனத்தில் (கோபமாகிய) தீப்பொங்கவும், 'வளர் தடகர தலத்து அயில் வெயில் எழ - நீண்டுவளர்ந்த பெரிய (தமது) கையினிடத்துப் பொருந்தின வேல்களில் சூரியகாந்தி போன்ற ஒளி வீசவும், புனைகலன் வனப்பு எழ - (தாம்) அணிந்துள்ள ஆபரணங்களின் அழகு விளங்கவும், மிளிரும் நீள் நிரை இமை பெறு விழி சிவப்பு எழ - ஒளி செய்கிற நீண்ட ஒழுங்கான இமைகளைப் பெற்ற கண்களில் (கோபமிகுதியால்) செந்நிறம் பொருந்தவும், (இக்காரணங்களால்), நிருதர் ஒத்தனர் - அரக்கரைப் போன்றனர்; (எ - று.)

உவமையணி. கோபத்தாற் புருவம் வளைதல், கோபத்தோடு விடும் பெருமூச்சில் புகை கிளம்புதல், சிவந்தவாயிற் பொருந்தின கோரப்பற்களின் வெள்ளொளி வெளிவிளங்குதல், பிறரோடு கூடாது தனிப்பட்டு மனம் கோபாக்கினியாற் கொதித்தல், கையில் வேலேந்துதல், உடம்பில் ஆபரணமணிதல், கோபத்தாற் கண்கள் சிவத்தல் என்னும் இவை அரக்கர்க்கும் உண்மை காண்க; அன்றியும், வில்வளைவு, புகை, நிலா, நெருப்பு, வெயில், அழகு, கொடுங்கண் முதலியவற்றை மாயையால் ஒருங்கு காட்டுவராதல்பற்றியும், அரக்கரை உவமை கூறிய தென்னலாம். முத்து - வெள்ளிய பல்லுக்கு உவமையாகுபெயர். கைகள் முழங்காலளவும் நீண்டு தொங்குதல் உத்தம இலக்கணமாதலால், 'வளர்தடக்கரதலம்' என்றது. விருது-வெற்றி; அதனையுடையவர், விருதர். 'இமைப்பறு' என்றும் பாடம். (370)

## 10.—இது - அரசர் வருணனை.

கொடிநெருக்கவுமதியெனத்திகழ்குடைநெருக்கவுநடைகொளா
ளடிநெருக்கவு மிபநெருக்கவு மயநெருக்கவு மெழுதுகட்
பொடிநெருக்கவும்வளர்புயத்தொடுபுயநெருக்கவுமொளியரு
முடிநெருக்கவுமுறைநெருக்கினர்முரசமொத்தசொலரசரே.

(இ - ள்.) முரசம் ஒத்த - பேரிகை முழக்கத்தைப் போன்ற, சொல் - (கம்பீரமான) சொற்களையுடைய, அரசர்—,—கொடி - துவசங்கள், நெருக்கவும் - இடைவிடாது செறியவும், மதி என திகழ் குடை - பூர்ண சந்திரன் போல விளங்குகிற வெண்கொற்றக் குடைகள், நெருக்கவும்—, நடை கொள் ஆள் அடி - நடத்தலைக் கொண்டபதாதிகளின் கால்கள், நெருக்கவும்—, இபம் - யானைகள், நெருக்கவும்—, அயம் - குதிரைகள், நெருக்கவும்—, எழு துகள் பொடி - மேலெழுகிற புழுதிகள், நெருக்கவும்—, வளர்புயத்தொடு புயம் நெருக்கவும் - [உயர்ந்தும் பருத்தும்] வளர்ந்த (தமது) தோள்களோடு (பிறர்) தோள்கள் அடரவும், ஒளி அறு முடி நெருக்கவும் - பிரகாசம் நீங்காத கிரீடங்கள் (ஒன்றையொன்று) உராயவும், (ஒருவரையொருவர்), முறை - முறையே, நெருக்கினர்—; (எ - று.)

தன்மைநவிற்சியணி; முரச மொத்த சொல்-உவமையணி. மதி - (யாவராலும்) மதிக்கப்படுவதெனக் காரணப்பெயர். சந்திரன்- குடைக்கு வட்டவடிவாலும் தண்மையாலும் வெண்ணிறத்தாலும் மேல் விளங்குதலாலும் உவமை. நடையென்னுந் தொழிற்பெயரில், நட என்னும் பகுதி ஈற்றகரம் தொக்கது. துகட்பொடி-ஒருபொருட் பன்மொழி, செவிக்குச் சொல்லின்பந் தோன்ற நின்றது; என்றது, நுண் தூளிகளை யாகலாம். 'நடைகொள் தேரடி' எனவும் பாடம்.(371)

## 11.—இது – தேர்த்துவச வருணனை.

பகன்மறைத்திருள்வரவிடுத்தெறிபவனமெய்க்கதியுடனுலாய்
அகனிலத்திடைவருநதிப்புனலருவருத்துயர்நதியின்வாய்
உகள்வரிக்கயலினமுமொத்தனவுடுகுலத்துடனொளிர்பெருங்
ககனவட்டமுமறையவிட்டனகவசமொத்தனதுவசமே.

(இ. - ள்.) துவசம் - கொடிச்சீலைகள்,— பகல் மறைத்து - (மேலே தாம் நெருங்கிப்பரந்திருத்தலால்) சூரியனொளியை மறைத்து, இருள் வர விடுத்து - (அதனால்பூமியிலே) இருளை வரும்படி செய்து, எறி பவனம் மெய் கதியுடன் உலாய் - வீசுகின்ற காற்றினது உண்மையான சஞ்சாரத்துக்கு ஏற்ப அசைந்து, அகல் நிலத்திடை வருநதி புனல் அருவருத்து உயர் நதியின்வாய் உகள் வரி கயல் இனமும் ஒத்தன - பரந்த பூலோகத்தினிடத்திலே ஓடுகின்ற நதிகளெல்லாவற்றின் நீரையும் (மிக்கசுவையுடைத்தன்றென்று) வெறுத்து மேலுள்ள ஆகாசகங்கா நதியில் (சென்று) சஞ்சரிக்கிற (உடம்பிற்) கோடுகளையுடைய கயல்மீன்களின் கூட்டத்தையும் போன்றன; உடு குலத்துடன் ஒளிர் பெரு ககனவட்டமும் மறைய இட்டன கவசம் ஒத்தன - நக்ஷத்திரக் கூட்டத்தோடு விளங்குகிற பெரிய ஆகாய வட்டமும் மறைபடும்படி போகட்ட கவசத்தையும்போன்றன;(எ-று.)

தற்குறிப்பேற்றஉவமையணி. உகளுதல் - பிறழ்தல், புரளுதல். கயல் - மீனின் ஓர்சாதி. விட்டன எனப் பதம்பிரித்தல் சிறவாதாம். கவசம் - உடம்பின்மேற்சட்டை. 'இனமொடொத்தன' எனவும் பாடம்.
(372)

## 12.—இது - அறுவகைத் தானை வருணனை.

உறவின்மிக்கவர்பகையினெய்த்தவருதவுமப்படைகுடைநிழற்
செறிதலத்தினில் வளர்நகர்ப்படை திரள்வனப்படைபொருள்விலைத்
தறுகண்மெய்ப்படையுறுதியிற்பொருதமதகப்படையெனவிராய்
அறுவகைப்படைகளும்வகுத்தனவணிகளுட்கினபணிகளே.

(இ - ள்.) உறவில் மிக்கவர் (உதவும் அ படை) - (பந்துத்துவம் சிநேகம் முதலிய) சம்பந்தத்திலே மிகுந்த துணைவர்கள் (தமக்கு) உதவியாகக் கொடுத்த அந்த சேனையும் [துணைப்படையும்], பகையின் எய்த்தவர் உதவும் அ படை - பகைமையினால் (தம்மோடு எதிர்த்துப் போர்செய்து) தோற்றவர்கள் (தமக்குத்) திறைகொடுத்த அந்தச் சேனையும் [பகைப்படையும்], குடை நிழல் செறி தலத்தினில் வளர் நகர் படை - (தமது) குடையின் நிழலிலே [அரசாட்சியிலே] பொருந்தின நாட்டிலுள்ள நகரங்களினின்று வந்த சேனையும் [நாட்டுப்படையும்],வனம் திரள் படை-காட்டினின்றுதிரண்டு வந்தசேனையும் [காட்டுப் படையும்], பொருள் விலை தறுகண் மெய் படை - (தாம் கொடுக்கும்) திரவியமாகிய விலையைப் பெற்றுக்கொண்டு ஊழியஞ் செய்யும் அஞ்சாமையையும் (வலிய) உடம்பையுமுடைய சேனையும் [கூலிப் படையும்], உறுதியின் பொரு தமது அகம் படை - நெஞ்சுறுதியோடு போர் செய்கிற தம்முடைய அந்தரங்கமான சேனையும் [மூலப்படையும்], என - என்று, அறுவகை படைகளும் - அறுவகைச் சேனைகளும், விராய் - சேர்ந்து, அணிகள் வகுத்தன - அணி வகுக்கப்பட்டனவாக, (அப்பொழுது), பணிகள் உட்கின - (கீழிருந்து பூமியைத் தாங்குகின்ற) நாகங்கள் (பாரமிகுதியை நோக்கி) அஞ்சின; (எ - று.)

எய்த்தவர் - இளைத்தவர். நீதிதவறாது குடிகளுக்கு நன்மையைச் செய்யும் அரசாட்சியைக் குடைநிழலென்றல், கவிமரபு. இனி, பொருள் விலை - பொருளுக்குத் தம்மை விற்றல் செய்கிற என்றும் உரைக்கலாம். மெய்ப்படை - தொழிலில் உண்மையுள்ள சேனையென்றுமாம். அறுவகைப்படையுள்ளும், மூலபலம் - மற்றையவை போல அப்பொழுதப்பொழுது அரசனாற் சேர்க்கப்படுவதன்றி, முன்னோர் தொடங்கிவந்து அரசனிடத்தே தொன்றுதொட்டு உளதாகி வரும் அன்புடைமையும் தனக்கு அழிவுவருங் காலத்தும் அஞ்சி நீங்காத வன்புடைமையுமாகிய சிறப்பை யுடைமையால் 'உறுதியிற் பொருதமதகப்படை 'எனப்பட்டது. "உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத், தொல்படைக் கல்லாலரிது', என்றார், தெய்வப்புலமைத் திருவள்ளுவரும். இதனை இறுதியில் நிறுத்தினதற்குக் காரணமும் இதுவே. பணம் - படம். 'வகுத்தன' என்பதை முற்றெச்சமாகக் கொண்டு உரையாவிடின் ஏகவாக்கியமாகாமற் பின்னவாக்கியமாகிப் பொருள் சித்தியாது என்பர். (373)

## 13.—இது - முரசம், குடை, கொடி, ஆயுதம் என்பவற்றின் வருணனை.

சதியெனைப்பலவெனமுழக்கினசதவிதப்பணைதவளமா
மதியெனைப்பலவெனநிழற்றினமகிபர்பொற்குடைமழைகொள்வான்
நதியெனைப்பலவெனநிரைத்தனநவமணிக்கொடிநளினவெம்
பதியெனைப்பலவெனவெறித்தனபலவகைப்படைகுலவவே.

(இ - ள்.) (அந்தச் சேனையில்), சதம் விதம் பணை - நூறு வகைப்பட்ட வாத்தியங்கள், எனை பல சதி என-மிகப்பலவான தாள வகைகளை யொத்து, முழக்கின - ஒலித்தன: மகிபர் பொன் குடை - அரசர்களது அழகிய குடைகள், தவளம் மா மதி எனை பல என - வெண்ணிறமான பெரிய பூர்ண சந்திரன் மிகப்பல என்னும்படி [அனேக சந்திரர் இருந்தாற்போல], நிழற்றின - நிழலைச்செய்தன; நவ மணி கொடி - நவரத்தினங்களிழைக்கப்பெற்ற கொடிகளின் சீலைகள், மழை கொள் வான் நதி எனை பல என - குளிர்ச்சியைக் கொண்ட ஆகாச கங்காநதி மிகப்பல என்னும்படி [பல கங்கைகள் இருந்தாற்போல], நிரைத்தன - ஒழுங்காய் நிறைந்தன; பலவகை படை - அநேக வகை ஆயுதங்கள், நளினம் வெம்பதி எனை பல என-தாமரைக்கு விரும்பப்படுந் தலைவனை சூரியன் அநேகமென்னும்படி [பல சூரியர் ஒருங்கு விளங்கினாற்போல], குலவ எறித்தன-விளங்க ஒளி வீசின; (எ - று.)

இரண்டு முதலிய மூன்றடிகள் - இல்பொருளுவமை. மேலே வரிசை வரிசையாக அசைந்து நெடுந்தூரம் தொடர்பட்டு நிற்றலால், கொடி வரிசைக்கு வான்நதி உவமையாம். தாமரை சூரியனொளியைக் கண்டவிடத்து மலர்தலும், அதனைக் காணாதவிடத்துக் குவிதலு மாகிய இயல்புபற்றி, தாமரையாகிய பெண்ணுக்குச் சூரியனைக் கணவனென்றல் மரபு. பலவகைப்படை-எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவாகிய அம்பு வேல் வாள் ஈட்டி முதலியன. தாளங்கள் நூற்றெட்டு வகையாதலால், 'சதியெனைப்பல' என்றது. நூறென்னும் பொருளைத் தருகின்ற சதமென்னும் சொல், இங்கே மிகப்பல வென்ற மாத்திரமாய் நின்றது. பணை-பறைப்பொது. பொன் குடை - பொற்காம்பிட்ட குடை யென்றுமாம்; பொன் - கருவியாகுபெயர். நவமணி-கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. வெம்மை என்பது - பண்புச் சொல்லாய் வெப்பத்தை யுணர்த்துவதேயன்றி, உரிச்சொல்லாய் விருப்பத்தையும் உணர்த்துதலை 'வெம்மை வேண்டல்' என்னுந் தொல்காப்பியத்தால் அறிக. (374)

## 14.—இது - சேனைப்பொது வர்ணனை.

பிடர்வலிக்கடகரிகளிற்செறிபிடிகளிற்புனைமுடிகளிற்
படர்நிழற்கவிகையின்மிசைத்துகள்பரவிமொய்த்தெழுபுரவியிற்
சுடர்விதப்படைகளினிரைப்படுதுகிலுடைக்கொடிகளின்விராய்
அடர்பொருப்பினமிடையிடைப்பயிலடவியொத்ததுபுடவியே.

(இ - ள்.) பிடர் வலி கட கரிகளின் - பிடரியில் வலிமையுள்ள மதத்தையுடைய ஆண் யானைகளாலும், செறி பிடிகளின்-நெருங்கின பெண் யானைகளாலும், புனை முடிகளின் - (அவரவர்) அணிந்துள்ள கிரீடங்களாலும், படர் நிழல் கவிகையின்-பரந்த நிழலையுடைய குடைகளாலும், மிசை துகள் பரவி மொய்த்து எழு புரவியின் - ஆகாயத்திலே தூளிகள் பரவுவதற்குக் காரணமாய் நெருங்கி வருகிற குதிரைகளாலும், சுடர் விதம் படைகளின் - விளங்குகிற பலவகைப்பட்ட ஆயுதங்களாலும், நிரை படு துகில் உடை கொடிகளின் - வரிசைகளாய் அமைந்த சீலைகளையுடைய துவசங்களாலும், விராய்-கலந்து, புடவி - (சேனைபரவிய) அப்பூமியானது, அடர் பொருப்பு இனம் இடை இடை பயில் அடவி ஒத்தது-நெருங்கிய மலைகளின் கூட்டம் நடு நடுவே பொருந்தப்பெற்ற வனத்தைப்போன்றது; (எ - று.)

யானைகள் - மலைபோலுதலாலும், குடை குதிரை கொடிகள் - அடர்ந்த மரங்கள் போலுதலாலும், கிரீடமும் ஆயுதங்களும் பொன் மணிகள்போல விளங்குதலாலும், இங்ஙனம் வருணித்தார். தற்குறிப்பேற்றவுவமையணி. பிடர்-கழுத்தின்பின்புறம். கடமென்னும் யானைக் கன்னத்தின் பெயர் அதனினின்றுவழியும் மதநீருக்கு இடவாகு பெயர்; பின்னர் 'பிடி' என வருதலாலும், 'கடம்' என்ற அடைமொழியாலும், கரி - இங்கே ஆண்யானையாயிற்று. பிடி-யானையின் பெண்மைப்பெயர். முடி - முடியில் தரிப்பது. கவிகை - கவிந்துள்ளது; காரணப்பெயர். 'பரவ' எனவும் பாடம். (375)

## 15.—இது-பலவகை வாத்திய கோஷ வருணனை.

வளைமுழக்கினகிடுகுகொட்டினவயிரொலித்தனமகுடியின்
கிளையிமிழ்த்தனமுழவதிர்த்தனகிணையுரற்றினபலவிதத்
துளையிசைத்தனமுரசிரைத்தனதுடியரற்றினசெவிடுபட்
டுளையவிப்படிபடைபுறப்படவுலகமுற்றதுகலகமே.

(இ - ள்.) (அந்தச்சேனையில்), வளை - சங்குகள், முழக்கின - ஒலித்தன; கிடுகு - கிடுகென்னும் (ஓர்வகைப்) பறைகள், கொட்டின - அடிக்கப்பட்டன; வயிர் - ஊதுகொம்புகள், ஒலித்தன—; மகுடியின் கிளை - மகுடியென்னும் வாத்தியத்தின் இனங்கள், இமிழ்த்தன - ஒலித்தன; முழவு - மிருதங்கங்கள், அதிர்த்தன-ஒலித்தன; கிணை - கிணையென்னும் பறைகள், உரற்றின - ஒலித்தன; பல விதம் துளை - பலவகையான துளைக்கருவிகள், இசைத்தன-ஒலித்தன; முரசு - பேரிகைகள், இரைத்தன - ஒலித்தன; துடி - உடுக்கைகள், அரற்றின - ஒலித்தன; செவிடு பட்டு உளைய - (இவ்வோசைமிகுதிகளால் கேட்பவர்) காதுகள் செவிடாகி வருந்தும்படி, இப்படி படை புறப்பட - இவ்வாறு (பாண்டவர்) சேனை புறப்பட்டதனால், உலகம் கலகம் உற்றது - உலக முழுவதுங் குழப்பமடைந்தது; (எ - று.)

உலகத்திலுள்ளவர் காது செவிடாகிக் கலங்கினர் என்பதாம். வளை - உள் சுழிந்துள்ளது. 'முழக்கின' முதல் 'அரற்றின' ஈறாக உள்ள ஒருபொருள்மேல்நின்ற பலசொற்கள் அடுத்து வந்ததனால், பொருட்பின்வருநிலையணி: "முன்வருஞ் சொல்லும்பொருளும்

பலவயின், பின்வருமென்னிற் பின்வருநிலையே" என்றார் தண்டியலங்காரத்தும். கிணை - மருதப்பறை; துடி - குறிஞ்சிப்பறை: பலவகை நிலத்தினின்றும் படைகள் திரண்டு வந்ததனால், பலநிலப் பறைகளும் இவற்றிற்கு உரியனவாம். துளை - துளையுள்ள கருவிக்கு ஆகுபெயர். (376)

16.—இது – இங்ஙனம் அணிவகுக்கப்பட்டுப் போருக்குச் சென்றுநின்ற பாண்டவர்சேனைத்தொகையின் தோற்றத்தை வருணிப்பது.

செங்கண்மாலுயிர்தருமன்மார்புசிவேதனானனமிருபுயம்
வெங்கண்வீமனும்விசயனுந்திறல்வின்மருத்துவர்மைந்தர்தாள்
அங்கண்மாமுடியரசர்மற்றுளவவயவாதிகளாகவே
தங்கள்பூமியிலானபோதொருவடிவமொத்ததுதானையே.

(இ - ள்.) செம் கண் மால் - சிவந்த திருக்கண்களையுடைய கண்ணபிரான், உயிர் - உயிராகவும், தருமன்-தருமபுத்திரன், மார்பு-மார்பாகவும், சிவேதன் - சுவேதன், ஆனனம் - முகமாகவும், வெம் கண் வீமனும் விசயனும்-(பகைவர்க்குக்) கொடிய தன்மையையுடைய வீமசேனனும் அருச்சுனனும், இரு புயம் - இரண்டு தோள்களாகவும், திறல் வில் மருத்துவர் மைந்தர் - வலிமையையுடைய வில்லையுடைய அசுவினீ தேவர்களது குமாரர்களான நகுல சகதேவர்கள், தாள் - (இரண்டு) கால்களாகவும், அம் கண் மா முடி அரசர் - அழகிய தன்மையையுஞ் சிறந்த கிரீடத்தையு முடைய மற்றையரசர்கள், மற்று உள அவயவ ஆதிகள் ஆக - இன்னுமுள்ள (வேறு) உறுப்புக்கள் முதலியவையாக, தானை - அந்தச் சேனை, தங்கள் பூமியில் ஆனபோது - தங்களது [பாண்டவரது] இராச்சியமான குருக்ஷேத்திரத்திற் சேர்ந்தபொழுது, ஒரு வடிவம் ஒத்தது - ஒரு ரூபத்தையொத்திருந்தது; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. சேனையின் தோற்றத்தை ஒரு புருஷரூபமாகக் கற்பித்துக் கூறியவாறு. உயிர் உடம்பிலிருந்து அதனைக் கொண்டு தொழில் நடத்துதல்போலப் பரமாத்மா எல்லாச் சீவாத்மாக்களிலும் உள்ளிருந்து அவற்றைக் கொண்டு தொழில் நடத்துதலால் 'செங்கண்மால்உயிர்' என்றும், வீரர்க்கு எல்லாவுறுப்பினும் மார்பு சிறந்து முற்படவிளங்குமாறுபோலத் தருமன் எல்லோரினுஞ் சிறந்து முற்பட விளங்குதலால் 'தருமன் மார்பு' என்றும், முகம் முக்கிய அவயவமாய் முன் விளங்குதல்போலச் சுவேதன் சேனாதிபதியாய்ச் சேனாமுகத்தில் நின்று விளங்குதலால் 'சிவேதன் ஆனனம்' என்றும், தமது வலிமையாற் பகைதொலைத்து வெற்றிதர வல்ல தோள்கள்போல வீமார்ச்சுனர் தமது திறமையாற் சத்துருசங்காரஞ் செய்து வெற்றிவிளைப்பவராதலால் 'வெங்கண் வீமனும் விசயனுமிரு புயம்' என்றும், கால்கள் தாழ்ந்த வுறுப்புக்களாய்த் தம்மையுடையவன் நினைத்தவிடஞ் செல்லுதற்கேற்ற கருவியாயிருத்தல்போல நகுல சகதேவர் இளையவர்களாய்த் தருமன் முதலிய மூத்தவர் மூவரும் விரும்பினபடி தொழில் செய்பவராதலால் 'திறல்வில்

மருத்துவர் மைந்தர்தாள்' என்றும், தேகத்தில் பிற உறுப்புக்களெல்லாம் ஏற்றபடி உதவுதல்போலப் போரிற் படைத்துணையாக வந்த அரசரெல்லாம் சமயோசிதமாகத் தொழில் செய்தலால் 'அங்கண்மா முடியரசர் மற்றுள வவயவாதிகளாக' என்றும் உருவகப்படுத்தினர், முதல் மூன்றடிகளிற் கூறிய இவ்வுருவகம் ஈற்றடியிலுள்ள தற்குறிப் பேற்றத்திற்கு அங்கமாய்க்கலந்து வந்ததனால், உறுப்புறுப்பிக்கலவையணி; உருவகத்தை விளக்கும் 'ஆக' என்னும் உருபைப் பிறவிடத்தும் எடுத்துக் கூட்டுக. மார்பு என்பது - இடவாகுபெயராய் நெஞ்சைக் குறிப்பதெனக் கொண்டால், புறத்துறுப்பாகிய முகம் கை கால் முதலியன வெல்லாந் தொழில் செய்தற்கு அகத்துறுப்பாகிய நெஞ்சின் நினைப்பே காரணமாதல் போல, மற்றையோர் தொழில் செய்தற்கெல்லாம் பிரதானனான யுதிட்டிரனது கருத்தே காரணமாதலால், 'தருமன் மார்பு' என்றாரென்னலாம். தறுகண் என்பது போல, வெங்கண் என்பதும் அஞ்சாமையைக் குறிக்கும்; இனி, பகைவர்க்குப் பயங்கரமான கண்களையுடைய என்றுமாம். மருத்துவர் - மருந்தையுடையவர்; மருந்தின் தன்மையை அறிந்து வியாதிக்கு ஏற்றபடி தரவல்லவரென வைத்தியர்க்கு இது ஏதுப்பெயர்; மருந்து என்னும் மென்றொடர்ப்பகுதி வன்றொடராய், (சிறுபான்மை) உயிர்வர உகரம் கெடாது வகரவுடம்படுமெய் பெற்று நின்றது. அசுவினி தேவர் தேவ வைத்தியராதலால், 'மருத்துவர்' எனப்பட்டார். அங்கண் - அவ்விடத்திலுள்ள எனினுமாம். மற்றுள என்பதை அரசரோடுங் கூட்டுக. தங்கள் பூமி - தங்களுக்கு உரிய போர்க்களமுமாம். 'விண்மருத்துவர்' என்றும் 'அவயவத்திரளாகவே' என்றும் பாடம். (377)

வேறு.

## 17.—துரியோதனன் வீடுமனுக்குச் சில கூறுதல்.

இங்கிவர்வயப்படைகுறித்தகுருபூமியிடையிவ்வகையெழுந்த தினிமேல், அங்கவர்சயப்படையெழுச்சியுரைசெய்குவமருந்திதிமயக்கி விரையக், கங்குலினழைத்துரக கன்னிமகனைப்புகல்களப்பலிகொடுத் தனரெனச், செங்கணரவத்துவசமீளியு முணர்ந்துதனசேனைமுதல்வற் குரைசெய்வான்.

(இ - ள்.) இங்கு - இந்தப்பக்கத்தில், இவர் - இப்பாண்டவரது, வயம்படை - வெற்றியைத்தரவல்ல சேனை, குறித்த குரு பூமியிடை - (போர்செய்யும் இடமாக இருதிறத்தாரும்) குறித்த குருக்ஷேத்திரத்திலே, இ வகை எழுந்தது - இவ்வாறு (போருக்குச்) சித்தமாய் நின்றது; இனிமேல்—, அங்கு - அந்தப் பக்கத்தில், அவர் - அத்துரியோதனுதியரது, சயம் படை - வெற்றியைத் தரவல்ல சேனை, எழுச்சி-(போருக்கு) எழுந்த தன்மையை, உரைசெய்குவம் - கூறுவோம்; அரு திதி மயக்கி - (மாற்றற்கு) அரிய திதியை மாற்றி [சதுர்த்தசியை அமாவாசையாக்கி], விரைய - விரைவாக [தம்மினும் முற்பட என்றபடி], உரககன்னி மகனை - நாககன்னிகை குமாரனை இராவானை, கங்குலின் அழைத்து - இரவிலே கூப்பிட்டு, புகல் களம்

பலி கொடுத்தனர் - (சிறப்பித்துக்) கூறப்படுகிற போர்க்களத்துக்குரிய பலியாகக்கொடுத்துவிட்டார்கள், (பாண்டவர்கள்), என - என்று, செம் கண் அரவம் துவ்சம் மீளியும் உணர்ந்து - (கோபத்தால்) சிவந்த கண்களையுடைய பாம்புக்கொடியையுடைய வீரனான துரியோதனனும் அறிந்து, தன் சேனை முதல்வற்கு உரை செய்வான் - தன்னுடைய சேனாதிபதியான வீடுமனுக்குக் கூறுபவனானான்; (எ - று.)—அதனை மேற்கவியிற் காண்க.

வயப்படையென்றும், சயப்படையென்றும் கவியிரண்டையும் பட்சபாதமின்றிக் கூறினார். வய எனப் பிரித்தால், வலிமையென்று பொருள் படும் உரிச்சொல்லாம்; "வயவலியாகும்" என்றார் தொல்காப்பியனார். இப்பாட்டில் 'உரைசெய்குவம்' என்பதுவரையில் (கதாசம்பந்தமில்லாத) கவிக்கூற்று. கண்சிவத்தல் - கோபக்குறி. மீளி - வலிமையிற் சிறந்தவன்; ஆண்பாற் சிறப்புப்பெயர். முதல்வன் - முதன்மையுடையவன், முதல்வற்கு உரைசெய்வான் - நான்காமுருபு, கொடைப்பொருளின் பாற்படும்.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பதினெட்டுக்கவிகள் பெரும்பாலும் முதல் ஐந்துசீர்கள் விளங்காய்ச்சீர்களும், ஆறாஞ்சீர் தேமாச்சீரும், ஏழாஞ்சீர் புளிமாச்சீரு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரிய விருத்தங்கள். (378)

### 18.—தனது சேனைவீரரை நால்வகைத் தேர்வீரராகப் பிரிக்கும்படி வீடுமனுக்குத் துரியோதனன் கூறுதல்.

கொதிகொள்சினநெஞ்சின்வலியின்றியவரஞ்சுபுகொடுத்தனர்களப்பலிநமக், கெதிரொருவர்நிற்குமவரில்லையெனும்வீரநிலையானறிவனீயறிவையே, அதிரதர்கண்மாவிரதர்சமரதர்களர்த்தரதராகநம்மனீகினியின்மா, மதுகைமுடிமன்னரைவகுத்தெழுகவென்றனன் மனத்தசைவிலாதவலியோன்.

(இ - ள்.) 'கொதி கொள் சினம் - பொங்குதலைக்கொண்ட கோபத்தையுடைய, நெஞ்சின் - மனத்திலே, வலி இன்றி - தைரியவுறுதி யில்லாமல், அவர் - அப்பாண்டவர்கள், அஞ்சுபு - (நமக்குப்) பயந்து, களம் பலி கொடுத்தனர் - (நமக்குமுன்) போர்க்களத்துக்குரிய பலியைக் கொடுத்திட்டார்கள்; நமக்கு எதிர் ஒருவர் நிற்குமவர் இல்லை எனும் வீரம் நிலை - நமக்கு எதிராக நிற்குந்தன்மையர் ஒருத்தருமில்லையென்கிற பராக்கிரமத்தன்மையை, யான் அறிவன் நீ அறிவையே - நான் அறிவேன், நீயும் அறிவாயன்றோ? (ஆதலின், இப்பொழுது), நம் அனீகினியில் - நமது சேனையிலுள்ள, மா மதுகை முடிமன்னரை - மிக்கவலிமையையுடைய கிரீடாதிபதிகளான அரசர்களை, அதிரதர்கள் மாஇரதர் சமரதர்கள் அர்த்தரதர் ஆக - அதிரதரும் மகாரதரும் சமரதரும் அர்த்தரதருமாக, வகுத்து - அணிவகுத்து, எழுக - (போருக்குப்) புறப்படுவாயாக' எனறனன்-என்று (வீடுமனைநோக்கிக்) கூறினன், மனத்து அசைவு இலாத வலியோன் - மனத்திலே தளர்ச்சியில்லாத உறுதியையுடைய துரியோதனன்;

'களப்பலி கொடாமலே சேனைகளை வகுத்துப் போர்க்குளெழுக' என்றனன் துரியோதனனென்க. கொதி - முதனிலைத்தொழிற் பெயர். நெஞ்சின் வலி, மனத்து வலி - மனோபலம். அஞ்சுபு - செய்புஎன்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். நமக்கு என்பதை மத்திமதீபமாக அஞ்சுபுஎன்பதனோடுங் கூட்டுக. ஒருவர் என்பதன் இறுதியில் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. நம் - முன்னிலையை உளப்படுத்திய தன்மைப்பன்மை: வீடுமனைக் கூட்டும். அசைவு - சலனம்; கலக்கமென்றபடி. அநீகினி - அநீகங்களையுடையதென்று பொருள்; அநீகம் - குதிரை முதலியவற்றின் கூட்டம். (379)

## 19.—இதுவும், மேற்கவியும் குளகம்: வீடுமன் அரசரைப் பிரிக்கக் கர்ணன் மனஸ்தாபப்படுதல்.

ஆனதெனவீடுமனுமதிரதரின்மிக்கதனுவாசிரியனும்புதல்வனுந்
தானுமுயர்பூரிசரவாவுமிவர்சோமவரதத்தபகதத்தர்கள்வழா
மானமிகுதுன்மருடனற்றலைவர்மாரதரில்வன்கிருதபற்பவரசன்
ஞானகிருபன்சகுனிசல்லியசயத்திரதர்நன்சமரதத்தலைவரே.

(இ - ள்.) (இவ்வாறு கூறின துரியோதனன் வார்த்தையைக் கேட்டவுடனே), வீடுமனும் - பீஷ்மனும், ஆனது என - (அணிவகுப்பு இப்பொழுதே) முடிந்ததென்று கூறி, மிக்க தனு ஆசிரியனும் - பாண்டவ துரியோதனாதியர்க்குச் சிறந்த வில்வித்தையைப் போதித்த ஆசாரியனான துரோணனும், புதல்வனும் - (அவனது) குமாரனான அசுவத்தாமனும், தானும் - (வீடுமனாகிய) தானும், உயர் பூரிசரவாவும் - சிறந்த பூரிசிரவஸ் என்பவனும், இவர் - (ஆகிய) இவர்கள், அதிரதரில் (நல் தலைவர்) - அதிரதர்களில் நல்ல சிரேஷ்டர்கள்; வர சோமதத்த பகதத்தர்கள் - சிறந்த சோமதத்தனும் பகதத்தனும், வழா மானம் மிகு துன்மருடன் - (போரில்) தவறாத மானம் மிகுந்த துர்மர்ஷணனென்பவனும் (ஆகிய இவர்), மா ரதரில் நல் தலைவர் - மகாரதர்களில் சிறந்த சிரேஷ்டர்கள்; வல் கிருதபற்ப அரசன் - வலிய கிருதவர்மராசனும், ஞானகிருபன் - நல்லறிவுடைய கிருபாசாரியனும், சகுனி - சகுனியும், சல்லியன் சயத்திரதன் - சல்லியனும் ஜயத்ரதனும், (ஆகிய இவர்), நல் சமரதர் தலைவர் - சிறந்த சமரத சிரேஷ்டர்கள்; (எ - று.)

இப்பாட்டில் 'வீடுமனும்' என்ற எழுவாயும், 'ஆனதென' என்ற வினையெச்சமும், அடுத்த கவியில் 'என இம்முறை வகுத்து உரை செய்தான்' என்றதனோடு முடியும்.

ஆனது - விரைவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி; துரிதத்தில்முடியு மென்றவாறு. இனி, ஆய்விட்டதென்று கண்டோர் கூறும்படி யென்றும் உரைக்கலாம். வரசோமதத்த பகதத்தரென மாறுக. சோமதத்த பகதத்தர் - பலர்பாலால் முடிந்த உயர்திணை யும்மைத்தொகை. துர்மர்ஷணன் என்ற சொல்லுக்கு - (பகைவரால்) பொறுக்க வொண்ணாதவ னென்று பொருள். கிருதபற்பன் - துரியோதனன் கண்ணனைப் படைத்

துணை யழைக்கப்போனபொழுது, அவ்வெம்பிரானால் அவனுக்குத் துணையாகக் கொடுக்கப்பட்ட யாதவ சேனைக்குத் தலைவனாக அனுப் பப்பட்டவன்; யதுகுலத்தில் இருதிகனென்பவனது குமாரன். ஜயத் ரதன் - சிந்து தேசத் தரசன்; ஆதலால், ஸைந்தவனென்றும் இவ னுக்கு ஒரு பெயர் வழங்கும்: இவன் - துரியோதனுதியருடன் பிறந்த வளான துச்சளையின் கணவன். "துன்மருடணன்றலைவர்" என் றும் பாடம். (380)

20. அங்கர்பெருமான்விருடசேனனரசற்குரியவனுசரிவரர்த்தர தரிற், றுங்கவயவீரரெனவிம்முறைவகுத்துரகதுவசனுடனேயுரைசெய் தான், கங்கைமகனேடுபலகூறிநனிசீறியுயிர்காய்வனெனவாளுருவிநீ, பொங்கமரின்மாளுமளவும்படைதொடேனெனமொழிந்தனனிசாரிபுதல் வன்.

(இ - ள்.) அங்கர் பெருமான் - அங்க தேசத்தார்க்கு அரசனான கர்ணனும், விருடசேனன் - விருஷஸேநனும், அரசற்கு உரிய அனு சர் - ராஜராஜனான துரியோதனனுக்கு உரிய தம்பிமாரான துச்சா தனன் முதலிய தொண்ணூற்றொன்பதின்மரும், இவர் - (ஆகிய) இவர்கள், அர்த்தரதரில் துங்க வயவீரர் - அர்த்தரதர்களில் சிறந்த வலிமையையுடைய வீரர்கள், என - என்று, இ முறை வகுத்து - இவ்வாறு பிரித்து, உரகதுவசனுடனே உரைசெய்தான் - பாம்புக்கொடியனான துரியோதனனோடு (வீடுமன்) கூறினான்; (இது கேட்டவளவில்), நிசாரி புதல்வன் - சூரியகுமாரனான கர்ணன், நனி சீறி - மிகக் கோபித்து, கங்கை மகனோடு பல கூறி - கங்கையின் புத்திரனான வீடுமனோடு பல வார்த்தைகள் சொல்லி, உயிர் காய்வன் என வாள் உருவி - (உன்) உயிரை மாய்ப்பேனென்று (வீரவாதங் கூறித் தன்) வாளாயுதத்தை (உறையினின்று) எடுத்து, (முடிவில்), 'பொங்கு அமரில் நீ மாளும் அளவும் படைதொடேன்' என மொழிந் தனன்-'கொடிய யுத்தத்தில் நீ இறக்கும் வரையிலும் நான் ஆயுதந் தொடவும்மாட்டேன் [வந்து போர்செய்யேன்]' என்று சபத வார்த் தை கூறினான்; (எ - று.)

வீடுமன் கர்ணனை அதிரத மகாரத சமரதரில் எவ்வகுப்பிலும் சேர்க்காமல் ஈற்றதான அர்த்தரதரினத்திற் சேர்க்கவே, அவன் மிகக்கோபங் கொண்டு பல நிந்தனைகளும் வீரவாதங்களும் கூறி வீடுமனைக் கொல்ல வாளுருவ, அதுகண்ட துரியோதனன் முதலி யோர் விலக்கினவளவிலே அவன் 'போரில் வீடுமன் இறக்குமளவும் நான் வந்து போர் செய்வதில்லை' என்று சபதங்கூறிப் போயினன் என்றதாம்.

கர்ணனை அர்த்தரதனாக வைத்ததற்குக் காரணம் - தன்னுடன் பிறந்தனவும் அழியா வலிமை தருவனவுமான கவச குண்டலங்களை இந்திரனுக்குத் தானஞ் செய்து இழந்ததும், கற்ற வில்வித்தை யெல்லாம் தக்க சமயத்திலே உதவாமல் மறந்து போய்விடும்படி குருவாகிய பரசுராமனாற் சபிக்கப்பட்டதும், தன்னுடம்பு பகைவ ரம் பாற் சிதைபடவும் தேர்ச்சக்கரம் போர்க்களத்தில் அழுந்தி விடவும் ஓர் அந்தணனாற் சாபம் பெற்றதும், இதற்கு முன் பல போர்களிற் செருக்குக்கொண்டு சென்று எதிர்த்து ஒன்றிலேனும் வெற்றி

பெருது தோற்று மீண்டதும் முதலியன வென வடமொழி வியாச பாரதத்தால் விளங்குகிறது. துரியோதனன் ராசராசனுய் அரசாள் கிறவனுதலால், அவனைப் படைவகுப்பில் எந்தவகையிலுஞ் சேர்க்க வில்லை; தருமபுத்திரனும் மகாராசனேயாகிலும் அவனை மாத்திரம் மகாரதனுகக் கணக்கிட்டது, அக்காலத்தில் அவன் அரசாட்சி யின்றி க்ஷத்திரிய வீரனுக மாத்திரம் இருத்தலாலெனக் காண்க. கீர்த்தி சேனைத்தலைவனுக்கே செல்லுதல் இயல்பாதலால், வீடுமன் சேனுதிபதியாய் வாழ்ந்திருக்கையில் தான் யுத்தஞ் செய்து அருச்சு னுதியோரைச் சயித்தால் அந்தப் புகழ் தனக்குவராமல் வீடும னுக்குச் சென்றிடுமே என்று கருதி கர்ணன் வீடுமனுள்ளவரையில் 'நான் போர் செய்யேன்' என்றுன். துங்கவயவீரர் - அக்கிரகண் ணியர்.

பரமசிவனது நெற்றிக் கண்ணின் நெருப்புக்கு இரையாகி எரி பட்ட மன்மதனது அங்கம் [உடம்பு] விழுந்த இடத்திற்கு அக்கார ணத்தால் அங்கதேச மென்று பெயர். பெருமான - பெருமையுடை யவன். விருடசேனன் - கர்ணனது புத்திரருள் மூத்தவன். அநுஜர் - பின் பிறந்தவரென்று பொருள். நிசாரி - இரவிற்குப் பகைவனென்று பொருள். இருளை யொழிப்பவனென்று கருத்து. இது உயர்திணைப் பெயராதலால், இதன் முன் வலிமிகவில்லை. (381)

## 21.—துரியோதனன் பெருஞ்சேனையோடு போர்க்களத்துக்குச் செல்லுதல்.

யானைமிசைதேரின்மிசையிவுளிமிசைபோம்வயவரேதிசிலைவேல்
வயவரிற், ருனைகளோராறுமுகிலேழுமெனவண்பணைதழங்குதிசைசூழ
வரவும், ஏனைநரபாலரணிதோறும்வெயில்வாளிரவியென்னவிருபாலும்
வரவுஞ், சேனைமுதனுதனெடுமெய்த்துணைவர்தங்களொடுசென்றன
னிராசதிலகன்.

(இ - ள்.) யானைமிசை தேரின்மிசை இவுளிமிசைபோம் வய வர் - யானைகளின் மேலும் தேர்களின் மேலும் குதிரைகளின் மேலும் (தனித்தனி) ஏறிச் செல்லும் வீரரும், ஏதி சிலை வேல் வயவரின் - வாளையும் வில்லையும் வேலையும் (தனித்தனி) ஏந்திய வீரர்களும் (ஆகிய) இவர்களால் (ஆகிய), தானைகள் ஓர் ஆறும் - அறுவகைச் சேனைகளும், முகில் ஏழும் என வண் பணை தழங்கு திசை - ஸப்த மேகங்கள்போலப் பெரியபேரிகைகள் முழங்கப்பெற்ற திக்குக்களி லெல்லாம், சூழவரவும் - சுற்றிலும் வரவும், ஏனை நரபாலர் - மற்றை அரசர்கள், அணிதோறும் - படைவகுப்பு வரிசைகளிலெல்லாம், வெயில்வாள் இரவி என்ன - உஷ்ணகிரணமுடைய சூரியன்போல, (மிக்கவிளக்கமுற்று), இருபாலும் வரவும் - இரண்டு பக்கத்திலும் வரவும், சேனை முதல் நாதனொடு - சேனைக்குப் பிரதானுதிபதியான வீடுமனுடனும், மெய் துணைவர் தங்களொடு-(தன்னிடத்து)உண்மை யன்புள்ள (தன்) தம்பிமார்களுடனும், இராச திலகன் - அரசரிற் சிறந்தவனுன துரியோதனன், சென்றனன் - (போர்க்களத்துக்குப்) போயினுன்; (எ - று.)

வீடுமனுக்கு உட்பட்டுத் துரோணன் கிருபன் பகதத்தன்முதலாக உதவிச் சேனைத்தலைவரும் உளராதலால், வீடுமனை 'சேனை முதல் நாதன்' என்றது. திலகம் நெற்றிக்கு அழகு செய்தல்போல, இவன் அரசர்க்கெல்லாம் அழகு செய்து சிறந்து விளங்குபவனென்பார், 'இராசதிலகன்' என்றார். "ஒத்தவில் வேல் வாள் யானை யுயர்பரி தேரொடாறே" என்ற நிகண்டையுங் காண்க. வயவர், வய அல்லது வயம் - பகுதி: வலிமை அல்லது வெற்றி என்று பொருள், ஏதி - ஆயுதப்பொதுப்பெயர்; வாளை உணர்த்திற்று. நரபாலர் - மனிதரைக் காப்பவர்: வாள் - ஒளியை உணர்த்தும்போது, உரிச்சொல்; வெயில் வாள் - வெயிலாகிய ஒளியென இருபெயரொட்டுப் பண்புத் தொகை. (382)

22.—இதுமுதல் நான்கு கவிகளால், முறையே துரியோதனனது சதுரங்க சேனையை வருணிக்கின்றார்: அவற்றுள் இது – கஜவருணனை.

பொழியுமுகில்பற்றியெழுமிளவெயிலெறித்தனையபுகரனபனைக்கை கொடுகார், கிழியும்வகையெற்றிமிசையொளிருநவரத்நகணகிரணவுடு வைக்கவர்வபோர், விழிவழிநெருப்புருகிவழியநுதலிற்றிலகம்வெயில் வழியமுற்றுநிலவே,வழியுமதியத்தின்வகிர்நிகர்பணைமருப்பினிடைமகரி கைதரித்தமதமா.

(இ - ள்.) (அச்சேனையில்), மதம் மா - மதயானைகள்,—பொழியும் முகில் பற்றி எழும் இளவெயில் எறித்து அனைய - மழைபொழிகிற காளமேகத்தைத் தழுவித் தோன்றுகிற இளவெயில் விளங்கினாற்போன்ற, புகரன - செம்புள்ளிகளையுடையன; பனை கை கொடு - பனைமரம் போன்ற (தமது) துதிக்கையால், கார் கிழியும் வகை எற்றி - மேகங்கள் கிழிபடும்படிமோதி, மிசை ஒளிரும் - மேலே (ஆகாயத்திலே) விளங்குகின்ற, நவரத்நகண கிரண உடுவை - ஒன்பது வகை இரத்தினங்களின் இனங்கள் போன்ற (பல்வேறு நிறத்தனவான) ஒளியையுடைய நட்சத்திரங்களை, கவர்வ - (துதிக்கையாற்) பறிப்பன; போர் - யுத்தஞ்செய்கையில், விழி வழி - கண்களின் வழியாக, நெருப்பு உருகி வழிய - கோபத்தீ வெளிப்பட்டுப் பெருகவும், நுதலில் - நெற்றியிலே, திலகம் - சிந்தூரத்திலகம், வெயில் வழிய - சூரிய காந்தி போன்ற காந்தி வீசவும், முற்றும் நிலவே வழியும் மதியத்தின் வகிர் நிகர் பணை மருப்பினிடை - முழுவதும் நிலாப் பொழிகிற சந்திரனது துண்டங்களைப்போன்ற பருத்த தந்தங்களிலே, மகரிகை தரித்த - கிம்புரியென்னும் பூணை அணிந்துள்ளன; (எ-று.) —இதுமுதல் 29-ஆம் பாடல் வரையிலும் சந்தக்குழிப்புக்கு ஒத்து வருதலால், சந்தவிருத்தமாம்.

உவமையணியையும் உயர்வுநவிற்சியணியையும் அங்கமாகக் கொண்டு வந்த தன்மைநவிற்சியணி. மேகம் - யானைக்கும், இளவெயில் - செந்நிறப்புள்ளிக்கும் உவமை; கருமை பெருமைகளாலும், ஆரவாரத்தாலும், மதமழை பொழிதலாலும் விரைந்து செல்லுதலாலும், யானைக்கு மேகம் உவமையாம். இளவெயில்-பாலசூரியகிர

ணம். பனைமரம் - துதிக்கைக்குத் திரண்டு உருண்டு நீண்ட வடிவத்தால் உவமம். 'பணைக்கை' என்ற பாடத்துக்கு - பருத்த கையென்க. 'மிசை' என்பதை மத்திமதீபமாக, 'எற்றி' என்பதனோடும் இயைக்கலாம்; "நாணிரைத்தநேக தாரகா கணமா நவமணியுடனவிதங்கொள், கோணிரைத்து" என இந்நூற் சிறப்புப்பாயிரத்தும் நட்சத்திரங்கள் நவரத்தினங்களையொக்கு மெனக் கூறியவாறு காண்க. கோபமிகுதியாற் கண்மிகச் சிவந்து கொடுமையாகத் தோன்றுதலை 'விழிவழி நெருப்புருகிவழிய' என்றது. மதியத்தின் வகிர் [பிறைச்சந்திரன்] - தந்தத்துக்கு, வெண்மை யொளிகளாலும் வளைவாலும் ஒப்பாம், மகரிகை - யானைக் கொம்பிற்பூண்; சுறாமீனின் திறந்த வாய்வடிவமாகச் செய்யப்படுவது; மகரமென்பதனடியாகப் பிறந்த காரணப்பெயர்; மகரம் - சுறாமீன். இனி, மருப்பினிடை மகரிகை தரித்த-இரண்டு தந்தங்களின் நடுவிலே (துதிக்கைமேலே) மகரிகாபத்திரத்தைத் தரித்தனவென்றும் பொருள் கொள்ளலாம். அது - சுறாமீன் வடிவமாக எழுதப்படும் ரேகை, 'பனைக்கைகொடு' என்பதை 'உடுவைக்கவர்வ' என்பதேனொடுங் கூட்டுக. (383)

## 23.—இது – அசுவ வருணனை.

யவனசவனத்தினிடைவளர்வனகதத்தினெடுமிரவிபுரவிக்குநிகர்வ, புவனதலமுற்றுமுடன்வளையவொரிமைப்பொழுதில் வருவனபுறப்புணரியைக், கவனமொடெழுப்பிவிடுதுகள்கொடுதுகிர்ப்பவிரைகதிகளின் விதத்தைமொழியிற்,பவனகதியைத்தொடர்வபரிமளவுயிர்ப்புடையபல வகைநிறத்தபரிமா.

(இந்நூலாசிரியர் இங்குத் தேருக்கு முன் குதிரையை நிறுத்தினது, சேனையின் அங்கங்கள் நான்கனுள் தான் ஒன்றாக இருப்பது மாத்திரமேயன்றி மற்றோரங்கமாகிய நிலைத்திணைப் பொருளான தேரை நடத்துவதாயு மிருக்குஞ் சிறப்புப்பற்றி யெனக்காண்க.)

(இ - ள்.) பரிமா-குதிரைகள்,—யவனம் சம் வனத்தின் இடை வளர்வன - யவனதேசத்தி லுண்டான காடுகளின் இடையிலே வளருந்தன்மையன; கதத்தின் நெடும்-(போரில்) உக்கிரமான தன்மையோடு (கூடி), இரவி புரவிக்கு நிகர்வ - சூரியனது தேர்க்குதிரைக்கு ஒப்பாவன: ஒர் இமைபொழுதில்-ஒரு மாத்திரைப்பொழுதினுள்ளே, புவன தலம் முற்றும் - பூலோகத்தினிடம் முழுவதும், உடன் வளைய வருவன - விசைவிற் சுற்றிவருந் தன்மையன: கவனமொடு எழுப்பி விடு துகள் கொடு - (தமது) நடைவேகத்தால் மேலே கிளப்பி விடப்பட்ட புழுதிகளால், புறம் புணரியை - இவ்வண்டத்துக்கு வெளியிலுள்ள பெரும்புறக்கடலையும், துகிர்ப்ப - தூர்க்குந் தன்மையன; விரை கதிகளின் விதத்தைமொழியின் - வேகமான நடைகளின் தன்மையைச் சொல்லப்புக்கால், பவனம் கதியை தொடர்வ - காற்றின் சஞ்சாரத்தைப் பின்தொடருந் தன்மையன; பரிமளம் உயிர்ப்பு உடைய - நல்மணத்தையுடைய சுவாசத்தையுடையன; பலவகை நிறத்த - அநேகவித வர்ண முடையன; (எ - று.) 'பலமலர் நிறத்த' என்றும் பாடம்.

எப்பொழுதும் வேகமாகவே சென்று கொண்டிருந்தாலுஞ் சிறிதும் இளைப்புறாத தன்மையில் இரவி புரவி, உவமை. உவமையணியும் உயர்வுநவிற்சியணியும் விரவியது. கதத்தினொடும் - வலிமையோடும் என்றுமாம்: இமைப்பொழுது - இயற்கையில் மனிதன் ஒருகால் கண்ணிமைகளை மூடித்திறக்குங் காலம். அண்டத்துக்கு உள்ளேயிருக்கும் ஏழு கடல்களன்றி அண்டத்துக்கு வெளியே எல்லா அண்டங்களுக்கும் ஆதாரமாக இருப்பதொரு பெரு வெள்ளத்துக்குப் பெரும் புறக்கடலென்று பெயர்; புணரி - (நதிகளோடு) புணர்வது எனக் காரணப்பெயர்; புணர்தல் - கலத்தல். நதிகளாகிய பெண்களுக்குக் கடலைக் கொழுநனென்றல், கவிமரபு. துகிர்ப்ப - தூர்ப்ப என்பதன் மரூஉ; தனித்தனி ஒவ்வொரு நிறமுடையனவும், ஒவ்வொன்றே பலநிறங் கலந்துள்ளனவும் ஆகிய எல்லாம் அடங்க, 'பல வகை நிறத்த' என்றார். இனி யவன, சவனத்தினிடை வளர்வன என்பதற்கு - யவனக்குதிரைகளுள்ளும் ஜவனக்குதிரைகளுள்ளும் வளர்ந்த தோற்றமுடையனவென்றும் உரைக்கலாம்; யவநம் - யவநதேசத்துக் குதிரை: ஜவநம் - ஜவத்தால் மிக்கது; ஜவம் - வேகம். (384)

## 24.—இது இரத வருணனை.

நடுநிலமுரைக்கிலுயரவனிதலமொக்குமிசை நவமணியழுத்தியனவா, னுடுநிகரமொக்குமுருளுருளைகளருக்கனுடனுடுபதியையொக்குமகுடங், கொடிமுடிகளொக்குமிவுளிகடிசையனைத்துமெறிகுரைபவனமொக்குமடைவே, யிடுதுகினிரைத்தகொடிசொரியருவியொக்குமெழுகுலகிரிகளொக்குமிரதம்.

(இ - ள்.) (அங்குள்ளதேர்களின்), நடு நிலம் - நடுவிடத்தை, உரைக்கில் - கூறத்தொடங்கினால், உயர் அவனி தலம் ஒக்கும் - (அது) உயர்ந்த பூமியின் பரப்பை ஒத்திருக்கும்; மிசை அழுத்தியன நவ மணி - மேலே பதித்துள்ள ஒன்பது வகை இரத்தினங்கள், வான் உடு நிகரம் ஒக்கும் - ஆகாயத்திற்பொருந்திய நட்சத்திரங்களின் கூட்டத்தைப்போலும்; உருள் உருளைகள் - சுழலுந்தன்மையனவான சக்கரங்கள், அருக்கனுடன் உடுபதியை ஒக்கும் - சூரியமண்டலத்தோடு சந்திரமண்டலத்தையும் போலும்; மகுடம் - சிகரங்கள், கொடி முடிகள் ஒக்கும் - மலைச்சிகரங்களைப்போலும்; இவுளிகள் - (பூட்டிய) குதிரைகள், திசை அனைத்தும் எறி - எல்லாத்திக்குகளிலும் வீசுகிற,குரை பவனம் - ஒலிக்கின்ற காற்றை, ஒக்கும்—; அடைவே இடு - வரிசையாகக் கட்டப்பட்ட, துகில் நிரைத்த - சீலைகள் ஒழுங்கமையப்பெற்ற, கொடி - துவசங்கள், சொரி அருவி ஒக்கும் -(மலைச்சிகரத்தினின்று) பெருகுகிற நீர்ப் பெருக்கைப்போலும்; இரதம்-(இவற்றோடு கூடிய) தேர்கள், எழு குலகிரிகள் ஒக்கும் - ஏழு குலபருவதங்களையும் போலும்; (எ - று.)

தேர்க்குக் குலகிரி உயர்வு வலிமைகளுக்கு உவமை: உவமையணி, இக்கவியிலுள்ள 'ஒக்கும்' என்ற முற்றுக்கள் பலவற்றுள் இறுதியிலுள்ள தொன்றொழியப் பிறவற்றையெல்லாம் 'ஒப்ப' என

முற்றெச்சமாகக் கொண்டு ஏகவாக்கியமாக்கிப் பொருள் கூறினுமாம். நடுநிலம் - வீரன் ஏறி வீற்றிருக்கு மிடம். தக்ஷமகாமுனிவனது பெண்களான அசுவினி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களையுஞ் சந்திரன் மணஞ்செய்து கொண்டன னாதலால், அவனுக்கு 'உடுபதி' என்று ஒரு பெயர். (385)

## 25.—இது-பதாதி வருணனை.

அரவின்விடமொத்தவெரிசினமுநிலைபெற்றுடையவசலநிகரொத்த மனமும், புரவியுடனொத்தகதிவிரைவுமுருமொத்தவதிர்குரலுமெழு வொத்தபுயமு, முரவனிலமொத்தவலியுரமுமதனொத்தவொளியுருவமு மனைத்தும்விரவிப், பரவைமணலொத்தபலவணிபடவகுத்தபலபடை யுடனடக்குநடையார்.

(இ - ள்.) அரவின் விடம் ஒத்த - பாம்பின் விஷத்தைப் போன்ற [தவறாது கொல்லவல்ல], எரி சினமும் - பற்றியெரியுங் கடுங்கோபமும், நிலை பெற்று உடைய - சலியாமல் (உறுதியாக) நிற்றலைப் பெற்றுள்ள, அசலம் - மலையை, நிகர் ஒத்த-சமானமாகப் பொருந்தின, மனமும் - (எதற்குஞ் சலியாத உறுதி) நெஞ்சும், புரவி யுடன ஒத்த - குதிரைகளோடு சமமான, கதி விரைவும் - நடையின் வேகமும், உரும் ஒத்த - இடிமுழக்கத்தைப்போன்ற, அதிர் குரலும்- கர்ச்சிக்கிற ஒலியும், எழு ஒத்த - தூண்களைப் போன்ற, புயமும் - தோள்களும், உரம் அனிலம் ஒத்த - வலிமையையுடைய காற்றைப் போன்ற [எதையுந் தாங்கவல்ல], வலிஉரமும் - வலிமையையுடைய மார்பும், மதன் ஒத்த - மன்மதனைப் போன்ற [மிக அழகிய], ஒளி உருவமும் - பிரகாசத்தையுடைய வடிவமும், அனைத்தும் - (ஆகிய இவை) எல்லாம், விரவி - கலந்து, பரவை மணல் ஒத்த பல அணி பட வகுத்த - கடற்கரையின் மணலைப் போன்ற [அளவிறந்த] மிகப் பல அணிகளாக வகுக்கப்பட்ட, பல படையுடன் நடக்கும் - அநேக ஆயுதங்களுடனே செல்லுகிற, நடையார்-காலாள்கள், (அச்சேனையி லிருந்தனர்; (எ - று.)

ஏற்றவினை வருவித்து முடிக்கப்பட்டது. நடையான் என்ற பாடத்துக்கு - பதாதிக்கூட்ட மெனச் சாதியைக்குறிப்பதாகக் கொண்டு, 'ஒத்த' என்பதை வினைமுற்றாக்கி யுரைக்கவுமாம். அசலம் - சலியாதது; காரணப்பெயர். உரம் வல் நிலம் ஒத்த எனப் பிரித்து - மிக்க வலிமையையுடைய நிலத்தைப்போன்ற மிக்க வலிமை யென்று உரைப்பாரு முளர். மதன் - மதநன், அல்லது மந்மதன் என்பதன் விகாரம். படையுடன் - சேனையுடன் என்றுங் கொள்ளலாம், நடையார் - நடையுடையவர்; எனவே, பதாதியாவர், உவமையணி. எழு - புயத்திற்குத் திரண்டு உருண்டுநீண்ட தன்மை யால் உவமம். (186)

## 26.—இது - ராஜ வருணனை.

குடைநிலவெறிக்கவிருபுறமுமசைபொற்கவரிகுளிர்நிலவெறிக்க வெறிகைப், படைவெயிலெறிக்கவணிமுடியுடன்மணிப்பணிகள்பல

வெயிலெறிக்கவுடனே, யிடையிடையெடுத்தகொடிநிரையிருளெறிக்க
யெழுதுகளிருளெறிக்கவெழுபா, ரடையவொர்தினத்தின்வலம்வரு
திகிரியொத்தனர்களவனிபரெனைப்பலருமே.

(இ - ள்.) குடை—, நிலவு எறிக்க - சந்திரகாந்திபோன்ற ஒளியை வீசவும், இருபுறமும் அசை பொன் கவரி - இரண்டு பக்கத்திலும் வீசுகிற அழகிய சாமரமும், குளிர் நிலவு எறிக்க - குளிர்ந்த சந்திரகாந்திபோன்ற காந்தியை வீசவும், எறி கை படை - (பகைவர்மேற்) பிரயோகித்தற்கு உரிய கையிலுள்ள ஆயுதங்கள், வெயில் எறிக்க - சூரியகாந்திபோன்ற காந்தியை வீசவும், அணி முடியுடன் மணிபணிகள் பல - அழகிய கிரீடத்தோடு இரத்தினங்கள் பதித்த பிற ஆபரணங்கள் அநேகமும், வெயில் எறிக்க-சூரிய காந்திபோன்ற காந்தியை வீசவும், உடனே - (இவற்றோடு) கூட, இடை இடை எடுத்த கொடி நிரை - நடுவிலே நடுவிலே தூக்கிப்பிடிக்கப்பட்ட துவச வரிசைகள், இருள் எறிக்க - இருளைச் செய்யவும், எழு துகள் - (சேனைகளால்) எழுப்பப்பட்ட தூளிகளும், இருள் எறிக்க - இருளைச் செய்யவும், அவனிபர் எனை பலரும் - அரசர்களெல்லோரும், எழு பார் அடைய ஓர் தினத்தின் வலம்வரு திகிரி ஒத்தனர்கள் - ஏழுதீவுகளாகிய பூமிமுழுவதையும் ஒருநாளிலே பிரதக்ஷிணமாகச் சுற்றி வருகிற காலசக்கரத்தைப் போன்றார்கள்; (எ - று.)

காலம் சக்கரம்போல் மாறிமாறிச் சுற்றிவருதல்பற்றி, காலசக்கரமெனப்படும். பொற் கவரி - பொற்காம்பையுடைய சாமரமென்றுமாம்; பொன் - கருவியாகுபெயர். கவரி - சமரீயென்பதன் திரிபு; இப் பெண்மானின் பெயர், அதன் வால்மயிரினாற் செய்யப்பட்டதொரு இராசசின்னத்துக்கு இருமடியாகுபெயர். 'உடனே' என்றது, நிலவு வெயில்களுக்கும் இருளுக்கும் உள்ள மாறுபாட்டை நன்கு விளக்க வந்தது. எழு பார் - ஜம்பு, பிலட்சம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம் என்பன. (387)

## 27.—இது - வாத்தியகோஷ வருணனை.

முழவுமுதலெற்றுவன கடிபடுபணைக்கருவி முழுமணிமுதற்கருவி
பைங், குழன்முதலமைத்தபல வகைபடுதுளைக்கருவி குலவளை நரப்பு
நிரையா, லுழைமுதலெழுப்புவனவிசைபடுமிசைக்கருவி யுழையுழை
யதிர்த்தவுடனே, யெழுகடல் கொதித்ததெனவெழுபுவிமறித்ததென
வெழுமுகிலிடித்ததெனவே.

(இ - ள்.) முழவு முதல் - மத்தளம் முதலாக, எற்றுவன - அடிக்கப்படுவனவான, கடிபடு - ஒலி மிக்க, பணை கருவி - பறைகளாகிய தோற்கருவிகளும், முழு மணி முதல் - பெரிய அடிக்கும் மணி முதலான, கருவி - கஞ்சக்கருவிகளும், பைங்குழல் முதல் - பசுமையான வேய்ங்குழல் முதலாக, அமைத்த - ஒழுங்காகச்செய்யப்பட்ட, பல வகை படு - அநேகவகைப்பட்ட, துளை கருவி - துளையுடைக்கருவிகளும், குலம் வளை - சிறந்த சங்குகளும், நரம்புநிரையால் - நரம்புகளின் வரிசையால், உழை முதல் எழுப்புவன இசை படும் - உழை முதலாக எழுப்பப்படுகிற (ஏழுவகைச்) சுரங்கள் பொருந்தின, இசை

கருவி - சங்கீதக்கருவிகளும், உடனே - ஒன்றாக, எழு கடல் கொதித்தது என - ஏழு கடல்களும் பொங்கியது போலவும், எழு புவி மறித்தது என - ஏழு தீவுகளும் எதிர்த்தது போலவும், எழுமுகில் இடித்தது என - ஏழு மேகங்களும் இடிமுழங்கியது போலவும், உழை உழை அதிர்த்த - (அச்சேனையின்) இடந்தோறும் ஒலித்தன; (எ - று.)

இதில்-தோற்கருவி, கஞ்சக்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி என்னும் நால்வகை இசைக்கருவிகளுங் கூறப்பட்டமை காண்க. உழை முதல் எழுப்புவன இசை - உழை, இளி, விளரி, தாரம், குரல், துத்தம், கைக்கிளை, என்பன. நரப்புக்கருவி - யாழ் முதலியன. உழைஉழை - அடுக்கு, தொறுப்பொருளது. (388)

## 28.—இது-துரியோதனனது பாம்புக்கொடியின் வருணனை.

முறைமைதவறற்றகடிமுரசெழுதுபொற்றுவசமுதல்வனுயிர்மைத் துனமையால், விறலுதவுதற்குவருகரியவன்மணித்துவசமிசைகருட னிற்குமெனவோ, வெறிகொளுருமுத்துவசன்மதலைவிதலைச்சமரினிறு தியைவிளைக்குமெனவோ, வறைவளியெதிர்த்துவரவெருவொடுபுறக் கிடுவதரசனுரகத்துவசமே.

(இ - ள்.) முறைமை தவறு அற்ற - நீதி தவ்றுதலில்லாத, கடி முரசு எழுது பொன் துவசம் முதல்வன் - ஒலிக்கின்ற பேரிகைவடிவத்தை யெழுதின அழகிய கொடியையுடைய தலைவனை யுதிஷ்டிரனது, உயிர் மைத்துனமையால் - உயிரோடொத்த [மிக்க அன்புக்கிடமான] மைத்துன உரிமையால், விறல் உதவுதற்கு வரு - (அவனுக்கு) வெற்றியைத் தருதற்கு வருகிற, கரியவன் - கருநிறமுடைய் கண்ணபிரானது, மணி துவசம் மிசை - அழகிய கொடியின்மேலே, கருடன் நிற்கும் - (எனக்கு இயற்கைப்பகையான) கருடன் நிற்பான், எனவோ - என்று எண்ணியோ? வெறிகொள் - யுத்தாவேசத்தைக் கொண்ட, உருமு துவசன் மதலை - (எனக்குப்பகையான) இடியை யெழுதிய கொடியையுடைய இந்திரனது குமாரனை அருச்சுனன், விதலை சமரின் - (காண்பவர் கேட்பவருக்கு அச்சத்தால்) நடுக்கத்தைத்தருகிற போரிலே, இறுதியை விளைக்கும் - (முன்காண்டவதகன காலத்தில் சிறந்த பாம்புகளை அழித்ததுபோல எனக்கு) அழிவை யுண்டாக்குவான், எனவோ - என்று எண்ணியோ? வெருவொடு - அச்சத்தோடு, அரசன் உரகம் துவசம்-துரியோதன ராசனது பாம்புக்கொடி, அறை வளி எதிர்த்து வர - வீசுகிற காற்று எதிர்முகமாய் வருகையில், புறக்கு இடுவது - பின்னுக்குச் செல்வது; (எ - று.)

துரியோதனனது தேர் மிக விரைவாகச் செல்லுகையில் வீசும் எதிர் காற்றால் அத்தேரின்மீதுள்ள பாம்புக்கொடி இயற்கையாக அசைந்து பின்னிடுதலை, அக்கொடியிலுள்ள பாம்பு சிலகாரணங்களால் அஞ்சிப் புறங்கொடுப்பதாகக் கற்பித்துக் கூறினர்; இது ஏதுத்தற்குறிப்பேற்றவணி. கரிய்வன் - க்ருஷ்ணன். புறத்துக்கு என்

பது புறக்கு என அத்துச்சாரியையின்றிவந்தது. 'பிறக்கிடுவது, என்ற பாடத்துக்குப் பிறகு இடுவது என்பது தன்ஞெற்றிரட்டிற்று என்னலாம்: இனி 'பிறக்கு' என ஒரு தனிச் சொல்லுங் கொள்ள லாம்: 'புறத்திடுவது' என்றும் பாடம். கருடனென்னும் சொல் லுக்கு - (பெரிய) சிறகுகளாற் பறப்பவனென்று பொருள். (389)

## 29.—இது – சேனையாலெழுப்பப்பட்ட தூளியின் வருணனை.

உயர்முறைமைதப்புமவர்குடைநிழலிலிற்றையளவுளகுறையகற்றி யினிநா, னியல்புடைநெறித்தருமனெருகுடைநிழற்றவவனிடையினி லிருக்குவனெ, வியனதிமுழுப்புனலின்முழுகிவருதற்கவனிமிசையுற நடப்பதெனவே, பயில்படைநடக்கவதன்முகடுறநிறைத்தரிய பகலையு மறைத்ததுகளே.

(இ - ள்.) 'உயர் முறைமை தப்புமவர் - சிறந்த இராசநீதி தவறுந்தன்மையுள்ள துரியோதனனுதியரது, குடை நிழலில்-அரசாட் சியின்கீழே, இற்றை அளவு உள - இன்றைத்தினமளவும் (நான்) இருந்த, குறை - குற்றத்தை, அகற்றி - ஒழித்து, இனி—, நான்—, இயல்பு உடைய நெறி தருமன் - முறைமை தவருமலுள்ள நீதிமார்க் கத்தையுடைய யுதிட்டிரன், ஒரு குடை நிழற்ற - ஒப்பற்ற அரசாட் சியைச் செய்ய, அவன் இடையினில் - அவனது குடை நிழலினிடத் திலே, இருக்குவன் - இருப்பேன்', எனு-என்று எண்ணி, அவனி- பூமியானது, வியன் நதி முழு புனலில் முழுகிவருதற்கு - பெரிய தேவகங்கா நதியினது மிக்கநீரிலே நீராடிவரும்பொருட்டு, மிசை உற - மேலேபொருந்த [மேல்நோக்கி யென்றபடி], நடப்பது என - செல்வதுபோல, பயில்படைநடக்க - (போரைப்) பயில்கிற[பழகிய] சேனைகள் செல்லுகையில், துகள் - புழுதிகள், அதன் முகடு உற நிறைத்து - அவ்வாகாயத்தின் மேலிடத்தை அளாவ மிக்கெழுந்து, அரிய பகலையும் மறைத்த - மறைப்பதற் கருமையான சூரியனொளி யையும் மறைத்து விட்டன; (எ - று.)

சேனைகள் ஒருங்கே பூமியின்மேல் நடத்தலால் மேலெழும்பின புழுதிகள் இயல்பாக ஆகாயத்தைநோக்கிச் செல்லுதலை, துரியோ தனனுளுகையின் கீழ் தான் இருந்த தோஷத்தை நிவிருத்திசெய் தற்கு ஆகாசகங்காநதியில் நீராடும்பொருட்டுப் பூமிதேவி மேலே சென்றதாகக் கற்பித்துக் கூறினதனால், இதுவும் ஏதுத்தற்குறிப் பேற்றவணி. வியனென்னும் உரிச்சொல் விசாலமென்னும் பொரு ளுணர்த்தும். "வியனென கிளவி யகலப்பொருட்டே": வியல் எனப் பதம் பிரித்தாலும் பொருள் இதுவே; இனி, வியனதி, வியத் - வானத்திலுள்ள, நதி - ஆகாசகங்காநதி யென்க. (390)

## 30.—இது - இருதிறத்துச் சேனைத்தொகை வருணனை.

பொருபடைகொடிப்படை புறப்படுபெரும்படைபுகுந்து குருபூமி யுறவே, யிருபடையுமொத்துடனெருங்கினசுராசுரரெதிர்ந்துபொருபூச லெனவே, யொருபடையெனப்படமொராயிரமுநொந்துரகனுரநெரிய வேழுலகமும், வருபடைநிலத்தினிடை வந்தளவில் வேறுததிவைய மெனதாய்முடியுமே.

(இ - ள்.) (துரியோதனுதியரது), பொரு படை - போர்செய்ய வல்ல (நடுவிலுள்ள) சேனைகளும், கொடி படை - முன்னணிச் சேனைகளும், புறம் படு பெரு படை - பின்னே வருகிற பெரிய [பின்னணிச்] சேனைகளும், குரு பூமி - குருக்ஷேத்திரத்தில், புகுந்து உற - போய்ச் சேர, (இவ்வாறு), இருபடையும் - (பாண்டவகௌரவரது) இருதிறச் சேனைகளும், சுர அசுரர் எதிர்ந்து பொரு பூசல் என - தேவர்களும் அசுரர்களும் (தம்மில்) எதிரிட்டுச்செய்யும் போர்போல, உடன் ஒத்து நெருங்கின - விரைவாக ஒருங்கு அடர்ந்தன; (இங்ஙனம்), ஏழு உலகமும் வரு படை - ஏழு தீவுகளிலும் பொருந்தின சேனைகள், ஒரு படை என-ஒரே திரளாக, உரகன் படம் ஓர் ஆயிரமும் நொந்து உரம்நெரிய - (கீழிருந்து பூமியைத் தாங்கும்) ஆதிசேஷன் (பாரமிகுதியால்) தனது ஆயிரம் படங்களும் வருந்தி மார்புஞ் சிதையும்படி, நிலத்தினிடை வந்த அளவில் - குருக்ஷேத்திரத்திலே [யுத்தகளத்திலே] வந்தமாத்திரத்தில், உததி வையம் - உவர்க்கடல் சூழ்ந்த இந்தச் சம்பூத்துவீபம், வேறு எனது ஆய்முடியும் - வேறே எத்தன்மையதாய் முடியும்? (எ - று.)

என்றது, ஏழுதீவுச் சேனைகளும் ஒரு தீவில் ஓரிடத்தில் ஒருங்கு திரளவே அப்பூமி அதிபாரத்தால் மிகத்தளர்ந்தது என்றவாறும். பாண்டவரது சேனைக்குத் தேவசேனையும், துரியோதனுதியரது சேனைக்கு அசுர சேனையும் உவமையாம். உரம் நெரிய - வலிமையொழிய என்றுமாம். உததி - நீர் தங்குமிடம்; உதம்-நீர்; உதக மென்பதன் விகாரம். 'வந்தளவிலேயுததி' என்றும் பாடம். (391)

## 31.—இருதிறத்துச் சேனை முழுவதையும் அழிக்க எவ்வளவு நாள்செல்லும் என்று துரியோதனன் வீடுமனை வினவுதல்.

எண்ணறுபரப்பினிடையோசனைகளத்தினிடையிருபடையுநிற்ப
வெவருந், துண்ணெனவெருக்கொள முனின்றருள்பகீரதிசுதன்றனைவி
யாளதுவசன், கண்ணெதிர்நிரைத்தபடையாவையுமுருக்கியுயிர்கவர
வெதுநாள்செலுமெனப், பண்ணளிநெருக்கொழிய மாதரிருகண்ணளி
படாததொடைமீளிபகர்வான்.

(இ - ள்.) (இவ்வாறு) களத்தினிடை - போர்க்களத்திலே [குருக்ஷேத்திரத்திலே], எண் அறு யோசனை பரப்பினிடை-அளவில்லாத [மிகப்பலவான] யோசனையளவுகொண்டபரந்தஇடத்திலே, இருபடையும்-இருதிறத்துச் சேனைகளும், நிற்ப-(போருக்குச் சித்தமாய்)நிற்க, (அப்பொழுது), வியாள துவசன் - பாம்பையெழுதின கொடியையுடைய துரியோதனன், எவரும் துண்ணென வெருகொள முன் நின்றருள் பகீரதி சுதன்தனை - (கண்டவர்) எல்லோரும் திடுக்கிட்டு அச்சமடையும்படி (தனது சேனையின்) முன்னிடத்திலே (தன்னிடத்துக்) கருணையோடு (முதற்சேனுதிபதியாய்) நிற்கின்ற கங்கையின் குமாரனை வீடுமனைநோக்கி, கண் எதிர் - (நமது) கண்ணுக்கு எதிரிலே, நிரைத்த - அணிவகுக்கப்பட்டுத் திரண்டுள்ள, படை யாவையும் - சேனைகளெல்லாவற்றையும், முருக்கி - அழித்து, உயிர் கவர - உயிரை வாங்குவதற்கு [கொல்ல], எதுநாள்செலும்-

எத்தனைநாள் பிடிக்கும்? என - என்று வினவ, பண் அளி நெருக்கு ஒழிய மாதர் இரு கண் அளி படாத தொடைமீளி-இசைபாடுகின்ற வண்டுகள் நெருங்கிமொய்த்தல்உளதேயன்றி மகளிரது இரண்டு கண்களாகிய வண்டுகள் வந்து பொருந்துதலில்லாத மாலையை யுடைய வீரனான வீடுமன், பகர்வான் - (அதற்கு உத்தரம்) கூறு வான்; (எ - று.)—அதனை மேற்கவியிற் காண்க.

யோசனை, காதம் என்பன ஒரு பொருளன. பகீரதி-பகீரதனாற் கொணரப்பட்டதென்று பொருள்; பகீரதன் - சூரியகுலத்துப் பிரசித்தனான ஓரரசன்; இவன், கபில முனிவரது சாபத்தாற் சாம்ப ரானவரும் சகரசக்கரவர்த்தி குமாரரும் தனது பாட்டனுக்குச் சிற் றப்பன்மாருமாகிற அறுபதினாயிரவரை நற்கதி பெறுவித்தற் பொருட்டுத் தேவலோகத்திலிருந்து ஆகாச கங்காநதியைக் கீழுல கத்துக்குக் கொணர்ந்தானென வரலாறு காண்க. படையாவையும் என்றது, இருதிறத்துச் சேனைகளையும் என்றபடி. "பண்ணளி நெருக்கொழிய மாதரிரு கண்ணளிபடாத தொடை மீளி" என்ப தற்கு, பெண்களுக்குச் சிறிதும் வசப்படாமல் நித்திய பிரமசாரி யாகவே நின்ற சூரனென்று கருத்து: மிக்க வைராக்கியமுடையவனை மங்கையர் காதலித்து நோக்குதலுஞ் செய்யார். தொடை என்றது - அடையாளப் பூமாலை, போர்ப் பூமாலை என்ற இரண்டையும். (392)

## 32.—வீடுமன் கூறும் மறுமொழி.

ஒருபகலில்யான்மலைவன்முப்பகலிலேமலைவனுபநிடதவிற்கைமுனி யும், வருபகலொரைந்தின்மலைவன்பரிதிமைந்தன்முனிமைந்தனொரு நாழிகையினிற், பொருபடையடங்கமலையும்புவியும் வானெடுபுரந்தர னிருந்தவுலகும், வெருவரமுனைந்தொரு கணத்தினிடையே மலைவன் வில்விசயனென்றனனரோ.

(இ - ள்.) 'பொரு படை அடங்க - போர் செய்யவல்ல இச் சேனைகள் முழுவதையும், யான் - நான், ஒரு பகலில்-ஒரு தினத்திலே, மலைவன் - போர் செய்து கொல்லவல்லேன்; உபநிடதம் - வேதாந் தத்தை யறிந்த, வில் கை - வில்லையேந்திய கையையுடைய, முனியும் - துரோணாசாரியனும், முப் பகலிலே - மூன்று தினத்திலே, மலைவன் - போர்செய்து கொல்லவல்லான்; பரிதி மைந்தன் - சூரியபுத்திரனான கர்ணன், வரு பகல் ஒர் ஐந்தில் - அடுத்துவருகிற ஒரு அஞ்சுதினத் திலே, மலைவன்—; முனி மைந்தன் - துரோணபுத்திரனான அசுவத் தாமன், ஒரு நாழிகையினில் - ஒரு நாழிகைப்பொழுதிலே, மலையும் - போர் செய்து கொல்லவல்லான்; வில் விசயன் - (காண்டீவமென்னும்) வில்லையேந்திய அருச்சுனனோ எனின், புவியும் - பூலோகத்து உயிர்க ளும், வானொடு - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பிராணிகளும், புரந் தரன் இருந்த உலகும - இந்திரன் வீற்றிருக்கிற சுவர்க்கலோகத் தார்களும, வெருவர - அஞ்சும்படி, முனைந்து - எதிர்த்து, ஒரு கணத்தின் இடையே - ஒருக்ஷணப்பொழுதினுள்ளே, மலைவன்—;' என்றனன் - என்று (வீடுமன் துரியோதனனுக்குக்) கூறினான்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

இதில், அவரவர்க்குப் போர்த்திறத்து உள்ள தாரதமியம் [ஏற்றத்தாழ்வு] விளங்குவது காண்க; உபநிஷதம் - வேதத்தின் சாரமான பாகம்; வேதத்தின் முடிவென்றும், பிரமகாண்டமென்றுங் கூறப்படும்; இது - பகவானைப்பற்றிக் கூறுவது. புரந்தான் - (பகைவரது) பட்டணங்களை (அல்லது) உடம்புகளை அழிப்பவன்; புரம் - ஊரும் உடலுமாம். (393)

## 33.—எதிர்ப்பக்கத்துச் சேனையிலுள்ளவர் யாவரும் தனக்கு நெருங்கிய உறவினராயிருந்தது கண்டு அருச்சுனன் கலங்குதல்.

யானையொடுதேர்புரவியாளிவையநேகவிதமெண்ணரியதானையுடனே, சேனைமுதலாய்முனையினின்றருள்பிதாமகனுமற்றுளசெழுங்குரவருந், தானைநெடுவாரியிடைதேரிடையருக்கனென நின்றதுரியோதனனும்வான், மீனைநிகர்கேளிருமணிந்தநிலைகண்டுருகிவிபுதபதிமைந்தன் மொழிவான்.

(இ - ள்.) யானையொடு - யானைகளும், தேர் - தேர்களும், புரவி - குதிரைகளும், ஆள் - காலாட்களும், இவை - என்னும் இவற்றுலாகிய, அநேகம் விதம் - பலவகைப்பட்ட, எண் அரிய - அளவிடவொண்ணாத, தானையுடனே - சேனைகளுடனே, சேனை முதல் ஆய் முனையில் நின்றருள் பிதாமகனும் - சேனைத் தலைவனாய்ச் சேனாமுகத்தில் நின்றருள்கிற (தன்பெரிய) பாட்டனான வீடுமனும், மற்றுமுள செழு குரவரும் - (துரோணாசாரியன் கிருபாசாரியன் அசுவத்தாமன் முதலாக) மற்றுமுள்ள சிறந்த பெரியோர்களும், தானை நெடுவாரியிடை தேரிடை அருக்கன் என நின்ற துரியோதனனும் - சேனையாகிய பெரிய கடலிலே தேர்மீது சூரியன்போல நின்ற துரியோதனனும், வான் மீனை நிகர் கேளிரும் - நட்சத்திரங்களையொத்த [அநேகரான] (சல்லியன் துச்சாதனன் விகர்ணன் சயத்திரதன் சகுனி முதலான) உறவினர்களும், அணிந்த - வரிசை வரிசையாக நின்ற, நிலை - நிலையை, கண்டு - (எதிரிற்) பார்த்து, விபுதபதி மைந்தன் - தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனது புத்திரனான அருச்சுனன், உருகி - (இவர்களோடு எங்ஙனம் போர் செய்வதென்று) மனங்கரைந்து, மொழிவான் - (கண்ணனை நோக்கிக்) கூறுவான்; (எ - று.)

எதிர்வந்து நின்ற வீரர்யாவரும் பாட்டனும் அண்ணன் தம்பிமாரும் மாமனும் மற்ற உறவினரும் கல்விபயிற்றிய ஆசாரியரும் நண்பர்களுமாக விருக்கக் கண்டு அருச்சுனன் மனம் மாறிக் கூறுகிறான். குரவர் - குரு என்பதன் பன்மையான, குரவ: என்னுஞ்சொல் ஈறு திரிந்தது, வாரி - நீர்; கடலுக்கு இலக்கணை. அளவிறந்த பரப்பும் ஆரவாரமும் அணியணியாக வருதலும் அச்சந்தருதலும் பற்றிக் கடலைச் சேனைக்கும், கடலினிடையில் தேரின் மீதுசிறந்துவிளங்குதல் பற்றிச் சூரியனைத் துரியோதனனுக்கும், அளவிறந்து நெருங்கிவிளங்குதல் பற்றி நட்சத்திரங்களைச் சுற்றத்தார்க்கும் உவமை கூறினர். (394)

## 34.—உற்றாரைக் கொல்லப் பின்வாங்கி அருச்சுனன் போர் செய்யமாட்டேனெனல்.

நின்றமர்தொடங்கநினைகிற்பவர்பிதாமகனுநீள்கிளைஞருந்துணைவருங், கொன்றிவரைவாகுவலியிற்கவர்வதித்தரணிகொள்பவனுமென்றுணைவனே, யென்றுபலபேசியதிபாதகமெனக்கருதியான்மலைவுறேனினியெனு, அன்றுவசுதேவன்மகனோடுரைசெய்தானமரிலவனுமிவனோடுரைசெய்வான்.

(இ - ள்.) 'நின்று - (எதிரில்) நின்று, அமர் தொடங்க - போரைத் தொடங்கிச்செய்ய, நினைகிற்பவர் - எண்ணியிருப்பவர், பிதாமகனும் - பாட்டனும், நீள் கிளைஞரும் - மிக்க உறவினரும், துணைவரும் - அண்ணன் தம்பிமார்களும், (ஆவர்); இவரை - இவர்களை, வாகு வலியின் - தோள்வலிமையால், கொன்று—, கவர்வது - பறித்துக்கொண்டு அடையப்படுவது, இ தரணி - இந்தப் பூமியாம்; கொள்பவனும் - (அதனை) அடைபவனும், என் துணைவனே - எனது தமையனே,' என்று—, பலபேசி - அநேக வார்த்தைகளைச் சொல்லி, அதி பாதகம் என கருதி - (இவர்களைக்கொல்வது) மிகப்பாவமென்று எண்ணி, இனி யான் மலைவு உறேன் எனு - இப்பொழுது நான் போர்செய்ய மேற்கொள்ளேனென்று, அன்று - அப்பொழுது, அமரில் - யுத்தகளத்தில், வசுதேவன் மகனோடு - வசுதேவ புத்திரனான கண்ணனுடனே, உரை செய்தான் - (அருச்சுனன்)கூறினான்; அவனும்-அந்தக்கண்ணபிரானும், இவனோடு-இவ்வருச்சுனனோடு, உரை செய்வான் - (அதற்கு உத்தரம்) கூறியருளுவான்; (எ - று.)—அதனை, மேல் வீட்டுமபருவ முதற்போர்ச்சருக்கத்தில் இரண்டாங்கவிமுதல் ஆறுகவிகளிற் காண்க. 'உரைசெய்தான் விசயன்' என்றும் பாடம். (395)

அணிவகுப்புச்சருக்கம் முற்றிற்று.

உத்தியோகபருவம் முற்றுப்பெற்றது.



# செய்யுண் முதற்குறிப்பகராதி

# பிழைத்திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 16 | தூதனுப்ப | தூதனுப்ப |
| 9 | 23 | குதிரை | குதிரை |
| 13 | 7 | யானைக்கு | யானைக்கு |
| 40 | 11 | யோசனை | யோசனை |
| 54 | 17 | உதிரட்டிரன் | உதிட்டிரன் |
| 71 | 43 | புரியசைச் | புரியைச் |
| 86 | 4 | )கொடுப்பான் | கொடுப்பான்) |
| 87 | 13 | சிந்துத்தின் | சிந்துரத்தின் |
| ,, | 14 | சிந்தத்தை | தந்தத்தை |
| 114 | 41 | சகதேவன்- | சாதேவன்- |
| 146 | 19 | கிரீடங்களிள் | கிரீடங்களின் |
| 163 | 39 | வளி | வனி |
| 190 | 32 | போலிப்பெற்று | போலிபெற்று |
| 191 | 39 | முடிவு | மிகமுடிவு |
| 192 | 14 | இருந்து | திருந்து |
| ,, | 15 | மிருந்த | இருந்த |
| 216 | 31 | ஜவரும் | ஐவரும் |
| 217 | 43 | ஓட்டேன் | ஒட்டேன் |
| 235 | 8 | தம் | தன் |
| 258 | 19 | கழிநெடி | கழிநெடி |
| 266 | 32 | துணைவர் | துணைவா |
| 275 | 13 | அவ்வளவிந்த | அவ்வளலீந்த |
| ,, | 15 | வளம் | வளல் |
| 334 | 1 | 434 | 334 |

மற்றும் பிழைகள் காணப்படினும் திருத்திக்கொள்ளவும்.

# அபிதான சூசிகை யகராதி.

அகத்தியன் - விந்தமலையொடுக்கினவன், கிருட் - 198.

அசுவசேனன் - காண்டவவனம் எரிந்தபோது தப்பி அகன்று போன பாம்பு; இதனைக் கர்ணன் ஆசுகமாகக்கொண்டான், கிருட் - 158.

அசுவத்தாமா - துரோணன் மகன்; ஐந்தூர் வேண்டமறுத்ததற்குச் சாட்சியானவன், கிருட்-224; ஞானாதிபன், ஆண்மையில் நிகரற்றவன், கிருட்-225; கண்ணபிரானால் மோதிரம் வீழ்த்திப் பேதிக்கப்பட்டவன், கிருட் - 226 - 229; ஒரு நாழிகையினில் சேனைகளை யடங்கவும் மலையவல்லவன், அணி - 32.

அசுவிநீதேவர்கள் - ஆயுர்வேதமறிந்த தேவவைத்தியர்கள்; இவர்கள் நகுலனையும் சகதேவனையும் அளித்தவர், கிருட்-219.

அசோதை - கண்ணபிரானை வளர்த்த தாய், வாசு - 1.

அபிமன்னு - கண்ணனுடன் பிறந்தவளான சுபத்திரையினிடம் அருச்சுனனுக்குப் பிறந்த புத்திரன்; இளமையிலேயே வில்வித்தையில் ஒப்புயர்வின்றி மிகச் சிறந்தவன், கிருட் - 50.

அருச்சுனன் - விசயன், உலூக-12; தனஞ்சயன், உலூக-15; நரன், உலூக - 18, வாளி வெருநர் மேல் விடான், உலூக - 19. ஐயிருநாமத்தோன், வாசு - 20; சிந்தையிற்கடிய தேரோன், வாசு - 10; இந்திரன் மதலை, கிருட் - 22, 160; குரங்குத் துவசமுடையவன், கிருட்-234. பாண்டவசேனைக்குத் தோள் போன்றவன், அணி - 16; ஒரு கணப்பொழுதினுள் புவியும் வானும் புரந்தானுலகும் வெருவ முனைந்துமலையவல்லவன்; அணி - 32.

இந்திரன் - மகவான், கிருட்-20; முகிலை யூர்தியாகவுடையவன், கிருட் - 22; வச்சிரப்படையால் மலைகளின் சிறகீர்ந்தவன், கிருட் - 195,232; விசயனை நல்கியவன், கிருட் - 219; ஆகண்டலன், கிருட் - 231; வாசவன், கிருட் - 213, புத்தேளரசன், கிருட் - 237; கொண்டல் வாகனன், கிருட் - 243; உருமுத்துவசன், அணி - 28.

இராயசூயம் - அரசர்களனைவரையும் வென்று அவர்தரும் திறைப்பொருள் கொண்டு செய்யப்படுவதொரு பெருவேள்வி, சஞ்-17.

இராவான் - உலூபியென்னும் நாககன்னிகைக்கு அருச்சுனனிடம் பிறந்தவன்; துரியோதனன் படைகளையெல்லாம் ஒரு பகற்பொழுதில் கொல்ல உறுதிகூறி நின்றவன், படை - 12, முகூர்-3: கண்ணனோடு ஒத்த உத்தமவிலக்கண முடையவன், களப்-5; தன்னைப் பலிதந்தானும் சிலநாள் வரையில் உயிரோடிருக்கும்படி கண்ணனிடம் வரம்வேண்டினன், களப்-6. தருமனால் களப்பலியூட்டப்பட்டவன்; கள - 7, 8; உறுப்புகளையறுத்துப் பலிகொடுத்தும் மலர்ந்த தீபமென முகங்கவின நின்றவன், களப்-8.

உத்தமோசா - உத்தமோஜஸ் என்பவன்; துருபதனுக்கு உறவினன்; படை-3.
உத்தரன் - விராடராசன் இளைய மகன், உலூக-19: படை-4.
உதாமன் - யுதாமந்யு: துருபதனுக்கு உறவினன், படை-3.
உலூகன் - தருமன் சொற்படி தூது போனவன், உலூக-7. விராடனது புரோகிதன், நான்மறைவல்லவன், உலூக - 8. பிரமனைப்போன்றவன், உலூக-20: உட்காமியாதமுனி, சஞ் - 18.
கடோற்கசன் - வீமனுக்கு இடும்பியினிடம் பிறந்தவன்; இந்திரன் கர்ணனுக்கு கொடுத்த வேலால் எறியப்பட்டு இறப்பவன், கிருட் - 244.
கன்னன் - சூரியகுமாரன், வாசு-2; உதாரசீலன், அங்கர்கோன், கிருட் - 134; கற்பகபூம்நாண வண்மையிலுயர்ந்தவீரன், கிருட் - 137; வண்மை அருள அழகு ஆண்மை இவற்றிற் சிறக்கப் பேசப்படுபவன், கிருட்-147; கன்னனென்றபெயர் சூரியனுலிடப்பட்டது; கிருட்-154; துரியோதனனுல் வாழ்வளிக்கப் பெற்றவன், வெலற்கரியான், கிருட் - 155; உம்பர் காவளையகையான், கிருட் - 157; வரம்பெற்ற கவசகுண்டலம் புனைந்தவன், அவை யிருக்கும் வரையில் அவனைஉயிர்செகுப்பாரிலர், கிருட்-234: எல்லார்க்கும் கொடுப்பவன்,கிருட்-235: தானுகான், எதையும் மறுத்தறியாதவன், உயிரேயெனினும் ஈந்திடுபவன், கிருட்-236: செஞ்சோற்றுக்கடன் கழிப்பதுவே புகழும் கருமமும் தருமமுமென்றவன், கிருட்-255: தழுகணாவலர்க்கும் தழுகனுனவர்க்கும் தண்ணளி நிறைந்த செங்கண்ணுன், கிருட் - 259: அர்த்தரதனுக வைக்கப்பட்டான், அணி - 20.
காமபாலன் - [பலராமன்] இராச்சியத்தைமீட்டற்கெண்ணுந் தீமதி கொடியென்றவன், உலூக - 3: வெண்ணிறமுடையவன், உலூக -4: கிருட்-105: தாலகேது, வாசு -17: கண்ணனமுன்னேன், வாசு -18: சங்கவண்ணன், வாசு-19: போர்முடிவளவும் தீர்த்தயாத்திரை சென்றவன், அணி 4.
கிருட்டிணன் - கரியமாமுகிலனையவன், கல்விஞல் வரு கல்முகில் விலக்கியவன், உலூக -2: உற்றவரிடுக்கண்களைபவன், உலூக - 4: உலூகலமுடன் தவழ்ந்தவன், உலூகனைத் தூதுபோக உடன்படுத்தினவன், உலூக-5: துழாயவன், உலூக - 19: கோவியர்குரவைகொண்டவன், வாசு-1; களப்-1: காயமுமுயிருமாகிப் பொருள்தொறும் கலந்துநின்றமாயவன், வாசு-3: அருள்குடியிருக்குங்கண்ணன், வாசு - 7: பந்தனையிலாதான், வாசு-8: உற்பலவண்ணன், வாசு -9: பந்தனையறுக்கும் பாதமுடையோன், வாசு-10: நேமிப்படையோன், வாசு - 11: பாண்டவர் சகாயன், வாசு-13: முடைகமழ் முல்லைமாலைமுடியவன், வாசு - 14: மும்மையுமுணர்ந்தநாதன், வாசு - 17: மருதுபோழ்ந்திட்ட மாயவன், வாசு-18: ஆயிருநாமத்தோன், வாசு - 20: பொதுவர் சிற்குடில் உறைவதோர்மரகதப் புயல், சஞ் - 1: கஞ்சமாமனை வென்றவன், சஞ்-2: நேமியான், சஞ் - 18: குருந்தொசித்தருண் முகில், சஞ்-19: யார்மனத்தும் இருக்குஞ்சோதி, கிருட் - 3: வானன் இருஞ்சமரம்தொலைத்த பிரான், கிருட்-4: சிந்தாதநின் மருப்பொசித்தவன், கிருட்-11: ஞாலமெல்லாம் பூத்தோன், கிரு

மகள் புணர்மணிமார்பன், புன்மையாவும் தீர்த்தோன், கிருட்-12:சிவனது இரத்தலை யொழித்தவன், கிருட்-15, 83: பரந்தாமன், கிருட்-21: முக்காலங்களுமுணர்பவன், முகுந்தன், கிருட் - 22: மூவராயவர்களுக்கும் முதல்வனாகியமூர்த்தி, கிருட் - 23: நீண்டான், நிமலன், கிருட்-24: தீர்த்தன், கிருட் - 26: ஆதிமூர்த்தி, கிருட் -31: அலகை முலைப்பாலுண்டவன், சகடம் விழவுதைத்தவன், கிருட் - 32: பூபாரந்தீர்க்கப் பிறந்தவன், கோபாலன், கோவிந்தன், கிருட் - 34: தன்னைத்தானுணராதவன், கிருட்-36: உலகந்தாய அடியிணையுடையவன், கிருட்-37: பூதேவரும் மாதேவரும் காணு மலரடியோன், கிருட் - 38: தூணிடைவந்தவன்,மூலப்பேரிட்டழைத்த யானைக்கு முன்னின்றவன்,கிருட்-43: நெடுமால், கிருட் - 48: பஞ்சபூதங்களின் வடிவினன், கிருட் - 51: தொல்லைநாயகன், கிருட் - 71: வலம்புரி திகிரிசேர்செங்கையான், கிருட்-73: எல்லாச் செல்வங்கட்கும் நாயகன், கிருட்-74: அமரருக்கு அமுதருளியவன், கிருட்-77: மும்மையாகிய புவனங்களை யருந்தியவன், கிருட் - 81. கேசவன், கிருட்-84, 247: கங்கை திருவடியினின்று பெருகப்பெற்றவன், கிருட் - 91: பலராமனுடன் பிறந்தவன், கிருட்-105: இசைகொள்வேயினன், கிருட்-105: சீதநாண்மலர் மடந்தை கேள்வன், நாதநாயகன், கிருட்-110. வேதநாறுமலருந்தியினன், கிருட்-110. உலகெலாமுதவும் உந்தியான், கிருட்-115: அராவணை துறந்த மாயன், கிருட்-119: துவரைநாதன், கிருட்-125; அவனி வெளவ மனையிலுண்டியை மறுத்தவன்,கிருட்-127. உலகெங்கணும் நீண்டவன், கிருட்-130. மல்லிரண்டினையும் மலைந்த காளமுகில், கிருட்-131: கன்றினால் விளவெறிந்த கள்வன், கிருட்-136: குந்தியின் மருகனவன், கிருட்-148: உற்றவர்க்குறுதி சூழ்வான், கிருட்-158: மிக்குந்தி உறிகடோறும் வெண்ணெயுந்தயிருமுண்டவன், வாக்குந்தி மலரோன், கிருட்-161: அறிவன், கிருட்-181: அடியவர் மனத்திலுள்ள ஆரிருட்கங்குல் தீர்க்கும் நெடியவன், கிருட்-183: அநந்தபோகம்பேரணையிற் பெருந்துயில் துறந்தமால், கிருட்-186: யாதவகுலத்தோர் ஏறு. கிருட்-34:விபுதர்களுக்கரியோன்,கிருட்-196: கருடக்கொடியோன,கிருட்-197: நித்தன், கிருட்-200: பச்சைநிறத்தினன், கிருட்-201, ஆரணன், நரன், கருணாகரன், கமலாசனி காதலன், ஆதிமூலம், நாரணன் எனத்துதிக்கப்படுபவன், கிருட்-209;இதயத்திலிருப்பவன்,ஆதவன், மதிவெங்கனலானவன், சீதவன், கிருட்-210, வாமன், வரதன், கிருட்-212: மூவரும் ஒன்றென நின்றருள் நாதன். கிருட் - 213; தன்னிலுயர்ந்தவர் யாருமில்லாதவன். கிருட்.214: தூதுநடந்த நாயகன், படை - 1 ; காளியனுக்கு இருதாள் நல்கியவன், கம்சன் வில்விழவு காணச் சென்று வில்லிறுத்து நின்றவன், களப்-1. பாண்டவசேனைக்கு உயிர், அணி-16.

**கிருதவன்மா** - யதுகுலத்து இருதிகன்குமாரன்; துரியோதனனுக்குத் துணையாகக்கொடுக்கப்பட்ட யாதவசேனைக்குத் தலைவ

னுகக் கண்ணனால் அனுப்பப் பட்டவன், வாசு-18: அணி-19:

கிருபன்-முதலில் கௌரவபாண்டவர்க்கு வில்வித்தை பயிற்றிய ஆசிரியர், உலூக-15: துரியோதனனுக்காகத் துணைபோக, இவர் சமரதத்தலைவராகப்பிரிக்கப்பட்டவர், அணி - 19.

குந்தி-கன்னனைப் பயந்தகன்னி, கிருட் - 147: குந்திதேசத்தாசன் பெண், கிருட்-161: பெண்மையினுலுயர்ந்தவன், கிருட் - 218: வசுதேவர்க்கு உடன்பிறந்த முறையினள், கிருட்-247: கர்ணனால் சராசரங்களுக்கெல்லாம் தாய் என்னப்பட்டவள், கிருட்-260.

குந்திபோசர்-குந்தியின் சுவீகாரத்தந்தை மரபினர், படை-4.

சகதேவன் - புகலரியவுணர்வுடையவன், கிருட்-30: தெய்வமன்னுன், கிருட்-32: தூயவன், கிருட் - 37: முகூர்த்தம் வல்லோன், முகூர்-2: கிளைஞரை வேறிடாதான், முகூர்-4. பாண்டவசேனைக்குக் கால்போன்றவன், அணி-16.

சகுனி சுபலன் புத்திரன், கிருட்-178: துரியோதனனுக்கு மாமன், கிருட்-180: வஞ்சகச் சூதில் வல்லவன், படை-17: சமரதத்தலைவர், அணி-19.

சஞ்சயன் - கவல்கணன் குமான்: [காவல்கணியெனவும் படுவன்]: திருதராட்டிரனுக்கு மிகவும் இஷ்டனுன நண்பன், குருகுலத்தரசர்க்கு நல்குரு, சஞ் 3: பாண்டவரிடம் தூது போனவன், சஞ்-4.

சதானிகன் - விராடனுடைய உறவினன், படை-4.

சயத்திரதன்- சிந்துதேசத்தாசன்: ஸைந்தவன் எனப்படுவன்: இவன் துரியோதனனின் உடன்பிறந்தவளான துச்சளையின் கணவன், சமரதத் தலைவன், அணி-19.

சராசந்தன் - இடிபோன்றவன்: அவனுக்கு அஞ்சிக் கிருஷ்ணன் துவரையை அரணுகக்கொண்டு வடமதுரையைக் கைவிட்டனன், கிருட்-47.

சல்லியன் - மத்திரதேசத்தாசன்: படை-15: துரியோதனன் வஞ்சனையாக இட்ட விருந்தையுண்டு அவற்கே போர்த்துணைவனுனன், படை-16: சமரதத்தலைவர், அணி-19.

சாத்தகி - பலராமகிருஷ்ணர்க்குத் தம்பி, பலராமனைப் பழித்தவன், உலூக - 4: சமாதானங் கூடாது என்றவன், கிருட்-46, 47.

சிகண்டி-அலிவடிவாகத் துருபதனிடத்துப் பிறந்தவன்: வீடுமனை விண்ணுலகேற்றும் ஆற்றலுடையான், படை-3.

சுவேதன் - விராடனது மூத்த குமாான்: தருமனுல் சேனுபதியாக்கப்பட்டவன, படை - 12. பாண்டவ சேனைக்கு முகம் போன்றவன், அணி-16.

தருமன்-முரசகேதனன், உலூக - 6: 7: அறத்தின் மைந்தன், சஞ்-4, 5: 19: கிருட் - 219: சுகனை நிகர்ப்பவன், சஞ்-9: ராயசூயமகஞ்செயும் வீரமாமுனி, சஞ்-17: அறத்தின் உருவம்போல்வான், கிருட் - 6: கோதிலான், கிருட்-9: புகழேபூண்பான், கிருட்-18: பொறைவேந்தன், கிருட்-25: பாண்டவசேனைக்கு மார்புபோன்றவன், அணி - 16.

திட்டகேது - திட்டத்துய்மன் மகன், படை - 3.

திட்டத்துய்மன்-துருபதன் மகன்: திரௌபதியுடன் ஓமத்தீயினின்றும் தோன்றியவன்: துரோணனைக்கொல்லும் வன்மையுடையவன், படை-3.

திருதராட்டிரன் - கண்ணிலாவரசன், சதுரங்கசேனையினன், உலாக-5: பின்புத்திக்காரன், சஞ்-15: காவுறையும் மனத்தன், இருட்-8: அருளிலி, இருட்-14: அம்பிகையென்பவளின்மகன், இருட்-211; கயம்படு மனத்தன், முகூர்-1.

திரௌபதி - கனலிற்றோன்றியவள், உலாக-18: நீண்டாதகற் புடைய செழுந்திரு, இருட்-24: ஏத்தரிய பெருங்கற்பினள், இருட்-48: பெண்ணீர்மை குன்றாப் பெருந்திரு, இருட்-51

துச்சாதனன்-புயவலியால் மாதை விரிதுகிலுரிந்தவன்,இருட்-175.

துரியோதனன் - [சுயோதனன்] யுதிட்டிரனைச் சூதினால்வென்று பல்லாண்டடிப்படவாண்டவன், உலாக-3: அரவவெங்கொடியோன், உலாக-8: குருகுலத்தவன், உலாக-13: கல்விதாய நெஞ்சிலாதவன், உலாக-14: சித்தசித்துணர்விலாதான், வாசு-7: பராசரன் குலத்தினன், சஞ்-9: பாண்டவரின் உரிமை கவர்ந்தவன், இருட்-14: கோடுகின்ற மொழியவன், இருட்-19: திரௌபதிக்கு மாசளித்தவன், இருட்-45:மல்வரையதோளான், இருட்-55: வலம்புரித்தாரவன், இருட் - 73: முறைமைமாறினவன், இருட்-104: இராசராசன், இருட்-105: பொய்வளர்ந்த மொழிமன்னன், இருட்-120: நாசமுறுபோன், இருட்-134: கடியவன், இருட்-183: நாகவிடம் நிகர்மனத்தினன், இருட்-190: மறலியெனத் தகுபவன், இருட்-191: வஞ்சகன், இருட்-192: கர்ணனுக்குக் கைவருந் துணைவன், இருட்-261: வான் வணங்கினும் வணங்கலாமுடியினன், படை-9: சதமகற்குவமை சாலும் தாணியன், படை-23.

துரியோதனனுக்குத் துணையாய் வந்தவரிற் சிலர் - விந்தன், விந்தன், சோமதத்தன், கௌசிகன், போசன், ஆதிகேகயன், திகத்தபூபன், கவுடராசன், மாளவன், சோழன், சேரன், ஒகநீகன், நாராயணகோபாலர் பதினாயிரவர், பூரிச்ரவசு, கௌரிமா, துச்சாதனன் முதலாய தம்பியர் தொண்ணூற்றொன்பதின்மர், விகத்தசேனன், பகதத்தன் முதலியோராவர்,படை - 17-22: தன்மருடன், திருதவன்மா,சயத்திரதன்,அணி-19.

துருபதன் - பாஞ்சாலராசன், யாகசேனன் எனப்படுவன், திரௌபதியின் தந்தை, படை-3.

துருவாசமுனிவன் - குந்திதேவி கன்னியாயிருந்த காலத்து அவளுக்கு ஐந்துமந்திரம் உபதேசித்துப் புத்திரபாக்கியத்தைப்பெறுமாறு கூறிப்போனவன், இருட்-152, 220.

துரோணன்-வேதியர்கோன், உலாக-7: பாத்துவாசகுமாரன்,உலாக-15: சுருதியா லுயர்ந்தவன், இருட்-100.

துரௌபதர் - [த்ரௌபதேயக்] - திரௌபதியிடம் தோன்றிய ஐவர் மகார்; உபபாண்டவர் எனப்படுவர்: அவர்கள் பெயர் - விந்தன், சோமன், வீரகீர்த்தி, புண்டலன், செயசேனன்,படை - 5.

துவரை - துவாரகை; கண்ணனது இராசதானியான ஊர், உலாக-5: வாசு-3: வைகுண்டநகாம் பூமியில் வந்தது போன்றது, வாசு-7.

நகுலன் - அக்கினியெனத் தக்க திறலுடையன், இருட் - 219: பாண்டவசேனைக்குக் கால்போன்றவன், அணி-16.

பட்டவர்த்தனன் - மகுடவர்த்தனனுக்கு மேற்பட்டவன்: [மகுட

வர்த்தனன்-ஒரு கோடிகிராமம் ஆள்பவன்], கிருட்-103.
பராசரன் - வியாசமுனிவரது தந்தை, சஞ்-9.
பாண்டவர்-தலைகளைந்துபடைத்த பன்னகம் போன்றவர், ஒருவர் இறக்க மற்றை யோரும் இறப்பர்: கிருட்-162: தனித்தனியே வஞ்சினங்கூறிய வர், கிருட்-216: உண்மையி னுயர்ந்தவர், கிருட்-218: கிருஷ்ணனுக்கு மைத்துன ராவர், கிருட்-264: யாமளத் தின்படி காளி முன்னர் பகடா தியாகபலிகளீந்தனர்,களப்-8.
பாண்டு - பஞ்சபாண்டவர்களின் தந்தை, உலூக-10.
புரூரவன் - ஊர்வசியை அவுணர் கவர்ந்திட இந்திரன்பொருட்டு அவருடன் பொருது அவளைச் சிறைமீட்டவன், கிருட்-28.
பூதனை - கண்ணனை முலையூட்டிக் கொல்லவந்த அலகை, சஞ்-1.
மகுடவர்த்தனன் - ஒருகோடி கிராமம் ஆள்பவன்: பட்டவர்த் தனனுக்குக் கீழ்ப்பட்டவன், கிருட்-103.
மந்தேகர் - மந்தேகாருணமென் னும் துவீபத்தில் வாழும் அரக் கர்: இவர்கள் செருக்கிச் சூரி யனை வளைத்து எதிர்த்துப் போகவொட்டாது தடுத்துப் போர் செய்கின்றனர்: அந்த ணர்கள் சந்தியாகாலங்களில் மந்திரபூர்வமாகக் கையிலெ டுத்து விடும் அர்க்கியதீர்த் தங்கள் வச்சிராயுதம் போலாகி அவர்கள்மேல் விழுந்து அவர் களை அப்பால் தள்ளிச் சூரிய னது சஞ்சாரத்துக்குத் தடை யில்லாதபடி செய்கின்றனர்: கிருட்-86, 87.
வராககேது - விராடனுடைய உறவினன், படை-4.
விகன்னன் - துரியோதனன் இளைத்தம்பி: நீதிகளைநன்குணர்ந்து பேசுபவன்:கிருட்-172,174.
விதுரன் - பாண்டவர்பக்கல் மெய் யன்புடையவன், உலூக-7. வில்லில்வல்லவன், உலூக 14. தத்துவஞான மிக்கவன், கிருட்-75: ஞானகஞ்சுகம் உடைய வன், கிருட்-85: நீதிபுனைந்த வன்,கிருட்-106: கண்ணபிரான் தன்னில்லில் இரண்டுதினம் வைகுதற்கு எண்ணிலாத தவ மெய்தினவன், கிருட் - 131. புரையில் கேள்விப்பயன் நுகர்மனத்தினன், கிருட்-147: மா தவத்தின் மிக்கவன்,கிருட்-163. பலராமனுடன் தானும் தீர்த்தயாத்திரை சென்றவன், அணி-5.
விராடன்-மச்சநாட்டார் கோ மான்: சுவேதன், உத்தரன், இருவர்க்கும் தந்தை, படை-4.
விருடசேனன்- கர்ணனது புத்தி ரருள் மூத்தவன், அணி-20.
வீடுமன் - விந்தமனனதோளான், உலூக - 9, கங்காபுத்திரன், உலூக-17: வாசு-2: கிருட்-74: இளையதாய் பயந்த இருதம்பி யர்க்கு வாழ்வும் அரசும் கொ டுத்தவன், கிருட்-117: அசை விலாதவன், கிருட்-138: பாசு ராமனிடம் வில்வித்தை கற்று அவனையே வென்றவன், துரியோதனனால் சேனா பதியாக்கப்பட்டவன், படை-24: பண்ணளி நெருக்கொழிய மாதரிரு கண்ணளிபடாத மீளி, அணி-31.
வீமன்-துரியோதனனை அந்தா சரிதர் கொண்டேகாமல் வெஞ் சிறை மீட்டான், உலூக-18. மாருதி தம்பி, சஞ்-13: பவன குமாரன், கிருட்-17, 219: குரு குலத்தோர் போரேறு, கிருட்-17: பாண்டவசேனைக்குத் தோன் போன்றவன், அணி-16.

# அரும்பதவகராதி முதலியன

அமையாமல்-போதாமல், கிருட்-22
அமையும்-போதும், கிருட்-134
அயம்-குதிரை, அணி-10
அயர்தல் - சோர்வடைதல், கிருட்-122
அயில்-வேல், கிருட்-196, 205
அர்த்தரதர், அணி-3
அரசியல்-அரசாட்சியின் இயல்பு, கிருட்-117
அரம்பை-ரம்பா: ஊர்வசி யென்னுந் தேவமகள்: கிருட்-28
அரவம்-பாம்பு, உலூக-8, ஆரவாரம், கிருட்-8
அரவமின்-உலூபி என்னும் நாக கன்னிகை, படை-12
அரவமின்மகன் - இராவான், படை-12
அரவினம் - பாம்பின் கூட்டம் [அஷ்டமகா நாகங்கள்], சஞ்-14
அரன் - சிவபிரான், கிருட்-132, உருத்திரரூபி, கிருட்-209
அராநிருபன்-ஆதிசேடன், கிருட்-119
அராவணை-ஆதிசேடசயனம், வாசு-1, கிருட்-91
அரி-சூரியன், கிருட்-232
அரியேறு-ஆண்சிங்கம், கிருட்-76
அருக்கன் - சூரியன், கிருட்-184, அணி-33
அருடி - சொல்லியருள்வாய், கிருட்-149 [அருள் + தி]
அருத்தி-விருப்பம், கிருட்-241
அருவி-சிந்தூர அருவி, கிருட்-184
அருள்வெள்ளம்-கருணைப்பெருக்கு, கிருட்-4
அல் இராத்திரி, கிருட்-181
அலகை-பேய்மகள், சஞ்-1
அலங்கல்-மாலை, கிருட், 156,175
அலமரல்-தளரல், கிருட்-238
அலைத்தல்-உதறல், கிருட்-251
அவசம்-வசமிழத்தல், கிருட்-234
அவனி-பூமி, கிருட்-8
அவனிபன், அரசன், சஞ்-19, கிருட்-54
அவாவுதல்-விரும்புதல், கிருட்-112
அவிர்தல்-விளங்குதல், கிருட்-207
அவை-சபை, சஞ்-19, கிருட்-18
அழலுதல்-கோபித்தல், கிருட்-106, 109
அளகை - அளகாபுரி, [குபேரனது] கிருட்-62
அளி-வண்டு, கிருட்-10, அணி-31: கருணை, கிருட்-79: அன்பு, கிருட்-263
அளைந்த-பரவி நிறைந்த, கிருட்-98
அறன்-யமதருமராசன், சஞ்-19
அறன்தருகாளை-யுதிட்டிரன், சஞ்-19
அறிவன்-கண்ணபிரான், கிருட்-181
அறுதி-வரையறை, உலூக-16
அறுதியிடல்-துணிதல், சஞ்-14
அறுவகைப்படைகள், அணி-12
அறை வளி-வீசுகிறகாற்று, அணி-28
அன்பு-பக்தி, கிருட்-39
அன்னநடையரம்பை, கிருட்-28
அன்னமும் மயில்களும்உடன்விளையாடும் வளநாடு, உலூக-11
அனந்தரம்-பின்பு, கிருட்-217
அனிகம்-சேனை, வசு-9
அனிலம்-காற்று, வாயு, கிருட்-51, அணி-25
அனீகினி-சேனை, படை-22, அணி-18
அனுசர்-தம்பிமார், சஞ்-5
ஆகண்டலன் - இந்திரன், கிருட்-231
ஆகமம்-மரம், கிருட்-185
ஆகரன் - இருப்பிடமாகவுள்ளவன், கிருட்-209
ஆசு-குற்றம், கிருட்-66
ஆசுகம்-அஸ்திரம், கிருட்-158
ஆடல்-வெற்றி, கிருட்-136
ஆண்டு-அப்பொழுது, கிருட்-257
ஆதபத்திரம்-குடை, கிருட்-88
ஆதபன்-சூரியன், கிருட்-154
ஆதாரம்-ஆசை, கிருட்-252
ஆதவன் - சூரியசொரூபி, கிருட்-210

ஆநிரை - பசுக்கூட்டம்; உலூக - 19
ஆயிரநாமம் - ஸஹஸ்ரநாமம், கிருட் -213
ஆயோதனம் - போர், கிருட்-226
ஆர்தல்-பொருந்துதல், கிருட்-25, நிறைதல், கிருட் - 71
ஆரணன்-பிரமரூபி, கிருட்-209
ஆலவட்டம் - பெருவிசிறி, கிருட்-101
ஆலோசனைச்சபையில் வரத்தகாதவர்கள், கிருட்-52
ஆவணம்-கடைவீதி, கிருட்-64
ஆவது - நன்மையாகுங் காரியம், கிருட்-142
ஆழி-சக்கரப்படை, வாசு - 15: கடல், கிருட்-1, 226
ஆழியான் - கண்ணபிரான், கிருட்-151
ஆறிருநாமத்தோன் - கண்ணபிரான், வாசு-20
ஆறு-வகை, கிருட்-36
ஆறுவகைச்சேனை, படை-17
ஆனனம்-முகம், அணி-16
ஆறு-நீங்காத, கிருட்-225
இகல்-வலிமை, உலூக - 13, கிருட்-179, பகைமை, கிருட்-35
இகலுதல்-பகைத்தல், கிருட்-99
இசை-ஸ்வரம், கிருட் - 105; கீர்த்தி, கிருட்-130
இசைகொள்வேய், கிருட்-105
இசைக்கும்-உவமவுருபு, கிருட்-69
இசைத்தல் - சொல்லுதல், ஒலித்தல், கிருட்-69
இடத்தல் - (கோட்டாற்) குத்தியெடுத்தல், கிருட்-59
இணை-இரண்டு, கிருட் -37,78,238
இதயத்திண்மை - மனவுறுதி. தைரியம், கிருட்-218
இதயம் கரிது, உலூக-4
இதம்படல்-இனிமை பொருந்தல், கிருட்-95
இந்தனம்-விறகு, கிருட்-146
இந்திரன்கிழக்குத்திக்குப்பாலகன், கிருட்-184

இந்திரன் மலைகளின் சிறகறுத்தமை, கிருட்-195
இந்து-சந்திரன், கிருட்-248
இபம்-யானை, அணி-10
இம்பர்-இவ்வுலகம், கிருட்-137
இமிர்தல்-ஒலித்தல், கிருட்-182
இமைப்பிலார் - தேவர்கள், கிருட்-83
இயந்திரஎகினம் - ஹம்ஸயந்திரம், முகூர்-4
இயம்-வாத்தியம், கிருட்-72
இயல்-தன்மை, கிருட்-167
இயைபுத்தொடை, கிருட்-66
இரட்ட-வீச, கிருட்-54,84
இரட்டி - இரண்டு மடங்கு, கிருட்-181
இரவி-சூரியன், கிருட் - 99, 138, 139
இரவிசிறுவன்-கர்ணன், கிருட்-139
இரவு-இரத்தல், கிருட்-15, 83
இராசமண்டலங்கள்-அரசர் கூட்டங்கள், படை-23
இரு-பெரிய, கிருட்-171,237
இருக்கை-இருப்பிடம், கிருட்-188
இல்-வீடு, கிருட்-107,108
இல்லாதவர்-ஏழை, கிருட்-235
இலக்கு - இலட்சியம், குறி, கிருட்-244
இலஞ்சி-நீர்நிலை, உலூக-11
இவுளி-குதிரை, அணி-7
இளி-இழிவு, கிருட்-123
இளைஞர்-சிறியோர், கிருட்-175
இளைத்தல் - பின்னிடைதல், கிருட்-9,13
இளையாள் - திருமகள்; திரௌபதிக்கு உவமையாகுபெயர், கிருட்-48
இறுத்தல்-தங்குதல், கிருட்-70
இறுதல்-ஒழிதல், கிருட்-192
இன்னே - இப்பொழுதே, கிருட்-234
இனைதல்-சோகித்தல், கிருட்-262
ஈட்டம் - கூட்டம், கிருட்-65
ஈண்டுதல்-கூடுதல், படை-19
ஈர்தல்-அறுத்தல், கிருட்-195

ஈரம்-அன்பு, சஞ்-17
ஈறிலா உலகு - முத்தியுலகம், சஞ்-8
ஈனம்-குறைவு, கிருட்-29
உகண்டு-துள்ளி, கிருட்-94
உகளுதல்-துள்ளுதல், கிருட்-5,23
உகிரிழந்தவெம்புலி, [உகிர்-நகம்], உலூக-17
உகுதல்-பெருகுதல், சஞ்-16
உட்குதல்-அஞ்சுதல், கிருட்-193, அணி-12
உடற்றல் - போர்செய்தல், உலூக-15
உடுபதம் - நக்ஷத்திர மண்டலம், கிருட்-60
உத்தமோசா, படை-3
உத்திரம்-விட்டம், கிருட்-102
உதணம்-அலகில்லா அம்பு; மொட்டம்பு, கிருட்-204
உததி-கடல், சஞ்-3; அணி-30
உதயராகம், கிருட்-185
உதாமன்-யுதாமந்யு, படை-3
உதாரசீலன்-கர்ணன், கிருட்-134
உந்தி-நாபி, கிருட்-110
உந்துதல்-தள்ளுதல், கிருட்-161
உம்பர்-தேவர், கிருட்-57; மேலிடம், தேவலோகம், கிருட்-137
உம்பர்கா - தேவலோகத்துக் கற்பகச்சோலை, கிருட்-157
உம்பர்கா அனைய கையான்-கர்ணன், கிருட்-157
உம்பர்நாயகன் - கண்ணபிரான், கிருட்-57
உய்தல் - பிழைத்துவாழ்தல், கிருட்-33
உய்வு - தப்பிப்பிழைத்தல், கிருட்-162
உயர்வுநவிற்சியணி, கிருட்-58
உயவி-ஆலோசித்து, சஞ்-2
உரகபுங்கவன் - ஆதிசேடன், கிருட்-90
உரகம்-பாம்பு, கிருட்-90
உரகர்-நாகர், படை-21, அணி-6
உரம்-வலிமை, உலூக - 15, கிருட் - 33, 223; மார்பு - வாசு - 11, கிருட் - 196, 20 7
உரவோன் - வலிமையுடையோன் கிருட்-223
உரிதல்-களைதல், கிருட்-24, 28
உரிமை-உரிய இராச்சிய பாகம், கிருட்-111
உருத்தல் - கோபங்கொள்ளல், கிருட்-5
உரும் - இடி, சஞ் - 13-47; கிருட்-115
உருமு துவசன்-இந்திரன்[உருமு-இடி], அணி-28
உருவகவணி, கிருட்-50, 165
'உரைத்தும்' என்னும் உத்தி, கிருட்-108
உரைதவிர்த்தல் -பேச்சை யடக்குதல், கிருட்-53
உலகநவிற்சியணி, கிருட்-80
உலகெலாம் உதவும் உந்தியான்-கண்ணபிரான், கிருட்-115
உலூகம்-குதிரை, உலூக-5
உலூகலம்-உரல், உலூக-5
உலைக்கனலன்ன பிள்ளைகள், சஞ்-3
உவமையணி, உலூக - 17, கிருட்-56, 148, 163, 164, 166
உவர்நிலம்-களர்நிலம், கிருட்-25
உழக்குதல்-கலக்குதல், கிருட்-93
உழி-இடம், கிருட்-172, 245, படை-13
உழை-பக்கம், இடம், சஞ்-14; மான், கிருட்-167
உழைமுதல் எழுப்புவன இசை, அணி-27
உள்-உள்ளிடம்; மனத்திற்கு இடவாகுபெயர், சஞ்-18
உள்ளவர்-செல்வர்கள், கிருட்-235
உள்ளுதல் - தியானித்தல், கிருட்-79
உளம் கருகுதல்-மனம் வெதும்புதல், கிருட்-106
உற்பலம்-கருங்குவளை, வாசு-9
உற்பவம்-சன்மம், பிறப்பு, சஞ்-7
உற்றபகை - மிக்கபகையாளி, கிருட்-127
உறவு-பந்தத்துவம், கிருட்-156

உறவு கூர்தல் - உறவு கொண்டாடுதல், கிருட்-104
உறுகணை - அடைந்துள்ள நாகாஸ்திரம், கிருட்-259
உறுதிகள் - நன்மைதருவன, உலூக-16; கிருட்-17,158,236
உறைதல் - வசித்தல், பொருந்துதல், கிருட்-149
உன்னுதல் - எண்ணுதல், ஆலோசித்தல், கிருட்-108
ஊடு - இடையிலே, சஞ்-16
ஊர்கோள் - மண்டலம், கிருட்-226
ஊர்தி - வாகனம், கிருட்-22
ஊனம் - குற்றம், கிருட்-12
எகினம் - அன்னம், முகூர்-4
எஞ்சுதல் - உயிரொடுங்குதல், கிருட்-3, 216
எடுத்துக்காட்டுவமையணி, கிருட்-122, 171
எண் - அளவு, கிருட்-131, ஆலோசனை, கிருட்-172
எண்குன்றம் - அஷ்டகுலபர்வதங்கள், கிருட்-203
எண்மை - எளியது, கிருட்-246
எதிர்ந்தோர் - போரில் எதிரிட்டவர், கிருட்-23
எதிரெதிர்மயங்கல், கிருட்-63
எதுநாள் - எத்தனைநாள், அணி-31
எயில் - மதில், கிருட்-70
எயினர் - வேடர்கள், கிருட்-171
எரி - அக்கினி தேவன், கிருட்-158
எல் - பகல், கிருட்-179
எழில் - அழகு, வாசு-6, கிருட்-54, 97
எழிலி - மேகம், வாசு-6, சஞ்-13, படை-13
எழு - தூண், அணி-25
எழுந்தருள் - புறப்பட்டுச் செல்வாய், சஞ்-18
எழுபார் - ஏழுதீவுகளாகவுள்ள பூமி; கிருட்-26, அணி-26
எழுபுவி - ஏழுதீவுகளாகவுள்ள பூமி, கிருட்-118
எழுபெயர்க்குலமுகில் - சப்தமேகம், அணி-8
எற்றுதல் - தாக்குதல், கிருட்-68, உதைத்துத் தள்ளுதல், கிருட்-203
என்பு - எலும்பு, கிருட்-197, 250
என்றூ - சூரியன், [எல் - ஒளி] கிருட்-262
எனதாய் - எத்தன்மையதாய், அணி 30
ஏ - அம்பு, கிருட்-122
ஏகாந்தம் - இரகசியமான இடம், கிருட்-255
ஏத்துதல் - புகழ்தல், கிருட்-61
ஏதி - ஆயுதம், அணி-21
ஏதிலார் - அயலார், கிருட்-111
ஏதுத்தற்குறிப்பேற்றவணி, கிருட்-85,183; அணி-29
ஏதுத்தற்குறிப்பேற்றவுவமையணி, கிருட்-89
ஏய்தல் - பொருந்துதல், எழுந்தருளல், கிருட்-105
ஏம்பாகு, சஞ்-11
ஏற்றம் - உயர்வு, கிருட்-254
ஏறு - ஆண்சிங்கம், கிருட்-17,34
ஏனம் - பன்றி, உலூக-1
ஏனல் - தினைப்பயிர், கிருட்-2
ஐந்தலைநாகம், கிருட்-162
ஐயமிலையுவமையணி, கிருட்-62
ஐயவுவமையணி, கிருட்-80
ஐயிருநாமத்தோன் - அருச்சுனன், வாசு-20
ஒசித்தல் - முறித்தல், சஞ் - 19, கிருட்-11
ஒட்டர் - ஒட்டரதேசத்தரசர், படை-6
ஒட்டுதல் - சபதஞ்செய்தல், படை-3
ஒத்துதல் - அழுத்துதல், தாளஅடைவுபடல், கிருட்-201
ஒப்பனை - அலங்காரம், கிருட்-71
ஒல்லை - விரைவு [இடைச்சொல்], கிருட்-215
ஒவ்வுதல் - உடன்பாடாதல், கிருட்-18
ஒழி - துணிவுப்பொருளுணர்த்துவது, கிருட்-40

ஒன்றுதல் - பொருந்துதல், இருட்-40
ஒன்னலர்-பகைவர், சஞ்-16
ஒக்கும்-தகும், இருட்-262
ஓதனம்-அன்னம், இருட்-127
ஓதை-ஓசை, இருட்-168
ஓதையமர்தல் - ஓசையடங்குதல், இருட்-168
ஓம்-அங்கீகாரப் பொருளை யுணர்த்தும் வடமொழியிடைச்சொல், இருட்-40
ஓருமைசார்தல்-பட்சபாதமாதல், சஞ்-14
ஓலை-திருமுகம், படை-14
ஓவல்-ஒழிதல், இருட்-104
ஓவலின்றி-சும்மா இராமல், இருட்-104
ககனம்-ஆகாயம், இருட்-166, 191, 197, அணி-11
கங்குல்-இராத்திரி, இருட்-97
கங்கை திருமாலின் காலினின்று பெருகுதல், இருட்-91
கங்கைநீர்நுரை × நரைத்த வெண்மயிர், இருட்-238
கஞ்சுகம்-கவசம், இருட்-85
கட்டுரை - உறுதிமொழி, உலூக-3; வாசு-19
கடம்-கன்னம்; மதநீருக்கு இடவாகுபெயர், அணி-14
கடலாடை அவனி, இருட்-8
கடவ நாள்- கடமைப்பட்டனவான நாள்கள், இருட்-92
கடவுட்குலவரசன் - இந்திரன், இருட்-230
கடவுதல் - ஏறிச்செலுத்துதல், இருட்-196
கடவுள்-தெய்வத்தன்மை, சஞ்-13; இருட்-15, 138
கடவுளர்-தேவர்கள், இருட்-196
கடன்-கடமை, இருட்-86, 253
கடாவுதல்-செலுத்தல், இருட்-136
கடி-ஒலி, அணி-27
கடிகை-நாழிகை, இருட்-181
கடுங்கதை - கொடிய கதாயுதம், சஞ்-15
கடுப்ப-ஒப்ப, இருட்-58
கடைத்தலை - வாயிற்புறம், இருட்-253
கடைநிலம் - இறுதியிடம், இருட்-18
கடைப்பிடிகரும்ம் - உறுதியாகக் கொண்ட செயல், இருட்-261
கண் - தன்மை, அடிக்கப்படும் இடம், படை-11
கண்களால் அருந்துதல், இருட்-79
கண்சிவத்தல், கோபக்குறி, இருட்-126
கண்பரப்பல்-நன்றாகப் பார்த்தல், இருட்-104
கண்மலர்பரப்புதல் - குளிரப் பார்த்தல், இருட்-75
கண்வளர்தல் - துயிலுதல், இருட்-96
கணம்-கூட்டம், அணி-6
கணிகை-வேசை, இருட்-97
கணிகைமாதர் - வேசைமகளிர், இருட்-165
கணையம்-வளைதடி, இருட்-205
கதம்-உக்கிரம், வலிமை, அணி-23
கதிரவன்-சூரியன், இருட்-153
கதிரைத்திங்கள் ஒன்றிய பகல்-அமாவாசை, முகூர்-4
கதுமென-விரைவாக [இடைச்சொல்], இருட்-12
கதுவுதல்-பற்றுதல், இருட்-146
கந்தடுகளிறு, இருட்-188
கந்தம்-பரிமளம், இருட்-105
கந்து-கட்டுத்தறி, இருட்-82
கமடம்-ஆமை, உலூக-1
கமலாசனி-திருமகள், இருட்-209
கமுகம் × காவணம், இருட்-56
கயம்-கயமை, கீழ்மை, முகூர்-1
கயிரவம்-ஆம்பல்மலர், இருட்-6, செவ்வல்லி, 165
கர்ணனை அர்த்தரதனாகவைத்த தற்குக் காரணம், அணி-20, உரை
கரடம்-மதஜலம், இருட்-122
கரவு-வஞ்சனை, இருட்-8
கரி-சாட்சி, இருட்-224

குரம் - குதிரையின் காற்குளம்பு, அணி-7
குரவர்-பெரியோர், கிருட்-109
குரிசில் - ஆண்பாற்சிறப்புப்பெயர், கிருட்-78, 247; படை-24
குருகுலத்துமுதல்வன் -புரூரவன், கிருட்-28
குருநிலம் - குருக்ஷேத்திரம். கிருட்-120
குரை-ஒலிக்கின்ற, அணி-24
குலகிரி ஏழு, படை-22
குலம்-கூட்டம், கிருட்-116
குவடு-சிகரம், கிருட்-194
குழல்களைதல் - கூந்தலையரிதல்; கூந்தலைக் கூட்டி முடித்தல் எனினுமாம், கிருட்-35
குழிபறித்தல் - பள்ளந்தோண்டுதல், கிருட்-179
குறள்-வாமனவடிவம், உலூக-1
குறித்தல்-சிந்தித்தல், கிருட்-142
குனித்தல்-வளைத்தல், உலூக-16
குனிவு-வளைவு, அணி-9
கூர்தல்-மிகுதல், கிருட்-75
கூனல்-வளைவு, உலூக-1
கெழு-விளங்குகிற, கிருட்-96
கெழுமுதல் - கலந்து ஒருமித்தல், கிருட்-112
கேசரி-ஆண்சிங்கம், கிருட்-84
கேசரித்தவிசு - சிங்காதனம், கிருட்-84
கேசவன் - கண்ணபிரான், கிருட்-84, 247
கேண்மை-அன்பு, கிருட் - 247; சிநேகதருமம் [சமாதான வழி], படை-10 [கிருட்-232
கேண்மோ, மோ-முன்னிலையசை,
கேதனம்-கொடி, உலூக, 6,7,20
கேது-கொடி, வாசு-2
கேவலம்-சிறுமை, கிருட்-26
கேள்வன்-கணவன், கிருட்-110
கேள்விப்பயன்-தத்துவப்பொருள், கிருட்-147
கையமைத்தல் - (போதுமென்று) கையாற்குறிப்புக்காட்டுதல், கிருட்-30
கையறைதல் - கையடித்துத்தரல், கிருட்-122
கைவரல் - பயின்று பழகிவரல், கிருட்-261
கைவழங்குதல் - கைதட்டிக் கொடுத்தல்; சபதம் செய்யுமாறு இது, கிருட்-120
கொங்கை-தனம், கிருட்-252
கொடிநிரைக்கு அலை வரிசையுவமை, கிருட்-61
கொடிப்படை- முன்னணிச்சேனை, அணி-30
கொண்டல்வாகனன் - இந்திரன், கிருட் - 243; [கொண்டல்-மேகம்]
கொந்து - கொத்து [மெலித்தல் விகாரம்], கிருட்-31,156
கொல்லத்தகாதவர் இன்னரெனல், கிருட்-173
கொழு-காறு, கலப்பை முனை. கிருட்-50
கொற்றம்-வெற்றி, கிருட்-82
கோகனதம்-தாமரை, கிருட்-78
கோடு-வளைவு, உலூக-16; சங்கம், கிருட்-78
கோடுதல் - நீதிதவறுதல், மாறுபடுதல், கிருட்-19
கோது-குற்றம், கிருட்-111
கோமளம்-அழகு, கிருட்-102
கோயில்-அரண்மனை, கிருட்-68
கோலம் - வராகம், பன்றி, கிருட் - 59; அழகு, கிருட் - 125, 243
கோலுதல் - வளைதல், அகப்படச்செய்தல், கிருட்-178
கோவியர் - இடைப்பெண்கள், வாசு-1, கிருட்-121
கோவிலங்கு-சிங்கம், கிருட்-122
கோறல் - கொல்லுதல், கிருட் - 173, கொல்லாதே, [எதிர்மறையேவல்], கிருட்-258
சக்கரப்பொருப்பு -சக்கரவாளமலை, கிருட்-60
சகடம்-சகடாசுரன், கிருட்-32
சகோரம் - ஒருபறவை விசேடம்;

